





المملكة العربية السعودية
وزارة الشؤون الإسلامية والأوقاف والدعوة والإرشاد
المكتب التعاوني للدعوة والإرشاد
وتوعية الجاليات بغرب الديرة


# இஸ்லாம் தந்த மனித உரிமைகள்


ஆசிரியர் அஷ்ஷைக் அப்துர்ரஹ்மான்

முஹம்மத் ருஹுல் ஹக்







حقوق الإنسان في الإسلام


مع تحيات المكتب التعاوني للدعوة والإرشاد وتوعية الجاليات بغرب الديرة
هاتف : ٤٣٩١٩٤٢ ناسوخ : ٤٣٩١٨٥١ ص.ب : ١٥٤٤٨٨ الرياض : ١١٧٣٦
حساب رقم : ٤/٩٣٤٠ شركة الراجحي المصرفية فرع سلطانة .

# பொருளடக்கம்

بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ ﴿١﴾

الْحَمْدُ لِلَّهِ رَبِّ الْعَالَمِينَ ﴿٢﴾ الرَّحْمَٰنِ الرَّحِيمِ ﴿٣﴾

مَالِكِ يَوْمِ الدِّينِ ﴿٤﴾ إِيَّاكَ نَعْبُدُ وَإِيَّاكَ

نَسْتَعِينُ ﴿٥﴾ اهْدِنَا الصِّرَاطَ الْمُسْتَقِيمَ ﴿٦﴾

صِرَاطَ الَّذِينَ أَنْعَمْتَ عَلَيْهِمْ غَيْرِ الْمَغْضُوبِ

عَلَيْهِمْ وَلَا الضَّالِّينَ ﴿٧﴾

அருளாளன் அன்புடையோன் அல்லாஹ்வின் பெயரால். சர்வலோகங்களையும் படைத்துப் போஷித்து பரிபக்குவப்படுத்துகின்ற அல்லாஹ்வுக்கே புகழனைத்தும். அவன் அருளாளன்; அன்புடையோன். மறுமை நாளின் அதிபதி.

உன்னையே வணங்குகிறோம். உன்னிடமே உதவி வேண்டுகிறோம்.

எம்மை நேரான வழியில் நடத்துவாயாக. நீ அருள் சொரிந்தவர்களின் வழியில். உன் கோபத்துக்குள்ளானோரின் வழியிலல்ல. வழி தவறியவர்களின் வழியிலும் அல்ல.

# இஸ்லாம்
# தந்த மனித உரிமைகள்

## பீடிகை

மனித உரிமைகளுள் மிகமுக்கியமானவையும் உரிமைகளுக்கு அடிநாதமாகவும் அமைந்துள்ளவை என்று கருதப்படுவன இரண்டு; அவை :-

1. சமத்துவம்
2. சுதந்திரம்.

இவ்விரு அடிப்படை உரிமைகளையும் உலகில் நிலை பெறச் செய்தவர் யார்? என்ற கேள்வியை எழுப்பி விட்டால், இதற்கு பலகோணங்களிலிருந்தும் பதில் கூறப்படுகின்றது. இப்படிப் பதில் கூறுவதில் முண்டியடித்துக்கொண்டு முன்னுக்கு வருகின்றனர் மூவர். ஆம் நமது விரிந்து பரந்த சாம்ராச்சியத்தின் கீழிருந்த பல நாடுகளுக்கு நாமே சுதந்திரம் வழங்கினோம். மனித உரிமைகளை மதித்துத்தான் அப்படிச் செய்தோம் என்கின்றனர் ஆங்கிலேயர்.

மனித உரிமைகளை மதித்தது மாத்திரமல்ல; அவற்றை நிலைநாட்டப் புரட்சி செய்தவர்கள் நாங்களே என்று பெருமையோடு பேசிக்கொள்கின்றனர் பிரெஞ்சு மக்கள்.

மனித உரிமைகளை நிலைநாட்டப் போராடி, சமத்துவத்தைச் சரியான முறையில் செயலில்

காட்டியவர்கள் நாமே என்று மார்தட்டுகின்றனர் பொதுவுடமை வாதிகள்.

இவர்களின் கூற்றுக்களில் எவ்வளவு உண்மை இருக்கிறது என்பதை இங்கே ஆராய்ந்து, எமது சக்திகளைச் செலவிட நாம் இங்கு முனையவில்லை. இவ்வடிப்படை உரிமைகளை மேலே கூறப்பட்டவர் கள் நினைத்துப் பார்க்கக்கூட முடியாத காலத்தி லேயே மனிதனுக்கு அவனுடைய உரிமைகளை உரிய முறையில் கொடுத்த பெருமை இஸ்லாத்துக்கே உரியது என்று கூற முனைகிறோம்.

நாம் இப்படிக் கூறிய மாத்திரத்தில், இதை அப்படியே ஏற்றுக்கொள்ள வாசக நேயர்கள் தயா ரில்லை என்பதை நாம் அறிவோம். நாம் சொன் னதும் அதை வாசகர்கள் நம்பிவிட வேண்டும் என்று நாம் வற்புறுத்தவும் இல்லை. ஆனால், உண் மை விரும்பும் புத்திஜீவிகளின் சிந்தனைக்குச் சில உண்மைகளை முன்வைக்கவே விரும்புகிறோம்.

மனித உரிமைகளின் பெயரால் உலகளாவிய மாநாடுகளும், கருத்தரங்குகளும் நடத்தப்பட்டு, மனித உரிமைச் சாசனங்களும் இயற்றப்படும் இக் கால கட்டத்தில் இதுபற்றி இஸ்லாத்தின் பங்க ளிப்பையும் இஸ்லாத்தைத் தம் வாழ்க்கைத் திட் டமாக மனப்பூர்வமாக ஏற்று வாழ்ந்த மக்களின் பங்களிப்பையும் உண்மையைத் தேடும் நேயர்கள் முன் வைப்பது கடமையென்று கருதுகிறோம்.

ஏனெனில் சத்தியத்தைக் காணவிரும்பும் உள் ளம், அதைக்கண்டு கொண்டால், பிறகு அவ்வுள்

ளத்தை அசத்தியம் ஏமாற்ற முடியாது.

وَقُلْ جَاءَ الْحَقُّ وَزَهَقَ الْبَاطِلُ إِنَّ الْبَاطِلَ كَانَ زَهُوقًا

''சத்தியம் வந்துவிட்டது; அசத்தியம் ஒழிந்துவிட்டது; நிச்சயம் அசத்தியம் ஒழிந்தே தீரும் என்று சொல்வீராக''. (அல்குர்ஆன். 17: 81)

எம் வாசக நேயர்களுக்கு எம் கருத்தைத் தெளிவாகச் சொல்கிறோமேயன்றி எம்கருத்தை அவர்கள் ஏற்றுத்தான் ஆகவேண்டும் என்பதல்ல. ஏனெனில் இவ்விஷயத்தில் உலக முஸ்லிம்கள் பின்பற்றும் கொள்கையை, அல்குர்ஆன் பின்வருமாறு கூறியுள்ளது لَا إِكْرَاهَ فِي الدِّينِ قَد تَّبَيَّنَ الرُّشْدُ مِنَ الْغَيِّ

''சன்மார்க்கத்தில் நிர்ப்பந்தமே இல்லை. ஏனெனில் நேர்வழி வழிகேட்டிலிருந்து தெளிவாகிவிட்டது''. (2: 256)

இஸ்லாமிய வாழ்க்கை முறையைப் பூரணமாகப் போதிக்க அனுப்பப்பட்ட இறுதித்தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களுக்கே அல்லாஹ் இப்படித்தான் கட்டளையிட்டான் : فَإِنَّمَا عَلَيْكَ الْبَلَاغُ الْمُبِينُ

''மிகத் தெளிவாக சன்மார்க்கத்தை எத்திவைப்பதுதான் உமது கடமை.'' (16 : 82)

இஸ்லாம், மனித உரிமைகளை நிலைநாட்டிய வழிமுறைகளை எடுத்துக் கூறும்போது, உலகிற் தோன்றிய ஏனைய கொள்கை கோட்பாடுகள் அல்லது அவற்றைப் பின்பற்றிய மக்கட்கூட்டம் பற்றிய சில அம்சங்களை நாம் குறிப்பிடவேண்டி ஏற்ப

டலாம். இப்படிச் செய்வது, தவிர்க்கமுடியாத ஒப்புநோக்குதலுக்கேயன்றி, வேறு குறுகிய நோக்கங்களுக்காக அல்ல என்பதையும் இங்கே கூறி வைக்கின்றோம்.

இக் கருத்துக்களை மனதிற் பதியவைத்துக் கொண்டு இச்சிறுநூலை வாசிக்க முனைவீர்களாக.

## சமத்துவம்

மனித சமுதாயத்தில் உண்மையான சமத்துவம் நிலவவேண்டுமாயின் அது சமூக, பொருளாதார, அரசியல், நீதிபரிபாலன விவகாரங்கள் யாவற்றிலும் அமுலாக வேண்டும். ஒரு சில துறைகளில் மாத்திரம் அமுலாக்கப்பட்டால் அதை பூரண சமத்துவமாகக் கருத முடியாது.

இந்நான்கு விவகாரங்களிலும் மனிதனுச்கு இஸ்லாம் வழங்கியுள்ள சமத்துவத்தை ஒன்றன் பின் ஒன்றாகக் கவனிப்போம். அப்பொழுதுதான் இஸ்லாம் இவ்வடிப்படை உரிமைகளை மனிதனுக்குக் கொடுப்பதில் எவ்வளவு கரிசனை கொண்டிருக்கிறது என்பதை நாம் உணரமுடியும்

### சமூக வாழ்வில் சமத்துவம்

மக்கள் யாவரும் சமமானவர்களே. ஒருவர் தன் குலத்தாலோ நிறத்தாலோ பணத்தாலோ பட்டங்களாலோ, ஆள்பலத்தாலோ மற்றொருவரை விட உயர்ந்துவிட முடியாது. இறையச்சம், உயர்

பண்பு, சமுதாயத்துக்கும் ஏனைய சிருஷ்டிகளுக்கும் சுபீட்சம் நாடிச்செய்யும் நற்பணி என்பவற்ருலேயே ஒருவர் உயர்ந்தவராகலாம் என்பதுதான் இஸ்லாத்தின் போதனை.

يَاأَيُّهَا النَّاسُ إِنَّا خَلَقْنَاكُم مِّن ذَكَرٍ وَأُنثَىٰ وَجَعَلْنَاكُمْ شُعُوبًا
وَقَبَائِلَ لِتَعَارَفُوا إِنَّ أَكْرَمَكُمْ عِندَ اللَّهِ أَتْقَاكُمْ إِنَّ اللَّهَ عَلِيمٌ خَبِيرٌ

மனிதர்களே, நிச்சயமாக உங்களை ஓர் ஆணிலிருந்தும் ஒரு பெண்ணிலிருந்துமே படைத்தோம். அப்பால் நீங்கள் பரஸ்பரம் அறிந்துகொள்வதற்காக உங்களைக் கிளைகளாகவும் கோத்திரங்களாகவும் ஆக்கினேம். நிச்சயமாக உங்களிற் சிறந்த இறைபக்தனே உங்களில் மேலானவன். மெய்யாக அல்லாஹ் நன்கறிந்தோன்; ஆழ்ந்த ஞானமுடையோன்.'' (49: 13) என்று, பதினுன்கு நூற்றுண்டுகளாக அல்குர்ஆன் கூறிக்கொண்டிருக்கிறது.

அல்குர்ஆன் கூறும் இஸ்லாமிய வாழ்க்கை முறையைத் தமது வாழ்க்கைமூலம் மக்களிடையே நிலைநாட்டிய அல்லாஹ்வின் இறுதித்தூதர் முஹம்மத் (ஸல்) அவர்கள் தங்கள் இறுதி ஹஜ்ஜை நிறைவேற்றும்போது நிகழ்த்திய சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த உபதேசத்தில் பின்வருமாறு கூறினுர்கள் :-

''மக்களே, நிச்சயமாக உங்கள் இறைவன் ஒருவனே, உங்கள் தந்தையும் ஒருவரே; நீங்கள் எல்லோரும் ஆதமின் மக்கள். ஆதம் மண்ணுல் படைக்கப்பட்டவர். அல்லாஹ்வின் மீது பக்தியுடையவரே உங்களில் மேலானவர். அறபியர் மற்

றவர்களை விட மேலானவரல்லர்; மற்றவர்கள் அரே பியரைவிட மேலானவருமல்லர். வெள்ளையர் கறுப் பரைவிடவோ கறுப்பர் வெள்ளையரை விடவோ இறையச்சத்தாலன்றி மற்றெவ்வழியிலும் மேலா னவரல்லர். இதோ, அல்லாஹ்வின் தூதர் என்ற முறையில் என் தூதை அறிவித்துவிட்டேனா? இறைவா! நீயே சாட்சி. இங்கு குழுமியிருக்கும் மக்களே எனது இவ்வுபதேசத்தைக் கேட்டுக் கொண்டிருக்கும் நீங்கள் இங்கு வராதவர்க்கும் இவ்வுபதேசத்தை அறிவித்துவிடுங்கள்!''

அல்குர்ஆனின் மேலே கூறப்பட்ட பிரகடனமும், முஹம்மத் (ஸல்) அவர்களின் போதனையும் வெறும் தத்துவங்களாக மாத்திரம் இருந்துவிட்டு மாய்ந்து போகவில்லை. இவை மனித சமுதாயத்தில் அன்று தலைவிரித்தாடிய குலபேதம், நிறபேதம், வர்க்க பேதம் முதலான பீடைகளை முளையோடு கிள்ளி யெறிந்தன. தீய பண்புகளைவிட்டு மிகவும் தூர மான ஒரு பண்பட்ட சமுதாயத்தை இம்மண்ணு லகில் உருவாக்கிவிட்டன. அழிவுப் பாதையில் அதிவிரைவாக ஓடிக் கொண்டிருந்த மக்களுக்கு, போரும் பொல்லாங்கும் போட்டியும் பூசலும் இல்லாத எல்லோரும் ஏகஇறைவனின் அடியார் கள் எல்லோரும் இப்பூவுலகில் மன்னர்கள் என்ற பூரித்த மனங்களோடு வாழக்கூடிய ஒரு சூழலை உருவாக்கிய பெருமை அல்குர்ஆனும் முஹம்மத் (ஸல்) அவர்களும் காட்டித் தந்த இஸ்லாமிய வாழ்க்கை முறைக்கே உண்டு.

وَاذْكُرُوا نِعْمَتَ اللَّهِ عَلَيْكُمْ إِذْ كُنتُمْ أَعْدَاءً فَأَلَّفَ بَيْنَ قُلُوبِكُمْ

فَأَصْبَحْتُم بِنِعْمَتِهِۦٓ إِخْوَٰنًا وَكُنتُمْ عَلَىٰ شَفَا حُفْرَةٍ مِّنَ ٱلنَّارِ فَأَنقَذَكُم
مِّنْهَا ۗ كَذَٰلِكَ يُبَيِّنُ ٱللَّهُ لَكُمْ ءَايَٰتِهِۦ لَعَلَّكُمْ تَهْتَدُونَ

''உங்கள்மீது அல்லாஹ் புரிந்திருக்கும் அருளை நினைத்துப் பாருங்கள். நீங்கள் விரோதிகளாயிருந்தீர்கள்; அவன் உங்கள் இதயங்களுக்குள் அன்பையூட்டி ஒன்றுசேர்த்தான். எனவே, அவனுடைய அருளால் நீங்கள் சகோதரர்களாகி விட்டீர்கள். அதற்கு முன்பு நீங்கள் நெருப்புக் கிடங்கின் விளிம்பில் இருந்தீர்கள், அதிலிருந்து அவன் உங்களைக் காப்பாற்றினான். நீங்கள் நேர்வழி பெறுவதற்காக அல்லாஹ் தன் வசனங்களை இவ்வாறு தெளிவு படுத்துகின்றான்.'' (3: 103)

இப்படி சமத்துவத்தை வளர்த்துக் கொண்ட அன்றைய முஸ்லிம் சமுதாயத்தில் இந்த சமத்துவம் உயிரோட்டமுள்ள ஓர் அடிப்படைப் பண்பாக செயல்பட்டு வந்தது என்ற உண்மையை உணர்த்தும் சம்பவங்கள் சரித்திர ஏடுகளில் ஏராளமாகக் காணலாம். அவற்றையெல்லாம் இச்சிறுநூலிற் குறிப்பிட முடியாது ஆயினும் எடுத்துக்காட்டாக சில நிகழ்ச்சிகளை முன்வைக்கிறோம்.

ஒருமுறை நபி முஹம்மத் (ஸல்) அவர்களின் சந்நிதானத்தில் அபூதர்ரில் கிபாரி (றளி) அவர்களுக்கும் அபீஸீனியாவைச் சேர்ந்த ஒரு கறுத்த அடிமைக்குமிடையில் வாக்குவாதம் ஏற்பட்டது. தர்க்கம் சூடுபிடித்து முற்றியது. இருவருக்கும் கோபம் மேலிட்டது. கோபத்தால் நிதானமிழந்த அபூதர் (றளி) அவர்கள் தன் பிரதிவாதியைப் பார்த்து ஏ, கறுப்பியின் மகனே! என்று கூறிவிட்

டார்கள். இதைக்கேட்ட நபி (ஸல்) அவர்கள், ''பேச்சு எல்லைமீறிவிட்டது! இறைபக்தியாலன்றி கறுத்த பெண்ணின் மகனைவிட வெள்ளைப் பெண்ணின் மகனுக்கு எவ்வித சிறப்பும் இல்லை!'' எனக் கூறி தோழர் அபூதர் அவர்களைக் கண்டித்தார்கள். கோபத்தின் காரணமாகத் தம் நிதானத்தை இழந்திருந்த அபூதர் (றளி) அவர்களுக்கு நபி (ஸல்) அவர்களின் இவ்வெச்சரிக்கை பெரும் மனத்தாக்கத்தைக் கொடுத்தது. தாம் செய்த தவறை உணர்ந்து மனம் வெதும்பினார்கள். உடனே நிலத்தில் தமது கன்னத்தை வைத்துப்படுத்துக் கொண்டு நான் செய்த இந்தத் தவறுக்காக உமது காலால் என் கன்னத்தில் உதைப்பீராக என்று அவ்வடிமையிடம் கூறினார்கள்.

இந்த சம்பவத்தைக் கவனிப்போம். அல்லாஹ்வின் தூதரின் முன்னிலையில் ஓர் அடிமையும் தன் உரிமைக்காக மற்றவர்களுடன் சமமாகப் போராடக்கூடிய ஒரு சமூகஅமைப்பு அன்று, அதாவது 14நூற்றாண்டுகளுக்கு முன்பே உருவாக்கப் பட்டு விட்டது என்பதை நாம் காண்கிறோம். ஆனால், இன்று உலகில் அடிமைகள் இல்லையென்று கூறுகிறோம். சாதாரண ஒரு மனிதன் தன் எஜமானிடம் அல்ல சில பெரிய மனிதர்களிடம் இப்படி வாதாடினால், என்ன விளைவு ஏற்படும்.

சமூக அமைப்பில் இரண்டறக்கலந்தவை சமய விவகாரங்கள். வணக்கங்கள் எல்லா சமயத்தவர்க்கும் உண்டு. இஸ்லாமிய வாழ்க்கை முறையில் பல்வகை வணக்கங்கள் பின்னிப் பிணைந்

துள்ளன. அவற்றிற் பிரதானமானது தொழுகை. இத்தொழுகையை நிறைவேற்ற ஒன்றுசேரும் முஸ் லிம்கள் எல்லோரும் சமமாகவே நிற்கின்றனர். எல்லோரும் அல்லாஹ்வின் அடியார்கள் என்ற உணர்வோடு அவனுக்கு நன்றிக்கடன் செலுத்த அவன் விதித்த கடமையை நிறைவேற்றுகிறோம் என்ற எண்ணத்தோடு எல்லோரும் வல்ல அல் லாஹ்வின் சந்நிதியில் சமமாக நிற்கின்றனர். இங்கே அரசன்–ஆண்டி, தொண்டமான்–தோட்டி, முதலாளி–தொழிலாளி, ஏழை–பணக்காரன், கறுப் பர்–வெள்ளையர், மேல்நாட்டான்–கீழ்நாட்டான். உயர்குலத்தோன்–இழிகுலத்தோன் என்பன போன்ற எவ்வித பாகுபாடும் இல்லை. எல்லோரும் தோளோடு தோள்சேர நிற்கவேண்டும். மாமன் னரோ மேன்மகனே மகானுபாவரோ, மாமேதை யோ அல்லாஹ்வின் அன்புக்கு உரிய வலீயோ, ஷெய்கோ பக்கத்தில் நின்று தொழுகின்றாரே சற்று அகன்று நின்று அவர்களுக்கு மரியாதை கொடுப் போமே என்று எண்ணியேனும் தொழுகையின் வரிசையில் இடம்விட்டு நிற்கக்கூடாது என்பது தான் இஸ்லாமியப் போதனை. எந்தப்பெரிய மகா னுயிருப்பினும் அவருக்காக தொழுகையின் அணி யில் இடம்விடாமல் முதலில் வந்துசேர்ந்தவர் முன் வரிசையில் நிற்க உரிமையுண்டு.

பள்ளியிலோ மற்ற வணக்கத்தலங்களிலோ, மேன்மக்களுக்கு முன்வரிசை அல்லது முதலிடம் என்ற பேச்சுக்கு இடமில்லை. முன் வரிசையில் அமர்ந்துகொள்ள வேண்டுமானால் அவர் அங்கே மற்றவர் வந்து அமருமுன் வந்து அமரலாம். தொழுகைக்காக அமர்ந்துள்ள கூட்டத்தில் முன்

வரிசையில் அமர்வதற்காக ஏற்கெனவே அமர்ந் துள்ளவர்களின் பிடரிகளைத் தாண்டிச்செல்வதை முஹம்மத் (ஸல்) அவர்கள் கண்டித்துள்ளார்கள்.

ஆண்களும் பெண்களும் சேர்ந்து கூட்டுத் தொழுகை நிறைவேற்றும்போது ஆண்கள் யாவரும் முன்வரிசையிலும் அடுத்தவரிசைகளில் சிறு பிள்ளைகளும் அப்பால் பின்வரிசைகளில் பெண்களும் நின்று ஒரே இமாமைப் பின்பற்றித் தொழுமாறு இஸ்லாம் கூறியிருப்பது ஒழுக்கத்துக்கு முக்கியத்துவம் கொடுக்கப்படுதலேயாகும். அன்றி சிலர் நினைப்பதுபோல பெண்களின் அந்தஸ்த்தைக் குறைப்பதற்காக அல்ல. ஏனெனில் பண்பாட்டைப் பேணாத சமத்துவத்திற்கு இஸ்லாம் ஊக்கமளிப்பதில்லை.

## நீதிபரிபாலனத்தில் சமத்துவம்

நீதியின் முன், சட்டத்தின் முன் சகலரையும் சமமாகவே நடத்தவேண்டும் என்பது இஸ்லாத்தின் போதனையாகும். இவ்விஷயத்திலும் மக்களுக்கிடையே எவ்வித ஏற்றத் தாழ்வையும் இஸ்லாம் அனுமதிக்கவில்லை.

நீதி பரிபாலனத்தில் எவ்வித அதிகாரமும் தலையிட வாய்ப்பின்றி அது ஆட்சியதிகாரத்திலிருந்து பிரிந்து சுதந்திரமாக இயங்க வழிவகுத்த பெருமை இஸ்லாத்தையே சாரும். இக்கூற்றுக்கு சரித்திரமே போதிய சான்றாகும்.

وَأَنزَلْنَآ إِلَيْكَ ٱلْكِتَٰبَ بِٱلْحَقِّ مُصَدِّقًا لِّمَا بَيْنَ يَدَيْهِ مِنَ ٱلْكِتَٰبِ وَمُهَيْمِنًا عَلَيْهِ
فَٱحْكُم بَيْنَهُم بِمَآ أَنزَلَ ٱللَّهُ وَلَا تَتَّبِعْ أَهْوَآءَهُمْ عَمَّا جَآءَكَ مِنَ ٱلْحَقِّ

''(நபியே!) இவ்வேதத்தை உண்மையைக்கொண்டு உம்மீது இறக்கினோம். இது தனக்கு முன்னுள்ள வேதங்களை உண்மையாக்குவதுடன் அவற்றுக்குப் பாதுகாப்பாகவும் அமைந்துள்ளது. ஆகவே (நபியே) உமக்கு அல்லாஹ் அருளிய வேதத்தைக் கொண்டே தீர்ப்புக்கூறுவீராக. உமக்கு வந்துள்ள உண்மையைப் புறக்கணித்துவிட்டு அவர்களின் விருப்பங்களைப் பின்பற்றாதீர்.'' (5:48)

وَإِنْ حَكَمْتَ فَاحْكُم بَيْنَهُم بِالْقِسْطِ إِنَّ اللَّهَ يُحِبُّ الْمُقْسِطِينَ

நீர் தீர்ப்பளித்தால் அவர்களுக்கிடையே நியாயமாகவே தீர்ப்பளியும். நிச்சயமாக அல்லாஹ் நீதிவான்களையே நேசிக்கின்றான்.'' (5:42)

இறுதித்தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களின் காலத்தில் ஒரு பெண் சில நகைகளைத் திருடிவிட்டாள். திருட்டு நிரூபிக்கப்பட்டது. திருட்டுக்கு இஸ்லாம் விதிக்கும் தண்டனை திருடியவரின் கையை வெட்டிவிடுவதுதான். எனவே அந்தப் பெண்ணின்கையும் வெட்டப்படும் என்பதை ஸஹாபாக்கள் உணர்ந்துகொண்டனர். திருடிய பெண்ணின் பெயர் பாத்திமா. இந்த பாத்திமாவுக்கு இரக்கம் காட்டி மன்னித்துவிடுமாறு நபி (ஸல்) அவர்களை வேண்டிக்கொள்வதற்காக அவர்களிடம் உஸாமா பின் ஸைத் என்னும் தோழர் வந்து மிக அனுதாபத்தோடு விஷயத்தை ஆரம்பித்தார்கள். ஆனால் அல்லாஹ்வின் தூதர் தமது தோழரின் சிபார்சுக்காக சட்டத்தைத் தளர்த்தவில்லை ''அல்லாஹ்வின் கட்டளையை நிறைவேற்றுவதில் நீர் சிபார்சு செய்யத்துணிந்து விட்டீரா!'' என்று எச்சரிக்கை செய்து தோழரை

அனுப்பிவிட்டு, தம்தோழர்களையெல்லாம் அழைத்து, ''வலியவர் திருடினால் அவரை விட்டு, விட்டு எளியவர் திருடினால் அவரைத் தண்டிக்கும் தீய பண்புதான் உங்களுக்கு முன்பு வாழ்ந்த சமூகங்களை அழித்தது. அல்லாஹ்வின் மீது ஆணையிட்டுக் கூறுகிறேன்; என் அருமை மகள் பாத்திமா திருடினாலும் நிச்சயம் அவளுடைய கையை வெட்டுவேன்'' என்று கூறினார்கள்.

இஸ்லாம் கூறும் நீதி பரிபாலனத்தை அணுவும் வழுவாது பின்பற்றி ஆட்சி செலுத்திய உத்தமத் தோழர் வரிசையில் முதலிடம் வகிக்கும் கலீபா உமர் (றளி) அவர்களை நீதித்துறை வரலாறு என்றுமே மறக்க முடியாது. இவர்கள் முஸ்லிம் உலகின் கலீபாவாகப் பதவியேற்றபோது பின்வருமாறு பிரகடனம் செய்தார்கள்:

''மக்களே, அல்லாஹ்வின் மீது ஆணையிட்டுக் கூறுகிறேன்; என்னிடம் உங்களில் எவரும் எவ்விதத்திலும் மற்றவரைவிடப் பலசாலியல்லர்; பலவீனரும் அல்லர். எல்லார்க்கும் நீதி நிலைநாட்டுவேன். எவர்க்கும் நியாயம் வழங்குவேன்.''

நாம் இன்று எத்தனையோ சொல்வீரர்களைக் காண்கின்றோம். அப்படித்தான் உமர் (றளி) அவர்களும் ஆட்சியைப் பொறுப்பேற்கும் போது அழகாகப் பேசிவிட்டு அப்பால் எல்லாம் ஊழல் மயமாக இருந்திருக்கும் என்று எவரும் நினைக்க சரித்திரம் இடமளிக்கவில்லை. அவர்களின் நீதி வழுவா ஆட்சி முறையின் பயனாக, இன்று 'நீதிக்கு ஓர் உமர்' என்று உலகமே கூறுகிறது.

இதோ உமர் (றளி) அவர்கள் தமது அதிகாரி களில் ஒருவராயிருந்த அபூமூஸல் அஷ்அரீ (றளி) அவர்களுக்கு எழுதிய கடிதம்:

''அல்லாஹ்வின் அடியான், விசுவாசிகளின் தலைவன் உமரிடமிருந்து அப்துல்லாஹ் பின் கைஸ் அவர்களுக்கு,

அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மத்துல்லாஹ்,

உண்மை புரளாது நீதி வழங்குதல் தெளிவான கடமையும், அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் காட்டிய முன்மாதிரியுமாகும். எனவே உம்மிடம் முறையீடுகள் வந்தால் அவற்றை நன்கு விசாரிக் கவும். விஷயம் நன்கு தெளிவாகிவிட்டால் நீதி யைச் செலுத்துவீராக. ஏனெனில் பேச்சில் மாத் திரம் நீதி செலுத்தல் பயன் தராது. நீதிமன் றத்திலும் உம்முடைய சபைகளிலும் மக்களைச் சமமாய் நடத்துவீராக. அப்பொழுதுதான் தமக் குச் சாதகமாக தீர்ப்புக் கிடைக்கும் என்ற வலி யோரின் மமதையும், எமக்கு எங்கே நீதி கிடைக்கப் போகிறது! என்ற எளியவரின் அச்சமும் சமூகத் திலிருந்து நீங்கும்.''

தமக்குப் பிறகு கலீபா பதவி வகிக்கத் தெரிவு செய்யப்படவிருந்த நண்பர்களுக்கு உமர் (றளி) அவர்கள் கூறிய புத்திமதி பின்வருமாறு:

''மக்களை எப்பொழுதும் சமமாக நடத்துங் கள். உண்மையை நிலைநாட்டுவதில் எவரையும் பொருட்படுத்தவேண்டாம். இவ்விஷயத்தில் எவ ரின் தூற்றுதலுக்கும் அஞ்சவேண்டாம். அல்லாஹ் உமக்களிக்கும் அதிகாரத்தில் எவர்க்கும் சார்பா

கவோ பட்சபாதமாகவோ நடக்கவேண்டாம்''.

சொல்லிலும் எழுத்திலும் மாத்திரமல்ல செயலிலும் வீரர்களான இவர்கள் தம் அன்றாட வாழ்விலும் நீதிக்கு மதிப்பளித்து வாழ்ந்தார்கள்.

கலீபா உமர் (றளி) அவர்களின் முன் ஒரு வழக்கு தாக்கல் செய்யப்பட்டது. வழக்காளி ஒரு யூதர். எதிராளி முஹம்மத்(ஸல்) அவர்களின் அருமை மருமகன் அலீ(றளி) அவர்கள். இருவரும் விசாரணைக்காக கலீபாவிடம் அழைக்கப்பட்டார்கள். கலீபா அவர்கள், வழக்காளியின் இயற்பெயரைச் சொல்லியும் எதிராளியான அலீ (றளி) அவர்களை அவர்களின் கௌரவப்பெயரான அபுல் ஹஸன் (ஹசனின் தந்தை) என்று பெயரைச் சொல்லியும் வழமைபோல் அழைத்தார்கள்.[1]

1. ஆண்களின் பெயர்களையோ பெண்களின் பெயர்களையோ குறிப்பிடாமல் அவர்களின் பிள்ளைகளின் பெயரை இணைத்துக் குறிப்பிடுவது ஒரு மரியாதைக்குரிய முறையாக முஸ்லிம்களிடையே இன்றும் கருதப்படுகிறது. அலீ என்று குறிப்பிடாமல் அவர்களின் மகன் ஹஸனின் தந்தை எனும் பொருள்பட அபுல்ஹஸன் என்று குறிப்பிடுவது. இந்த கௌரவமான பழக்கம் இன்றும் முஸ்லிம் பெண்களிடம் நாம் காணலாம். இவர்கள் தம் கணவரின் பெயர்களைக் குறிப்பிடாமல் தம் பிள்ளைகளில் ஒருவரின் தந்தையென்று (உதாரணமாக தம் கணவர் சொன்னார் என்று சொல்ல விரும்பும் மனைவி தங்கள் மகன் கரீமின் தந்தை எங்கள் கரீமின் வாப்பா சொன்னார் என்று சொல்வதுண்டு. இது ஒரு மரியாதைப் பண்புதான். ஆனால் இதைப் புரிந்து கொள்ள முடியாமல் தங்கள் பிள்ளைகளுக்கு அபுல்ஹஸன் அபூமூஸா, அபூஸாலிஹ், உம்முஹானி உம்முகுல்தூம் என்று பெயரிடும் பெற்றோரை நம்நாட்டில் பார்க்கிறோம். இந்த

நிலைமையைத் தெரியாத அறபிகள் எங்கள் நாட்டு அபூஸா லிஹ் என்பவரிடம் ''உங்களுக்கு ஸாலிஹ் என்றொரு மகன் இருக்கிறாரா ?'' என்று விசாரித்ததும் உண்டு.

தம் கணவனின் பெயரைக் குறிப்பிடுவது மரியாதையான பண்பல்ல என்பதற்காக 'பிள்ளையின் தந்தை' என்று பாரம் பரியமாகப் பேசிவந்த தாய்க்குலத்திற் சிலர் கணவனின் பெயரை மனைவி சொல்வது பெருங்குற்றம் என்று நம்பியுள்ள னர். எனவே உயிர்போகும் தறுவாயிலும் இத்தகைய பெண் கள் தங்கள் கணவரின் பெயர்களைத் தம் வாய்திறந்து சொல் லப் பயப்படுகின்றனர். இத்தகைய பெண்கள் இவ்வரிய பண் பைப் பிழையாகப் புரிந்து கொண்டார்கள் என்று தான் கூற வேண்டும். இங்கே ஒரு சம்பவம் என்நினைவுக்கு வருகின்றது : 20 ஆண்டுகளுக்கு முன்பு ஒரு முஸ்லிம் பாடசாலையில் ஆசிரி யனாகக் கடமையாற்றிக் கொண்டிருந்தேன். என்வகுப்பிலி ருந்த சின்னஞ்சிறு மாணவர்களிடம் அவர்களின் பெயர்களைக் கேட்டால், அனேகமாணவர் தங்கள் பெற்றோர் செல்லமாக வைத்துக்கொண்டு அழைத்துக் கொண்டிருந்த பெயர்களைத் தான் சொல்கிறார்கள். தங்கள் பதிவுப்பெயர்களைச் சொல்ல அவர்களால் முடியவில்லை. இந்த நிலையில் இவர்கள் தந்தை யரின் பெயரை இவர்களால் சொல்லமுடியுமா! இவர்களின் தந் தையரின் பெயரைத் தெரிந்து கொள்ளவேண்டிய தேவை எமக் கிருந்தது. எனவே அடுத்தநாள் பாடசாலைக்கு வரும்போது தங்கள் தந்தையரை அல்லது அன்னையரைக் கூட்டிக்கொண்டு வாருங்கள் என்று அச்சிறு குழந்தைகளிடம் அன்பாகச் சொல்லி யனுப்பினோம். மறுநாள் அக்குழந்தைகளுடன் தந்தையரும் தந்தை வரவசதியில்லாத காரணத்தினால் சில தாய்மார்களும் வந்தார்கள். அவர்களின் உதவியோடு வகுப்பிலிருந்த குழந் தைகளின் பெயர்களையும் அவர்களின் தந்தையர் பெயர்களை யும் கண்டு சேர்வுப்பதிவுப் புத்தகத்திலுள்ள விபரங்களோடு சரிபார்த்துக் கொண்டிருந்தோம். இப்படி வந்திருந்த ஒரு தாயிடம் உங்கள் பிள்ளையின் பெயரென்ன? என்று கேட் டோம். அவ்வளவுதான் அந்தத்தாய் திடீரென்று வகுப்புக்கு வெளியே ஓடிவிட்டாள். எமக்கு ஒன்றுமே புரியவில்லை. ஏன் இந்தப்பெண் திடீரென்று போய்விட்டாள்; இவருக்கு ஏதும் மனம்நோகப் பேசிவிட்டோமா? அல்லது பெற்றோர்

இதைக்கேட்ட அலீ (றளி) அவர்களின் முகத்தில் கோபக்குறி தென்பட்டது. உடனே உமர் (றளி) அவர்கள் ''ஏன், உமது வாதியாய் நிற்கும் யூதரையும் உம்மையும் இந்த நீதிமன்றத்தில் சமமாய் நிறுத்தியமைக்காக நீர் கோபம் கொள்கிறீரா? என்றார்கள். ''இல்லை, இல்லை; நீர் எம்மிருவரையும் சம

---

கள் ஏதும் சொல்லிவிட்டார்களா? என்றெல்லாம் சிந்தனை செய்து பார்த்தோம். இப்படி நாம் திகைப்பில் ஆழ்ந்திருந்த போது எமது பாடசாலையில் ஐந்தாம் வகுப்பில் கற்றுக் கொண்டிருந்த தன்மகனைக் கையில் பிடித்துக்கொண்டு அந்தத்தாய் எங்கள் வகுப்பிற்குள் வந்தார். ''மகன் மாஸ்டருக்கு வாப்பாட பேரைச் சொல்லுங்க'' என்று அந்த மாணவனிடம் சொன்னார். இதைக்கேட்ட நாம், ''அந்தப்பெயரை நீங்களே சொல்லியிருக்கலாமே படித்துக்கொண்டிருந்த இந்த மகனை அழைத்து வரவேண்டியதில்லையே'' என்றோம். அவ்வளவுதான், ''என்ன மாஸ்டர் நீங்க இவ்வளவு படிச்ச இஸ்லாமான மாஸ்டர் இப்படி கேக்கிறீங்க. புருஷன் பெயரைச் சொல்லலாமா. அந்தப் பாவத்தை நாங்கள் செய்யமாட்டோம்.'' என்று மிகவும் துணிவோடு பதில் கூறினார் அந்த முஸ்லிம் தாய். என்றாலும் நிதானமிழக்காமல் அந்தத் தாயாருக்கு ஆறுதல் கூறி இந்தப்பழக்கத்தின் உண்மைநிலையை விளக்கினோம். ஆயினும் அந்தத்தாய் தன் பழக்கதோஷத்தை விடத் தயாராயிருக்கவில்லை.

இப்படி நாம் குறிப்பிடும்போது எம்மை எவரும் பிழையாகப் புரிந்துகொள்ள வேண்டாம். மேனாட்டவரின் வெட்கங்கெட்ட ஐரோப்பியப் பழக்கத்தை நாம் சரியென்று கூறவில்லை. ஒருபெண் தன் கணவனின் பெயரை எடுத்ததுக்கெல்லாம் மொட்டையாகக் குறிப்பிடுவதையும் அவரைப் பெயர் குறிப்பிட்டு அடிக்கடி அழைப்பதையும் நல்ல பண்பட்ட பழக்கமல்ல என்பதை நாம் மாத்திரமல்ல கீழைத் தேச நாகரீகங்களே ஏற்றுக் கொண்ட உண்மையாகும். எமக்கு எமது இஸ்லாமியப் பண்பாடுதரும் நாகரீகம் உலக முடிவுவரை நாம் தலைநிமிர்ந்து நிற்கப்போதுமானது.

மாக நடத்தவில்லை; அவரை அவருடைய இயற்பெயரைக் குறித்தும் என்னை என் சிறப்புப்பெயர் குறித்தும் அழைத்தீரே. அதற்காகத்தான் கோபிக்கிறேன்'' என்று அலீ (றளி) அவர்கள் பதில் கூறினார்கள்.

இவ்வளவு சின்னஞ்சிறு தவறையும் மிக்க நுணுக்கமாகக் கண்டு அவற்றைத் திருத்திக் கொள்ளும்படி நாடாளும் கலீபாவுக்கே எச்சரிக்கை விடுக்கும் அளவுக்கு நீதிபரிபாலனத்தில் சமத்துவம் நிலவியது இந்த இருபதாம் நூற்றாண்டில் அல்ல; பதின்மூன்று நூற்றாண்டுகளுக்கு முன்பு! கலீபா உமர் (றளி) அவர்களின் நீதிக்கு மற்றொரு உதாரணத்தை உங்கள் முன்வைக்கிறோம் :

எகிப்து நாடு இஸ்லாமிய சாம்ராச்சியத்தில் ஒருபகுதியாக மாறியபோது அங்கே மாகாண அதிபதியாக அம்றுப்னுல் ஆஸ் (ரளி) அவர்கள் நியமிக்கப்பட்டார்கள். ஒருநாள் அம்றுப்னுல் ஆஸ் அவர்களின் இளம்மகனும் சமவயதுடைய ஓர் ஏழைச் சிறுவனும் குதிரை ஓட்டத்தில் போட்டியிட்டு ஏழைச் சிறுவன் வென்றுவிட்டான். தோல்வியுற்ற மாகாணாதிபதியின் மகனுக்கு வெட்கமும் கோபமும் தாங்க முடியவில்லை. தன் கையிலிருந்த சாட்டையால் ஏழைச்சிறுவனின முதுகில் பளீர் பளீர் என்று அடித்துவிட்டான்.

அநியாயமாய் அடிபட்ட அச்சிறுவன் ''இந்த அநியாயத்தை நான் அமீருல் முஃமினீன் உமர் (றளி) அவர்களிடம் முறையிட்டே தீருவேன்'' என்று அழுதான். இதைக்கேட்ட அதிபதியின் மகன் ''நீ

போய் முறையிடு; அதனுல் என்ன நடக்கப் போகிறது? நான் இந்த தேசாதிபதியின் மகன் என்பது உனக்குத் தெரியாதா?'' என்ருன்.

விஷயம் இத்துடன் நின்றுவிடவில்லை. அவ்வருடம் ஹஜ் யாத்திரையின் போது கலீபா உமர் (றளி) அவர்களும் சில சகாக்களும் ஓரிடத்தில் அமர்ந்திருந்தார்கள். எகிப்துநாட்டு அதிபதி அம்றுப்னுல் ஆஸ் அவர்களும் மகனும் அங்கே அமர்ந்திருந்தார்கள். அவ்வமயம் அன்று அடிபட்ட சிறுவன், கலீபா உமர் (றளி) அவர்களிடம் வந்து தனக்கு அடித்த சிறுவனைச் சுட்டிக்காட்டிக் கொண்டு, ''அமீருல் முஃமினீன் அவர்களே, இவர் என்னை அநியாயமாக அடித்துவிட்டார்'' என்று அன்று எகிப்தில் நடந்த சம்பவத்தை விபரமாகக் கூறினன். உடனே உமர் (றளி) அவர்கள் அம்றுப்னுல் ஆஸ் (றளி) அவர்களை ஏற இறங்கப்பார்த்த வண்ணம் ''எப்பொழுதுமுதல் மனிதர்களை அடிமைகளாக்கி அடக்கியாளத் துணிந்துவிட்டீர்? இவர்களின் பெற்ருேர் இவர்களைச் சுதந்திரர்களாகத் தானே பெற்றெடுத்தார்கள்!'' எனக்கேட்டுக் கொண்டே தம் கையிலிருந்த சாட்டையை முறையீடு செய்த அச் சிறுவனிடம் கொடுத்து, இந்த மேன்மக்களின் மகன் உன்னை அன்று அடித்ததுபோன்றே இன்று நீ அவனை அடிக்கலாம்'' என்ருர்கள்.

சட்டத்தின் முன் அதிகாரிகளும் சாதாரண ஏழைகளும் சமமானவர்கள் என்பதற்கு இது ஓர் உன்னதமான அத்தாட்சியாகும்.

பொதுமனிதனின் உரிமையைப் பாதுகாப்பதிலும் சட்டத்தை நிலைநாட்டுவதிலும் இஸ்லாம் பாகு

பாடு காட்டவில்லை. இஸ்லாமிய நாடுகளில் வாழும் முஸ்லிமல்லாதாரின் உரிமைகளைப் பேணுவதிலும் இஸ்லாம் அக்கறை கொண்டுள்ளது. சமய சம்பிர தாயங்களைத் தவிர ஏனைய பொது விவகாரங்களில் முஸ்லிம்களும் ஏனைய சமயத்தவரும் சமமாகவே நடத்தப்பட்டுள்ளனர். ஏனைய சமயக் கோட்பாடு களுக்கு மதிப்பளிக்கப் பட்டது.

இஸ்லாமிய சட்டத்தின்கீழ் விதிக்கப்படும் சில தண்டனைகள் நவீன உலகுக்குப் பொருந்தாது என்ற மனப்போக்கு, சிலரிடம் காணப்படுகிறது. முஸ்லிமல்லாதாரின் இத்தகைய மனப்போக்குபற்றி நாம் வியப்படையவில்லை. ஆனால் அல்லாஹ்வை யும் றஸூலையும் ஏற்றுக்கொண்டோம் என்று கூறிக் கொள்ளும் சிலரிடம் இந்த மனப்போக்கு தென்படு வதுதான் ஆச்சரியம், இவர்கள் முஸ்லிம்கள்தானு என்ற கேள்வியும் எழுகிறது.

எந்தப் பிரச்சினைக்கும் இதுதான் பரிகாரம் என்று, அல்லாஹ்வின் வேதநூலான அல்குர் ஆனிலோ அவனுடைய இறுதித்தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களின் சொல், செயல், அல்லது அங் கீகாரத்திலோ கூறப்பட்டுவிட்டால், அப்பிரச் சினைக்கு வேமுெரு பரிகாரம்தேட ஒருமுஸ்லிம் சிந் திக்க முடியாது.

وَمَا كَانَ لِمُؤْمِنٍ وَلَا مُؤْمِنَةٍ إِذَا قَضَى اللَّهُ وَرَسُولُهُ أَمْرًا أَنْ يَكُونَ
لَهُمُ الْخِيَرَةُ مِنْ أَمْرِهِمْ وَمَنْ يَعْصِ اللَّهَ وَرَسُولَهُ فَقَدْ ضَلَّ ضَلَالًا مُبِينًا

''அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் ஒருவிஷயத் தில் கட்டளையிட்டால், அவ்விஷயத்தில் தங்கள்

அபிப்பிராயங்களைத் தேர்ந்துகொள்ள, விசுவாசியான எந்த ஆணுக்கும் பெண்ணுக்கும் உரிமையில்லை. அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் எவரேனும் மாறுசெய்தால், நிச்சயமாக அவர் பகிரங்கமான வழிகேட்டிலேயே இருக்கின்றார்.'' (33: 36)

அல்லாஹ்வின் றஸூலின் கட்டளைக்கு மாறாக பகுத்தறிவு வாதம்புரிய முனைதல், அக்கட்டளையில் திருப்திப்படவில்லை என்பதற்கு தக்க சான்றாகும். இத்தகையோரும் மறைமுகமாக நிராகரிப்போராகவே கருதப்படுகின்றனர். ஆகவே இஸ்லாம் கூறும் தண்டனைகளை மறைமுகமாகக் கிண்டல் செய்து ஒழித்து விளையாடும் பழக்கம் இத்தகையோரின் இம்மை மறுமை இரண்டிலும் பேரிழப்பு ஏற்படக் காரணமாகலாம் என்று கூறிவைக்க விரும்புகிறோம்.

أَفَحُكْمَ ٱلْجَٰهِلِيَّةِ يَبْغُونَ ۚ وَمَنْ أَحْسَنُ مِنَ ٱللَّهِ حُكْمًا لِّقَوْمٍ يُوقِنُونَ

''மௌட்டீக காலத்துச் சட்டங்களையா இவர்கள் விரும்புகின்றனர்? உறுதியாக நம்பிக்கை கொண்ட மக்களுக்கு, தீர்ப்பளிப்பதில் அல்லாஹ்வைவிட அழகானவன் யார்?'' (5: 50)

وَمَن لَّمْ يَحْكُم بِمَآ أَنزَلَ ٱللَّهُ فَأُو۟لَٰٓئِكَ هُمُ ٱلْفَٰسِقُونَ

''அல்லாஹ் அருளிய கட்டளைகளின்படி தீர்ப்பளிக்காதோர் நிச்சயமாக பாபிகளே.'' (5: 47)

அல்லாஹ்வையும், அவனுடைய தூதரையும் ஏற்று நடக்காதவர்கள் இஸ்லாமிய சட்டங்களில் அதிருப்திப்பட்டால் அதற்காக நாம் அவர்களைக் கண்டிக்கத் தேவையில்லை. ஆனாலும் அவற்றைப்

புரிந்துகொள்ள முடியாமையால், ஒட்டுமொத்தமாக இஸ்லாமிய சட்டங்களைக் கண்டித்தல், அல்லது அவற்றை முஸ்லிம் நாடுகளில் அமுல்நடத்துவதைத் தாறுமாருகக் குறைகூறுதல் பண்புடைய செயலா காது என்றே கருதுகிறோம்.

இன்று உலகின் சிலகோணங்களில் முஸ்லிமல் லாதாரின் விமர்சனத்துக்குள்ளாகிக் கொண்டிருக் கும் சில இஸ்லாமிய தண்டனைகளைப்பற்றி இங்கு சற்று ஆராய்வோம்.

திருடியவனின் கையை வெட்டிவிடும்படி அல் குர்ஆன் கட்டளையிடுகிறது. இப்படி கட்டளையிடும் இஸ்லாமிய சட்டம் மிக இலேசாக நிறைவேற்றப் படுவதில்லை. தக்க சாட்சிகள் மூலம் திருட்டு நிரூ பிக்கப்பட வேண்டும். கண்டவன் காவாலியெல் லாம் ஓர் இஸ்லாமிய நீதிமன்றத்தில் சாட்சியாக முடியாது. அல்லாஹ்வின் கட்டளைகளை முறையாகப் பேணுத எவரும் சாட்சி சொல்ல அருகதையற்றவரே. தின்பண்டம் என்ற அற்பமான ஒரு பொருளைத் திருடியதற்காகக் கைவெட்டப்படுவதில்லை. அதுவும் மக்களின் அடிப்படைத் தேவைகளான உணவு, உடைபோன்றவற்றைப் பெற்றுக் கொள்வது கஷ்ட மான சூழலிலும் இத்தகைய தண்டனை நிறைவேற் றப்படுவதில்லை. மக்கள் வறுமைக்குள்ளான போது இத்தகைய தண்டனை கொடுப்பதை நிறுத்திவைத் ததாக இஸ்லாமிய சரித்திரத்திலே காண்கின்ருேம். ஆகவே செல்வம் கொழிக்கும் நாடுகளில் சாதாரண கூலிவேலை செய்பவனுக்கே கைநிறையக் கூலிகிடைக் கும் சூழலில், தேவையான எந்தப் பொருளும் நியா யமான விலைக்கு சிரமமின்றி விரும்பிய அளவு வாங்

கிக் கொள்ளக்கூடிய சூழலில், களவெடுப்பவர்க்குக் கைவெட்டுதல்தான் தண்டனை என்பதை நன்கு உணர்ந்துகொண்டே ஒருவர் களவெடுத்து, கையும் மெய்யுமாகப் பிடிபட்டு, நீதிமன்றத்திலே நிரூபிக் கப்பட்டபின் தங்கள் சமய அடிப்படையில் அவர் களின் இறைவன் விதித்த கட்டளையை ஒருநாட்டு மக்கள் நிறைவேற்றும் போது, நாகரீகத்தின் பெய ரால் மானிடப் பண்பிழந்து வாழ்க்கை மேற் கொண்டு உலகின் மற்றொரு கோணத்தில் வாழும் ஒருகூட்டம் குறைகூறுவதில் என்ன அர்த்தம் இருக் கிறது.

சில இஸ்லாமிய நாடுகளில் விபசாரம் புரிந்த ஆணும் பெண்ணும், இவர்கள் திருமணம் புரிந்த வர்களாயின் கல்லெறிந்து கொல்லப்படுகின்றனர். விவாகமாகாதவர்களாயின் நூறுகசையடி கொடுக் கப்படுகின்றனர். இதுவும் இஸ்லாமிய சட்டமே. இத்தண்டனையும் மிக இலேசாக விதிக்கப்படுவ தில்லை. சாட்சி சொல்லத் தகுதியுள்ள நால்வர் குற்றவாளிகளிருவரும் விபசாரம் செய்து கொண் டிருந்ததை நேரடியாகக் கண்டதாக நீதிமன்றத்தில் வாக்குமூலம் கொடுக்க வேண்டும். விளையாட்டுக் காக அல்லது வழக்கமாகப் பொய் சொல்லல், சன் மார்க்க ஒழுக்கங்களைப் பேணமை, சமயப்பெரியார் களையோ சமயக்கடமைகளையோ மதியாமை போன்ற பல காரணங்களால் சாட்சி சொல்லும் தகைமையை இழக்கும் ஒருவர் இஸ்லாமிய நீதிமன்றத்தில் சாட்சி யாக வரமுடியாது.

அப்படியாயின் எவரோ ஒருவர் வந்து முறை யிட்டார்; ஒரு வாயாடியான — பொய்யை மெய்

யாக்கவும் மெய்யைப் பொய்யாக்கவும் பயிற்றப் பட்ட ஓர் — ஆசாமி தனது சொற்சாதுரியத்தால் அம்முறையீட்டை நிரூபித்துவிட்டார் ஆகவே எதிராளி குற்றவாளி அவருக்குத் தண்டனை நிறைவேற்ற வேண்டியதுதான் என்று இஸ்லாமிய நீதிமன்றம் தீர்ப்புக்கூறுது. ஏனெனில் மனிதனுடைய இயல்புகளையும் தன்மைகளையும் நன்கு அறிந்தவன். ஏன் மனிதனையே படைத்தவன் வகுத்துக்கொடுத்த சட்டங்களை அடிப்படையாகக் கொண்டதே இஸ்லாமிய நீதிபரிபாலன முறை.

(இஸ்லாமிய நீதிபரிபாலன முறைக்கும் ஏனைய நீதிமுறைக்கும் உள்ள வேறுபாடுகளை மேலும் விரிவாக அறியவிரும்புவோர் எகிப்து நாட்டின் உயர் நீதிபதியாயிருந்த ஒரு மேதை எழுதிய நூலின் மொழிபெயர்ப்பான இறைநீதியும் மனித நீதியும் என்ற நூலைப் பார்க்கவும்)

இஸ்லாமிய சட்டங்கள் மிக இலகுவாகக் கரும்பு தின்பதுபோன்று நிறைவேற்றப் படுகின்றன என்று எவரும் கருதிக்கொண்டு தங்கள் மனோஇச்சை போனபோக்கில் கண்டனம் தெரிவிப்பது பண்புடைமையாகாது. ஏனெனில் இஸ்லாம் ஒரு பூரணமான வாழ்க்கை நெறி அதில் மனித வாழ்வின் சகல கோணங்களுக்கும் தேவையான பரிகாரங்களின் அடிப்படைகள் யாவும் உண்டு. அவ்வடிப்படைக்கு மாறாக சட்டமியற்றும் அதிகாரம் அதைப் பின்பற்றுவோருக்கில்லை. அப்படி மாறுபட்ட சட்டங்களை அதிற்புகுத்தி அத்திட்டத்தை மாசுபடுத்துவதை, அத்திட்டத்தையும் மனிதனையும் மற்றெல்லா சிருஷ்டிகளையும் படைத்த இறைவன் அனுமதிக்க

வில்லை. அப்படியே அத்திட்டத்தின் சில அம்சங்களைப் பின்பற்றிக்கொண்டு தம் ஆசைக்கோ சிற்றறிவுக்கோ பொருந்தாதவற்றைப் புறக்கணித்தலையும் வல்ல இறைவன் விரும்பவில்லை.

يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُوا۟ ٱدْخُلُوا۟ فِى ٱلسِّلْمِ كَآفَّةً وَلَا تَتَّبِعُوا۟ خُطُوَٰتِ ٱلشَّيْطَٰنِ ۚ
إِنَّهُۥ لَكُمْ عَدُوٌّ مُّبِينٌ ﴿٢٠٨﴾

''விசுவாசிகளே இஸ்லாத்தில் முற்றாக நுழைந்து விடுங்கள் ஷைத்தானின் அடிச்சுவடுகளைப் பின்பற்றாதீர்கள். நிச்சயமாக அவன் உங்கள் பகிரங்க விரோதி (2:208)

أَفَتُؤْمِنُونَ بِبَعْضِ ٱلْكِتَٰبِ وَتَكْفُرُونَ بِبَعْضٍ ۚ فَمَا جَزَآءُ مَن يَفْعَلُ ذَٰلِكَ
مِنكُمْ إِلَّا خِزْىٌ فِى ٱلْحَيَوٰةِ ٱلدُّنْيَا ۖ وَيَوْمَ ٱلْقِيَٰمَةِ يُرَدُّونَ إِلَىٰٓ أَشَدِّ
ٱلْعَذَابِ ۗ وَمَا ٱللَّهُ بِغَٰفِلٍ عَمَّا تَعْمَلُونَ ﴿٨٥﴾ أُو۟لَٰٓئِكَ ٱلَّذِينَ ٱشْتَرَوُا۟ ٱلْحَيَوٰةَ
ٱلدُّنْيَا بِٱلْءَاخِرَةِ ۖ فَلَا يُخَفَّفُ عَنْهُمُ ٱلْعَذَابُ وَلَا هُمْ يُنصَرُونَ

''வேதத்தின் சிலவற்றை நம்பி வேறு சிலவற்றை மறுக்கிறீர்களா! உங்களில் இப்படிச் செய்கின்றவர்களுக்கு இவ்வுலகில் இழிவைத் தவிர வேறு கூலி கிடையாது. மறுமை நாளில் கடும் வேதனையின்பால் விரட்டப்படுவார்கள். நீங்கள் செய்பவை பற்றி அல்லாஹ் பராமுகமாயில்லை. இவர்கள் தாம் மறுமையைக் கொடுத்து இவ்வுலக வாழ்வை வாங்கிக் கொண்டவர்கள். ஆகையால் இவர்களுக்கு வேதனை குறைக்கப்படமாட்டாது; எவ்விதத்திலும் உதவியும் பெறமாட்டார்கள்.'' (2:85,86)

தண்டனைகளைக் கூறும் இஸ்லாம் மனிதனை அநியாயமாகவோ நிரபராதியாகவோ தண்டிக்கப்படாமல், பாதுகாக்க மிகவும் அக்கறையெடுக்கின்றது. இவற்றையெல்லாம் நாம் இங்கே கூறமுடியாது ஆயினும் சிலவற்றை உணர்த்த விரும்புகிறோம்.

ஒருவரைப் பற்றி ஒரு குற்றச்சாட்டு கூறப் பட்டால் அதை நன்கு ஆராய்ந்து தீரவிசாரித்து உண்மையை விளங்கிக் கொள்வது அவசியம் என்று வழிகாட்டுகிறது அல்குர்ஆன்.

يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُوٓا۟ إِن جَآءَكُمْ فَاسِقٌۢ بِنَبَإٍ فَتَبَيَّنُوٓا۟ أَن تُصِيبُوا۟ قَوْمًۢا بِجَهَٰلَةٍ فَتُصْبِحُوا۟ عَلَىٰ مَا فَعَلْتُمْ نَٰدِمِينَ ٦

''விசுவாசிகளே, ஒரு தீயவன் உங்களிடம் ஒரு செய்தியைக் கொண்டு வந்தால், அதனை தீர விசாரணை செய்து கொள்ளுங்கள். (இன்றேல் அவனுடைய சொல்லை நம்பி) அறியாமையால் நீங்கள் சில மக்களுக்குத் தீங்கிழைத்துவிட்டு, அப்பால் நீங்கள் செய்தவற்றுக்காக நீங்களே கைசேதப்பட வேண்டிவரும்.'' (49:6)

நவீன கால ஜாஹிலிய்யத்தின் அடிப்படையில் ஊறிப்போனவர்களுக்கும் தம்மைவிடப் பெரிய திறமைசாலி எவரும் இல்லை என்ற தலைக்கனத் தோடு, மற்ற மக்களின் சுயமரியாதை பற்றிய கவலையின்றி, கைமாற்றுத் திறமைகளையும் அப்பாவிகளையும் பயன்படுத்தி குட்டையைக்கலக்கி மீன் பிடிப்பது போல பிறர் முகத்திற் கரியைப் பூசிப் பெரிய மனிதர்களாக முனையும் காளான்களின் கவனத்துக்கும் இத்தகைய திருவசனங்கள் சமர்ப்பிக்கப் பட்டாலும், இவற்றை அவர்கள் ஜீரணிப்பது சற்று சிரமமாகத்தான் இருக்கும்.

மனிதனின் நன்மை தீமைகளையெல்லாம் பேணியே இஸ்லாமிய சட்டங்கள் அமைக்கப்பட்டுள்ளன. ஏனெனில் அவை அறிவு சம்பூரணமடையா மனித மூளையின் ஆக்கங்களல்ல. மனிதனின் நிம்மதியான வாழ்வைக் கருதியே அமைக்கப்பட்டன.

வெறும் தத்துவங்களைப் போதித்துக்கொண்டு எத் தகைய குற்றச்செயலுக்கும் தண்டனை வழங்காமல் எந்தவொரு சமயமும் பூரணவெற்றி பெற்றதாக சரித்திரமில்லை. ஆனால் இஸ்லாம் பண்பாடுகளை வளர்ப்பதற்கான போதனைகளைக் கூறுவதுடன் அற வாழ்வுக்கு மாறாகத்துணிந்து குற்றச் செயலில் இறங்கி அமைதியான சமூக வாழ்க்கை முறையைச் சீர்குலைக்க முனைபவர்க்கு தண்டனைகளையும் விதித்து அவற்றை நடைமுறைப் படுத்துவதில் பாரபட்சம் காட்டாது நேர்மையைக் கடைப்பிடிக்க வற் புறுத்துகிறது.

மனித உரிமைகளைக் காப்பாற்றுவது, வெறும் தீர்மானங்களை எடுப்பதன் மூலமும் தத்துவார்த்தப் போதனைகள் மூலமும் சாசனங்கள் மூலமும் கை கூடியதாக சரித்திரமில்லை. சில சமூகத் துரோகக் குற்றங்களுக்குத் தண்டனைகள் நிறைவேற்றுவதன் மூலமே இவ்வுலகில் மனிதனின் உரிமைகளைக் காப் பாற்ற முடியும் என்பதற்கு உலகில் நிறையச் சான் றுகள் உண்டு. இதற்கு மிகவும் தெளிவான சான்று இஸ்லாமிய சரித்திரத்திலே காண்கிறோம். கொலை யாளிக்குத் தண்டனை, கொலையே என்றும் விப சாரிக்குத் தண்டனை, கல்லெறிந்து கொல்லல் அல்லது நூறு கசையடிகள் என்றும் கள்வனுக்குத் தண்டனை, கைவெட்டல் என்றும் கூறப்பட்ட சட்டங்கள் சரி யாக நிறைவேற்றப்பட்ட காலத்தில் எத்தனை கொலைகள் நடந்தன. எத்தனைபேர் கல்லெறிந்து கொல்லப்பட்டார்கள்; எத்தனை கைகள் துண்டிக் கப்பட்டன? என்று பார்க்கும் போதுதான் இச்சட் டங்கள் மனிதனுக்கு எவ்வளவு அவசியமானது என்று உணரமுடிகிறது.

தீமையின் வாயிலைத் திறந்து வைத்துக்கொண்டு, தீயவர்களை உற்பத்தி செய்து விட்டு, முழு சமுதாயமும் நிம்மதியிழந்து வாழ்வதைவிட தீயசக்திகளை முளையிலே கிள்ளியெறிந்து விட்டு முழு சமுதாயமும் நிம்மதி பெறுவதை எந்தப் பகுத்தறிவாளரும் புத்திசாலியும் மறுக்க மாட்டார்.

وَلَكُمْ فِي الْقِصَاصِ حَيَوٰةٌ يَٰٓأُولِى الْأَلْبَٰبِ لَعَلَّكُمْ تَتَّقُونَ

''அறிவுடையோரே, (கொலைக்குப்) பழி வாங்குவதில் உங்களுக்கு வாழ்வுண்டு. நீங்கள் பயபக்தியுடையோராவீர்கள்.'' (2:179)

உலக சரித்திரத்தில் பண்பாடற்ற காட்டுமிராண்டிகள் என்று கருதப்பட்ட அன்றைய அறபிகளிடம் இவ்வளவு தூரம் குற்றங்களை ஒழிக்க இந்த இஸ்லாமியச் சட்டங்களால் முடிந்தது என்ருல், எம்மைப்போன்ற பண்பாடுமிக்க நாகரீகக் குஞ்சுகள் ஏன் இத்தகைய சட்டங்களுக்கு அஞ்ச வேண்டும். நம் நாடுகளில் நிகழும் பாதகச் செயல்களை நினைத்துப் பார்க்கும்போது, நம்மை நாகரீகமானவர்கள் என்று சொல்லலாமா என்பது ஒரு கேள்வி.

இஸ்லாமிய சட்டங்களை மிகவும் பழமை வாய்ந்தது என்று கண்டிக்கும் சூழலிலும் இச்சட்டங்கள் தாம் உண்மையிலேயே மக்களிடமிருந்து தீமையை ஒழிக்க வல்லவை என்று மனசாட்சியோடு கூறுவோரும் இருக்கின்றனர். அம்மட்டல்ல இஸ்லாம் கூறும் தண்டனைகளை அல்லது அவற்றுக்கு நிகரான தண்டனைகளை அல்லது அவற்றைவிடவும் கொடூரமான தண்டனைகளை விதிக்கும் நாடுகளும்

உலகில் உண்டு என்பதையும் இங்கே குறிப்பிடுதல் பொருந்தும் என்று நினைக்கிறோம்.

உதாரணமாக போதைப் பொருள் கடத்திய குற்றத்துக்காக ஒரு நபருக்கு தூக்குத்தண்டனை விதிக்கப்பட்டதாக நாம் பத்திரிகைகளிலே பார்த்தோம். ஆனால் இத்தண்டனை பற்றி எவரும் கடும் கண்டனங்களையோ பண்பாடற்ற முறையில் கட்டுரைகளையோ வெளியிட்டதாகத் தெரியவில்லை. இதற்கு நியாயம் என்னவென்று புரிவது, சிந்திப்போருக்கு அவ்வளவு சிரமமாக இல்லை.

இஸ்லாத்தையும் இஸ்லாமிய சட்டங்களையும் ஒழுக்கங்களையும் குறை கூறுவதன் மூலம் உலக மக்களின் மத்தியிலே ஏன் இஸ்லாத்தை நன்கு புரிந்து கொள்ளாமல் வாழும் முஸ்லிம்களிடையிலும் இஸ்லாத்தைப் பற்றிய அதிருப்தி மனப்பான்மையை வளர்ப்பதற்கென்றே உலகில் பலம் வாய்ந்த சக்திகள் மறைமுகமாக இயங்கி வருகின்றன. இதற்காக பல மூளைசாலிகளை கூலிக்கமர்த்தி வேலை செய்கின்றன. இத்தகைய கூலிப்படையினர் இஸ்லாத்தை ஆராய வந்த மகான்கள் போன்றும் இஸ்லாத்தினால் கவரப்பட்டவர்கள் போன்றும் முஸ்லிம்களையும் முஸ்லிம் நாடுகளையும் அணுகி அங்கே அறிவு ஆராய்ச்சி மேதைகளாக நடித்து, அப்பால் பகிரங்கமாக இஸ்லாத்தைக் கண்டித்தும் சீனி பொதிந்த நச்சு வில்லை போன்று இஸ்லாமிய அம்சங்கள் பலவற்றைப் புகழ்ந்தும் அவற்றுக்கிடையே சில முக்கியமான அம்சங்களை மிக நாசூக்காகக் கண்டித்தும் வருகின்றனர். இந்த வகையான சூழ்ச்சிகள் உலகில் பல நூற்றுண்டுகளாக நடைபெற்று வருகின்றன.

கீழைத்தேச மக்களுக்கு இந்தச் செய்தி புதிதாக இருக்கலாம் ஆனால் அறிவுடைய முஸ்லிம்களுக்கும் மேலைத்தேசங்களுக்கும் இது ஒரு புதிய செய்தியல்ல.

இஸ்லாத்துக்கு விரோதமாக நடந்துவரும் இத்தகைய இயக்கங்கள், தம் சதிமுயற்சிகளில் வெற்றி பெற்றுள்ளனவா? என்றால் இதற்கு விடை சொல்வது அவ்வளவு இலகுவாக இல்லை. கூட்டங்கூட்டமாக முஸ்லிம்கள் இஸ்லாத்தை விட்டு வேறு கொள்கைகளின் பக்கம் போகவில்லை என்று கூறலாம். ஆயினும் ஏராளமான முஸ்லிம்களின் உள்ளங்களிலே சந்தேகம் எனும் தீய சக்தியை விதைப்பதில் இவ்வியக்கங்கள் ஓரளவு சாதித்துள்ளன என்று கூறுவது தவறாகாது என்று நினைக்கிறோம். ஏனெனில் இஸ்லாமிய தண்டனைகள் நல்லவை தான்; என்றாலும் இந்தக்காலத்திற்குப் பொருந்தாது என்றும் இவற்றை இந்தக்காலத்துக்குப் பொருந்தும் வகையில் திருத்தப்படவேண்டும் என்றும் சில தண்டனைகளுக்கு அல்குர்ஆனில் ஆதாரமில்லையே! என்றெல்லாம் கூறுவோரை முஸ்லிம்களின் பட்டியலில் பார்க்கிறோம். ஏன்! இஸ்லாமிய அடிப்படைக்கு மாறான கொள்கைகளைப் பகிரங்கமாகக் கூறுவோரையும் அவற்றை அப்படியே நம்புவோரையும் காண்கின்றோம். இஸ்லாம் என்னவென்று புரிந்துகொள்ளாத வேஷதாரிகள் பெரிய ஞானிகளாகவும் மகான்களாகவும் நடித்து உண்மையான இஸ்லாமிய அறிவு பெற்றுக்கொள்ள வாய்ப்பைப் பெறாத அப்பாவிகளின் சொத்துக்களையும் பந்துக்களையும் மூளைகளையும் உறிஞ்சிக் கொண்டிருப்பதைக் காண்கிறோம்! இவ்வளவும் செய்த பின்னும் இவர்கள் பொது மக்களின் மந்தப்பார்

வையில் மேதைகள்; மேதாவிகள்; மகான்கள்! இத்தகைய துரதிஷ்ட நிலையை உருவாக்குவதில், இஸ்லாமிய ஞான சூன்யங்களும் நாம் மேலே குறிப்பிட்ட சதிகார இயக்கங்களும் வெளியிட்டுள்ள நூல்களுக்கு நிறையப் பங்குண்டு.

இவ்வளவு தூரம் இஸ்லாமிய சட்டதிட்டங்களையும் தண்டனைகளையும் கண்டிக்கும் சில மக்கட் கூட்டத்தின் போக்கை இங்கே சுட்டிக்காட்டுவது நியாயமென்றே கருதுகிறோம்.

கறுப்பர் எந்த வகையிலும் வெள்ளையர்க்கு சமமாக முடியாது என்பது அமெரிக்காவில் ஊறிப் போன கொள்கை. அவர்களின் சாதாரண சமூக விவகாரங்களில் மாத்திரமல்ல நீதித்துறையிலும் அவர்கள் கறுப்பருக்கு சமத்துவம் கொடுக்கத் தயாரில்லை. வெள்ளையன் கறுப்பியைக் கற்பழித்தால் அதைப்பற்றி எந்தக் கவலையும் வெள்ளையருக்கில்லை. ஆனால் ஒரு கறுத்தவன் ஒரு வெள்ளைப் பெண்ணோடு அவ்வாறு நடந்துகொண்டால், அவனுக்குக் கசையடி கொடுக்கப்படும். வெட்டிக்கொலை செய்து தீயிலிட்டு எரித்தும் விடுவார்கள். இவற்றில் அங்கே நீதி பரிபாலனமும் வலுவற்றுக் காணப்படுகிறது. இது நாகரீகத்தில் நமக்கு நிகர் எவருமில்லை என்று மார்தட்டிக்கொள்ளும் அமெரிக்காவின் இன்றைய நிலை.

மனிதனின் சாதாரண உரிமைகளைக்கூட மறுக்கும் நிகழ்ச்சிகள், இவ்விருபதாம் நூற்றாண்டில் மேலைத்தேசங்களில் நடந்துகொண்டுதான் இருக்கின்றன. மனிதனின் அடிப்படை உரிமைகளே நிற

பேதம் காரணமாக மறுக்கப்படுவதைக் காண்கிறோம். அவற்றையெல்லாம் இங்கே குறிப்பிடுவது எமது நோக்கமல்ல. உதாரணத்துக்காக ஒன்றைக் குறிப்பிடுகிறோம்:

ஐக்கிய அமெரிக்க இராச்சியங்களில் ஒன்றான அலபாமாவில் நடந்த ஒரு சம்பவம் இது. ஒரு நீக்ரோப் பெண், தன் கல்லூரிப் படிப்பை முடித்துக் கொண்டு மேற்படிப்புக்காக அலபாமா பல்கலைக்கழகத்திற் சேர விண்ணப்பித்தாள். கறுப்பி என்ற காரணத்துக்காக அவளுடைய விண்ணப்பம் ஏற்கப்படவில்லை. பல்கலைக் கழகத்தில் அனுமதி மறுக்கப்பட்டது. இது நியாயமல்ல என்று, பர்மிங்ஹாம் பெடரல் நீதிமன்றத்தில் ஒரு வழக்கைத் தாக்கல் செய்தாள் அப்பெண். வழக்கு விசாரிக்கப்பட்டது. அவளுக்கு அனுமதி கொடுக்கப்பட வேண்டும் என்று நீதிமன்றம் தீர்ப்பளித்தது. இதையறிந்த வெள்ளை மாணவர்களும் இத்தீர்ப்பை எதிர்த்து ஆர்ப்பாட்டம் நடத்தினர். இவ்வெதிர்ப்பு ஆர்ப்பாட்டத்திலும் ஊர்வலத்திலும் ஏனைய பல்கலைக் கழக மாணவர்களும் பங்குபற்றினர். ஏழாயிரத்துக்கு மேற்பட்ட வெள்ளை மாணவர்கள் எதிர்ப்பு ஊர்வலம் நடத்தினர். அந்தக் கறுப்பியை கொன்று மரத்திற் தொங்கவிடப்போவதாகக் கோஷமிட்டனர். அப்பெண்ணைப் போன்ற ஓர் உருவத்தைச் செய்து அதைக்கட்டியிழுத்துக் கொண்டும் உதைத்துக்கொண்டும் சென்று தீயிலிட்டுக் கொளுத்தினர்.

வெள்ளை மாணவர்களின் எதிர்ப்பு இத்துடன் நின்றுவிடவில்லை. ஒரு கூட்டத்தினர் அப்பெண்

போகுமிடமெல்லாம் பின்தொடர்ந்து சென்று கல்லால் அடித்தனர். அழுகிய முட்டைகளை அவளுக்கு எறிந்தனர். தங்களோடு சமமாக இருந்து கற்க வந்தால் அவளைக் கொன்று கிழித்துவிடப்போவதாகப் பயமுறுத்தினர்.

இவ்வளவுக்கும் அப்பல்கலைக் கழகங்கள் அவ்வெள்ளை மாணவர்க்கு எவ்வித எச்சரிக்கையையோ புத்திமதியையோ கொடுக்கவில்லை. அப்படியானுல், பல்கலைக்கழகத்தை நடத்தும் பண்பட்ட பேராசிரியர்களும் எத்தகைய மனப்பான்மையினர் என்று ஊகிக்கலாம் அல்லவா. எனவே அப்பெண் அப்பல்கலைக் கழகத்திற்கு வரக்கூடாது என்று பல்கலைக் கழகம் அறிவித்துவிட்டது.

பாவம், இப்பேதைப் பெண் கல்வியில் திறமைசாலியாகவிருந்தும் உயர் கல்விகற்க முடியவில்லை. அம்மட்டல்ல, இவள் தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள வீட்டுக்குள்ளேயே அடைப்பட்டுக்கிடந்தாள். என்ருலும் தனது அடிப்படை உரிமையைப் பெற்றுத் தருமாறு மறுபடியும் நீதிமன்றத்தில் மேன்முறையீடு செய்தாள். பயத்தின் காரணமாக நீதிமன்றம் அமைந்துள்ள பர்மிங்ஹாம் நகருக்கே சென்று தன் சகோதரியின் வீட்டிலேயே அடைபட்டிருந்தாள்.

பர்மிங்ஹாம் நகரிலும் வெள்ளையர்கள் அவளை சும்மா விட்டு வைக்கவில்லை. பல வகையாகவும் பயமுறுத்திக்கொண்டிருந்தனர். இரண்டு நிமிஷங்களுக்கொருமுறை அவளுடைய வீட்டுத் தொலைபேசி மணியடித்தது. வந்த செய்திகள் யாவும்

வசை மொழிகளும் தூஷண வார்த்தைகளும் பய முறுத்தல்களுமே. இப்படி ஒரே இரவில் ஏழு மணிநேரம் நடைபெற்றது!

எனவே இப்பெண், இத்தொல்லைகளிலிருந்து தப்பிக்கொள்வதற்காக எவருக்கும் தெரியாத இடத்தில் ஒழிந்திருந்து காலம் கழிக்கவேண்டியிருந்தது.

நீதிமன்றம் இரண்டாம் முறையும் அம்மாணவியைப் பல்கலைக் கழகம் அனுமதிக்க வேண்டுமென்றே தீர்ப்பளித்தது. ஆயினும் அத்தீர்ப்பை ஏற்கப் பல்கலைக்கழகம் மறுத்துவிட்டது. எனவே நீதிமன்றத்தின் தீர்ப்பை மறுத்த பல்கலைக்கழக நிர்வாகி ஜோன் காடீல் என்பவர் நீதிமன்றத்தில் நிறுத்தப்பட்டு விசாரிக்கப்பட்டார். அங்கே அவர் கூறியது இதுதான்:

''வெள்ளை மாணவர் அந்தக் கறுப்பு மாணவியையும் கொன்று எம்மையும் கொலை செய்யக் கூடும் என்று அஞ்சுகிறோம். இத்தகைய அசம்பாவிதங்களைத் தவிர்ப்பதற்காகவே அப்பெண்ணைப் பல்கலைக் கழகத்துக்கு வரவிடாமல் தடுத்துவிட்டோம்.''

இன வேற்றுமையில் இவர்களின் சட்டங்களும் நீதிமன்றமும் படுதோல்வியடைந்ததைக் கண்ட அலபாமாவின் மாகாணாதிபதி, இந்த நிறவேற்றுமையைச் சுமுகமாகத் தீர்த்துவைக்க ஒரு குழுவை நியமித்தார். இனியொரு சந்தர்ப்பத்தில், ''அலபாமாக் கல்லூரிகளில் வெள்ளை மாணவரும் கறுப்பு மாணவரும் சமமாயிருந்து கற்பதில்லை என்பது

புத்திசாலிகளுக்குத் தெரிந்த விஷயம்தானே'' என்று ஆறுதல் கூறியிருக்கிருர்.

நிற வெறியின் பேயாட்டம் உயர்கல்வி பீடங்களில் மாத்திரமல்ல சாதாரண பாடசாலைகளிலும் உண்டு என்பதை இம்மாகாணதிபதியின் கூற்றிலிருந்தே தெளிவாகிறது. அதுதான் உண்மை. வாழ்க்கையின் சகல துறைகளிலும் கறுப்பர் ஒதுக்கப்பட்டே வாழ்கின்றனர். போக்குவரத்துக்கான பொது வாகனங்களிலும் கறுப்பருக்கு வேற்றுமை காட்டப்படுகிறது.

ஒரு முறை ஒரு கறுத்த பெண் பிரயாணத்தின் போது வெள்ளையருக்குப் பிரத்தியேகமாக வைக்கப்பட்டிருந்த ஆசனத்தில் அமர்ந்துவிட்டாள். அதிலிருந்து எழுந்து கறுப்பரின் ஆசனத்துக்கு போ என்று அப்பெண்ணுக்குக் கூறப்பட்டது. அப்படிச் செய்ய மறுத்த அப்பெண் பொலீசாரால் கைது செய்யப்பட்டு நீதிமன்றத்தில் நிறுத்தப்பட்டாள். நீதிமன்றம் அவளுக்கு மரணதண்டனை விதித்தது. இதைக் கேட்ட கறுப்பு இன மக்கள் யாவரும் பஸ் பிரயாணத்தைப் பகிஷ்கரித்தனர். உடனே அலபாமா நாடாளுமன்றம் பஸ்பிரயாணத்தைப் புறக்கணித்தல் சட்டவிரோதமான செயல் என்று தீர்மானம் நிறைவேற்றியது. இதன் காரணமாக பஸ்ஸிற் பிரயாணம் செய்ய மறுத்த நூற்றுக் கணக்கான கறுப்பு இன மக்கள் கைது செய்யப்பட்டு நீதிமன்றத்திற் குற்றவாளிகளாக நிறுத்தப்பட்டனர். இது, பல நூற்ருண்டுகட்கு முன் நடந்த நிகழ்ச்சியல்ல. 1956ஆம் ஆண்டு மார்ச் மாதம் நிகழ்ந்தது.

இஸ்லாமிய சட்டங்களின்படி, விபசாரம் செய் தவருக்கு நூறு கசையடிகள் களவெடுத்தவர்க்கு கையைத்தறித்தல் என்று கேள்விப்பட்டு வானளாவக் குரல் எழுப்பும் 'தர்ம வான்' களுக்கு நாம் மேலே குறிப்பிட்டவை போன்ற நிகழ்ச்சிகள் தெரியாமலிருக்க முடியாது. ஆனாலும் நமக்கு நாகரீகப் பாடம் கற்றுத்தரும் அமெரிக்கர் செய்தால் அது சரியாக இருக்கும் என்று நினைக்கிறார்கள் போலும். அப்படியானால் மாமியுடைத்தால் மண்குடம் மருமகள் உடைத்நால் பொன்குடம்தானா. அப்படியானால் இஸ்லாமிய சட்டங்களைக் கண்டிக்க இவர்களைத் தூண்டியது மனச்சாட்சியா அல்லது மனப் பொருமலா ? என்று நினைக்கத் தோன்றுகிறதல்லவா.

தங்கள் நாட்டில் கறுப்பர்களோடு அடுத்தடுத்து வாழும் அமெரிக்கரும் ஐரோப்பியரும் அங்கே கறுப்பர்களுடன் நடந்துகொள்ளும் விதம் என்ன என்பதற்கும் அவர்கள் தாம் அடக்கியாண்டு கொண்டிருக்கும் சில ஆபிரிக்க நாடுகளில் செய்யும் அட்டகாசங்களுக்கும் எத்தனையோ நிகழ்ச்சிகளை நாம் கூறலாம் விரிவஞ்சி அவற்றை விடுக்கிறோம். தங்கள் சொந்த நாடுகளில் அப்படி நடந்து கொள்ளும் இவர்களிற் சிலர் எமது நாட்டுக்கு வந்து சமரச ஞான வேதாந்தங்களை எமக்குப் போதிக்க முனைகின்றார்கள். நமது நாட்டிலுள்ள ஏழைகளுக்கும் அனாதைகளுக்கும் கருபிகளுக்கும் அளவுகடந்த வாஞ்சையை அள்ளிவீசி பணங்களையும் வாரி வழங்குகின்றனர் என்றால் இதன் மர்மம்தான் என்ன. உலகில் பலகோடி மக்கள் பசியால் வாடுகின்றனர் பல இலட்சம் மக்கள் பரிதாபமாக இறக்கின்றனர் இந்த வேளையிலும் ஏராளமான கோதுமை போன்ற

தானியங்கள் கடலிலே கொட்டப்படுகின்றன. இப்படிக் கொட்டிவிட்டுத்தான் பின்தங்கிய நாடுகளுக்கு அபிவிருத்தித் திட்டங்களுக்கு உதவிசெய்கின்றனர்.

இத்தகைய பாகுபாடுகளையெல்லாம் ஆயிரத்து நானூறு ஆண்டுகளுக்கு முன்பே இஸ்லாம் ஒழித்துக் கட்டியது. முஸ்லிம் நாடுகள், பல நிறத்தவரையும் பல மொழியுடையோரையும் பல சமயத்தவரையும் கொண்டு உலகளாவி நிற்கின்றன. முஸ்லிம் உலகம் எச்சமயத்தவரையும் எம்மொழியினரையும் எந்நிறத்தவரையும் இழிவுபடுத்தவில்லை. மாறாக எல்லோரையும் அணைத்துக் கொள்கிறது.

கல்வியை மனிதனின் அடிப்படை உரிமையாக்கியது மட்டுமல்ல, ஒவ்வொருவருடையவும் கடமையாக்கிய பெருமை, இறுதித்தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களுக்கே உரியது. அவர்கள் பின்வருமாறு கூறினார்கள் :

طَلَبُ العِلْمِ فَرِيضَةٌ عَلَى كُلِّ مُسْلِمٍ

''கல்வியைத் தேடிக் கற்பது ஒவ்வொரு முஸ்லிமின் மீதும் கடமை''

أطلُبِ العِلْمَ مِنَ المَهْدِ إلى اللَّحْدِ

''தொட்டிலில் இருந்து சவக்குழி போகும்வரை கல்வியைத் தேடவேண்டும்''

இங்கே மற்றொரு அம்சம் கவனித்தற்பாலது. கல்விக் கூடங்களோ பாடசாலைகளோ, வானொலி, தொலைக்காட்சி போன்ற வசதிகள் மலிந்துள்ள நிலையில், நமது காலடியில் கல்வி வசதிகள் வந்து குவிந்தபோது, கற்பது கடமை என்றுகூறி அமைதி

கொள்ளவில்லை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள். எத்தகைய கல்வி வசதியும் இல்லாதிருந்த அக்காலத்தில் காடும் மலையும் கடந்து, நாடுநகர் தாண்டி, கல்வியைத் தேடிப் படிப்பது கடமை என்றார்கள். அத்துடன் பெண்களுக்கு எவ்வித உரிமையும் இருப்பதாகக் கற்பனைகூட செய்யாத அக்காலத்தில் பெண்களுக்கும் கல்வியூட்டுங்கள் என்று கட்டளையிட்டார்கள்.

எவ்வளவு ஏழையானாலும் கல்விமானும் கல்வியற்றோரும் சமமாக முடியாது என்கின்றது அல்குர்ஆன் :-

قُلْ هَلْ يَسْتَوِي الَّذِينَ يَعْلَمُونَ وَالَّذِينَ لَا يَعْلَمُونَ

''அறிவுடையோரும் அறி ரோரும் சமமாக முடியுமா என்று (நபியே! நீர்) கேட்பீராக'' (39: 9)

وَمَنْ يُؤْتَ الْحِكْمَةَ فَقَدْ أُوتِيَ خَيْرًا كَثِيرًا

''எவர் கல்விஞானம் கொடுக்கப்படுகின்றாரோ அவர் நிச்சயமாக அனேக நன்மைகள் கொடுக்கப்பட்டவராவார்'' (2 : 269)

# பொருளியலில் சமத்துவம்

பொருளியலில் மக்களுக்கிடையே சமத்துவத்தை நிலைநாட்ட இஸ்லாம் பல வகையிலும் வழிகாட்டிக்கொண்டிருக்கின்றது. இவ்விஷயத்தில் மனிதன் தன் மனம் போன போக்கில் செயல்பட விட்டு விடுவது அவனுக்கு மாத்திரமல்ல மனித இனத்துக்கே தீங்கானது என்ற உண்மையை இஸ்லாம் நன்கு உணர்த்துகிறது. மக்களிடையே வேற்றுமைகள் தோன்றிப் பூசல்களை உண்டாக்க இடமளிக்காமலும் அவர்களின் திரட்டு ஊக்கங்களை அழித்து விடாமலும் அவர்கள் செயல்படுவதற்கான மனப்பாங்கை அவர்களிடையே இஸ்லாம் வளர்க்கிறது. வெறும் தத்துவப் போதனைமட்டும் போதாது சட்ட நடவடிக்கைகளும் இணைந்தாற்ருன் மனித சமுதாயம் சுபீட்சமடைய முடியும் என்ற கொள்கையைப் பொருளாதார விவகாரங்களிலும் கடைப்பிடித்துள்ளது இஸ்லாம். எனவே இஸ்லாமியப் பொருளாதாரக் கொள்கைக்கு நிகரான மற்ருெரு பொருளாதாரக்கொள்கை இல்லையென்றே கூறலாம். இக்கூற்றையும் சற்று விரிவாக இங்கே ஆராய்வோம்.

## பொருளீட்டும் வழிகள்

எப்படியும் பொருளீட்டலாம் என்று இஸ்லாம் அனுமதிக்கவில்லை. சில பொருளீட்டும் முறைகளை அது அனுமதிக்கும் அதேவேளையில் வேறு சிலவற்றை வன்மையாகக் கண்டித்துத் தடைசெய்துள்ளது. பொருளீட்டும் வழிகளைப் பின்வருமாறு வகைப்படுத்திக் கவனிப்போம்.

### வர்த்தகம்

இன்றைய நவீன உலகில் வழங்கப்படும் வர்த் தகம், வணிகம், வியாபாரம், அல்லது ஆங்கிலத் தில், *Commerce, Trade, Business* எனும் சொற் கள் எதுவும் அனுமதிக்கப்பட்டவை அல்லது அனு மதிக்கப்படாதவை என்ற பாகுபாட்டைக் காட்டி நிற்கவில்லை, ஆனுல் இஸ்லாமியப் பொருளியலில் வியாபாரம் அல்லது வர்த்தகம் எனும்போது அதில் இஸ்லாம் தடைசெய்துள்ள எந்த அம்சமும் இருக்க முடியாது. இந்த அடிப்படையிலேதான் அல்குர்ஆன்,

وَأَحَلَّ ٱللَّهُ ٱلْبَيْعَ وَحَرَّمَ ٱلرِّبَوٰا۟

''அல்லாஹ் வர்த்தகத்தை அனுமதித்து வட்டி யைத் தடைசெய்தான்'' (2:275) என்று கூறுகிறது.

இஸ்லாமிய வர்த்தக முறைகளில் தடைசெய் யப்பட்ட பல அம்சங்கள் உண்டு. அவற்றைத் தவிர்த்தல் மனித சமுதாயத்துக்கும் உலகப் பொரு ளாதார நல்லாரோக்கியத்துக்கும் மிகவும் அவசி யமாகும். அவ்வகையான பிழையான அம்சங்கள் பின்வருமாறு:

### வட்டி

வட்டிக்குக் கொடுப்பதும் வட்டியெடுப்பதும் இது சம்பந்தப்பட்ட எல்லாக் கொடுக்கல் வாங் கல்களும் மிகவும் தீயவை என்றும், இவற்ருல் தீமையே தவிர எவரும் பயன்பெற முடியாது என்றும் இஸ்லாம் உறுதியாகக் கூறுகிறது.

ٱلَّذِينَ يَأْكُلُونَ ٱلرِّبَوٰا۟ لَا يَقُومُونَ إِلَّا كَمَا يَقُومُ ٱلَّذِى يَتَخَبَّطُهُ ٱلشَّيْطَـٰنُ مِنَ ٱلْمَسِّ ۚ ذَٰلِكَ
بِأَنَّهُمْ قَالُوٓا۟ إِنَّمَا ٱلْبَيْعُ مِثْلُ ٱلرِّبَوٰا۟ ۗ وَأَحَلَّ ٱللَّهُ ٱلْبَيْعَ وَحَرَّمَ ٱلرِّبَوٰا۟ ۚ فَمَن جَآءَهُۥ مَوْعِظَةٌ

مِن رَّبِّهِۦ فَٱنتَهَىٰ فَلَهُۥ مَا سَلَفَ وَأَمْرُهُۥٓ إِلَى ٱللَّهِ ۖ وَمَنْ عَادَ فَأُو۟لَٰٓئِكَ أَصْحَٰبُ ٱلنَّارِ ۖ
هُمْ فِيهَا خَٰلِدُونَ ﴿٢٧٥﴾ يَمْحَقُ ٱللَّهُ ٱلرِّبَوٰا۟ وَيُرْبِى ٱلصَّدَقَٰتِ ۗ وَٱللَّهُ لَا يُحِبُّ كُلَّ
كَفَّارٍ أَثِيمٍ

''வட்டியை உண்பவர்கள் (மறுமையில்) ஷைத் தான் பிடித்தவர்கள் எழும்புவது போன்றே எழும் புவார்கள். அந்நிலை, அவர்கள் வட்டியும் வியா பாரம் போன்றதுதான் என்று கூறியதனால் ஏற்பட் டது. அல்லாஹ் வியாபாரத்தை ஆகுமாக்கி வட்டி யைத் தடைசெய்தான். எவருக்கேனும் அல்லாஹ் வின் நல்லுபதேசம் வந்து (அவற்றை ஏற்று) வட்டியை விட்டு நீங்கிக் கொண்டால் அதற்கு முன் நடந்தவை அவனுக்குரியதே. அவனுடைய முன்னைய விஷயம் அல்லாஹ்வைப் பொறுத்தது. இவ்வுத்தரவுக்குப் பின்னும் எவரேனும் வட்டியின் பால் திரும்பினால் அவர்கள்தாம் நரகவாசிகள். அதில் அவர்கள் என்றென்றும் இருப்பர். அல்லாஹ் வட்டியை அழிப்பான். தானதர்மங்களை வளர்ப் பான். நிராகரித்துக் கொண்டும், பாபம் செய்து கொண்டும் இருக்கும் எவரையும் அல்லாஹ் உவப் பதில்லை. (2:275,276)

يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُوا۟ ٱتَّقُوا۟ ٱللَّهَ وَذَرُوا۟ مَا بَقِىَ مِنَ ٱلرِّبَوٰٓا۟ إِن كُنتُم مُّؤْمِنِينَ

விசுவாசம் கொண்டவர்களே, நீங்கள் உண்மை விசு வாசிகளாயிருந்தால், அல்லாஹ்வுக்குப் பயந்து உங் களுக்கு வரவேண்டிய வட்டிப்பணத்தை விட்டு விடுங் கள்'' (2:278)

## மோசடி

வர்த்தகத்தில் எவ்விதத்திலும் ஒருவரை மோசடி செய்தல் அனுமதிக்கப்படவில்லை. அள வையில், நிறுவையில், வர்த்தக ஒப்பந்தங்களில்

உண்மை, நேர்மை, வாய்மை பின்பற்றப்பட வேண்டும். வர்த்தகப் பொருட்களின் குறைகளை மறைத்து விற்றல், தரமானவற்றைக் காட்டி தரக்குறைவானவற்றைக் கொடுத்தல், வியாபார ஒப்பந்தம் செய்துவிட்டு அப்பால் சுயநலனுக்காக அதை மீறல், பொருட்களைத் தயாரிப்பதில் போலியானவற்றை உற்பத்தி செய்தல், தூரப் பிரதேசங்களோடு வர்த்தகத் தொடர்பு கொள்ளும்போது தந்திரங்களைப் பயன்படுத்தல் போன்ற யாவுமே மோசடியாகவே கருதப்படுகிறது. இப்படிச் செய்வோர் உண்மை முஸ்லிம்களாக முடியாது. இதுபற்றி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறிய சில வார்த்தைகள் பின்வருமாறு :

''எம்மை ஏமாற்றுவோர் எம்மைச் சேர்ந்தவரல்லர்'' விற்பவரும் வாங்குபவரும் ஒருவரையொருவர் பிரிந்து செல்லும்வரை தங்கள் வியாபாரத்தை ரத்துச்செய்து கொள்ளலாம். இருவரும் உண்மையாக நடந்து கொண்டால் இருவருக்கும் அபிவிருத்தியுண்டு. உண்மையை மறைத்தால் அபிவிருத்தி அழிக்கப்படும். ''அல்லாஹ் அனுமதிக்காத வகையில் பெற்றுக்கொண்டவற்றால் வளர்ந்த உடல் நரகுக்கே மிக்க உரித்து'' ''அல்லாஹ் தடைசெய்த வழிகளில் ஈட்டிய பணத்தால் செய்யப்படும் தர்மம் ஏற்கப்படமாட்டா. அத்தகைய பணத்தில் அபிவிருத்தி கிட்டாது. அத்தகைய பணம் நரகம் செல்லக் காரணமாகவே அமையும்''

## கொள்ளை இலாபம்

பொருட்களை விற்போர் வாங்குபவரின் நிலையை அவதானித்து மிகவும் கூடுதலான விலைக்கு விற்பது

முறையாகாது. மனச்சாட்சிக்குப் பொருத்தமான விலையில் விற்கவேண்டும் இப்படியே ஏற்றுமதி, இறக்குமதி தரகு போன்றவற்றுக்கான கூலிகளிலும் மிக்க நிதானமாக நடந்துகொள்ள வேண்டும். பொருட்களுக்குத் தட்டுப்பாடு நிலவும் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்ளை இலாபம் பெறுவோரும் ஒருவகையில் ஏமாற்றுபவரே.

### பதுக்கல்

சுயநலன் கருதி பொருட்களைப் பதுக்கிவைத்தலை இஸ்லாம் கண்டிக்கிறது. எவரேனும் உணவுப் பொருட்களைப் பதுக்கிவைத்து நாற்பது நாட்கள் வரை அப்படியே வைத்திருந்தால், அவர் அல்லாஹ்வின் சந்நிதானத்திலிருந்து நீங்கிவிட்டார்; அவரை விட்டு அல்லாஹ்வும் நீங்கிவிடுகிறான்.

## குறைத்து நிறுத்தலும் அளத்தலும்

இது ஒரு பெரும் குற்றமாகக் காண்கிறது இஸ்லாம். ஒரு விற்பனைப்பொருளை எக்காரணங் கொண்டும் குறைத்து அளக்கவோ, நிறுக்கவோ கூடாது. இதுபற்றி அல்குர்ஆன் கூறுவதாவது :

وَأَقِيمُوا الْوَزْنَ بِالْقِسْطِ وَلَا تُخْسِرُوا الْمِيزَانَ

''நீதமாக நிறுங்கள், நிறையில் நஷ்டத்தை விளைவிக்காதீர்கள்'' *(55:9)*

وَأَوْفُوا الْكَيْلَ إِذَا كِلْتُمْ وَزِنُوا بِالْقِسْطَاسِ الْمُسْتَقِيمِ

''நீங்கள் அளந்தால் சரியாக அளவுங்கள். நிறுத்தாலும் நேர்மையான முறையில் நிறுங்கள்'' *(17:35)*

وَيْلٌ لِّلْمُطَفِّفِينَ ① الَّذِينَ إِذَا اكْتَالُوا عَلَى النَّاسِ يَسْتَوْفُونَ ② وَإِذَا

كَالُوهُمْ أَو وَّزَنُوهُمْ يُخْسِرُونَ

''அளவையில் மோசம் செய்வோர்க்குக் கேடுதான்! அவர்கள் மனிதரிடம் வாங்கும்போது நிறைய அளந்து வாங்குகின்றனர்; மற்றவர்க்குக் கொடுக்கும் போது குறைவாக அளந்தும், நிறுத்தும் நஷ்டப் படுத்துகின்றனர்'' (83:1 3)

## பயமுறுத்தல்

வர்த்தகமும் ஏனைய பொருளீட்டு முறைகளும் செய்யும்போது அல்லாஹ் ஒருவனைத் தவிர மற்றெ வரையும் பயந்து செயல்படும் நிலையை இஸ்லாம் விரும்பவில்லை. பெரியவர், அதிகாரி, பெரிய வியா பாரி ஆகியோரின் அதிகாரங்களோ கட்டுப்பாடு களோ கொடுத்தல் வாங்கலில் ஆதிக்கம் செலுத் தக் கூடாது. சாதாரண மக்களுக்கு ஒருவிலை, முத லாளிக்கு ஒருவிலை, ஆட்சியாளருக்கு மற்றொருவிலை, மேலதிகாரிக்கு இன்னுமொரு விலை, என்று ஆளுக் கொரு விலை சொல்வதும் பயமுறுத்தலின் ஒரு சாயல்தான்.

## இலஞ்சம்

வர்த்தகத்திலோ ஏனைய பொருளீட்டுதலிலோ இலஞ்சம், தன் சுயரூபத்திலோ மாறுவேடத்திலோ, நேரடியாகவோ மறைமுகமாகவோ பிரவேசிக்க இஸ் லாம் அனுமதிக்கவில்லை. இப்படியான விளையாட் டுக்களுக்கு இணங்காத வர்த்தகர்களை அல்லது அதி காரிகளை அநியாயமாகத் தொந்தரவு செய்தலும் கூடாது என்று கண்டிக்கிறது அல்குர்ஆன்.

وَلَا تَأْكُلُوٓا۟ أَمْوَٰلَكُم بَيْنَكُم بِٱلْبَٰطِلِ وَتُدْلُوا۟ بِهَآ إِلَى ٱلْحُكَّامِ لِتَأْكُلُوا۟
فَرِيقًا مِّنْ أَمْوَٰلِ ٱلنَّاسِ بِٱلْإِثْمِ وَأَنتُمْ تَعْلَمُونَ

''உங்களின் பொருட்களை உங்களுக்கிடையில் தவருன முறையில் உண்ணுகிறீர்கள். நீங்கள் தவறு செய்கிறீர்கள் என்பதை அறிந்துகொண்டே மனிதர்களின் பொருட்களில் ஒரு பங்கை பாபமாக உண்பதற்காக (இலஞ்சம் கொடுக்க) அத்துடன் அதிகாரிகளிடம் செல்லாதீர்கள்'' (2:188)

இலஞ்சத்தை ஒழித்த முன்னைய முஸ்லிம்கள் இலஞ்சத்தின் சாயல் படிந்தவற்றையும் ஒதுக்கி நடந்தார்கள் என்பதற்குப் பின்வரும் சம்பவம் ஓர் எடுத்துக்காட்டு:-

முஸ்லிம்களின் தர்மப் பணங்களைச் சேகரிக்கும் உத்தியோகத்தராக இப்னுல்லுத்பிய்யா என்ற ஸஹாபியை முஹம்மத் (ஸல்) அவர்கள் நியமித்தார்கள். தமது உத்தியோகத்தை நிறைவேற்றச் சென்ற இந்த ஸஹாபி, பெரும் திரளான பொருட்களுடன் திரும்பினுர். அவற்றையெல்லாம் முஹம்மத் (ஸல்) அவர்களிடம் இறக்கி வைத்து அவற்றிற் சில பொருட்களை வேருக எடுத்துக் கொண்டு மீதியை முஹம்மத் (ஸல்) அவர்களிடம் ஒப்படைத்து இவை முஸ்லிம்களிடமிருந்து தர்மமாகக் கிடைத்தவை என்றும் மற்றவை அவர்கள் தமக்கு சன்மானமாகத் தந்தவை என்றும் கூறினுர். இதைக்கண்ட முஹம்மத் (ஸல்) அவர்கள் கோபம் கொண்டார்கள். உடனே மக்களை அழைத்து பின்வருமாறு எச்சரிக்கை செய்தார்கள்:

''அல்லாஹ் என்மீது சுமத்திய பொறுப்புக்களை நிறைவேற்ற உங்களிற் சிலரை நான் நியமித்தேன். அவர் அவ்வேலையைச் செய்து முடித்து, பொருட்களைக்

கொண்டு வந்து வைத்து, 'இது உங்களுடையது; இது எனக்குக்கிடைத்த சன்மானம்' என்று கூறு கிறார். இவர் தர்மப் பொருட்களைச் சேர்க்கப் போகாமல் தன் வீட்டில் உட்கார்ந்திருந்தால் அச் சன்மானங்கள் இவர்க்கு வந்து சேருமா? அல் லாஹ்வின் மீது ஆணையாகக் கூறுகிறேன், அல்லாஹ் வின் பணியில் ஈடுபட்டுச் செல்லும் போது சன் மானம் பெறுவோர் அவற்றைத் தம் தோளிற் சுமந்து கொண்டு மறுமை நாளில் வருவார்கள். அது ஒட்டகையாயின் கனைக்கும், மாடாயின் கத் தும், ஆடாயிருந்தால் புழுக்கை போடும்''

இதைக்கேட்ட இப்னுல்லுத்பிய்யா (றளி) தாம் பெற்ற சன்மானப் பொருட்களையெல்லாம் கொண்டு வந்து முஹம்மத் (ஸல்) அவர்களிடம் ஒப்படைத்து விட்டார்கள். அப்பால் அப்பொருட்கள் யாவற் றையும் முஹம்மத் (ஸல்) அவர்கள் ஏழை முஸ் லிம்களுக்குக் கொடுத்து முடித்தார்கள்.

கலீபா உமர் (றளி) அவர்களின் ஆட்சியில் அரசாங்க உத்தியோகத்தர் எவரும் வர்த்தகம் போன்ற சுயமுயற்சிகள் மூலம் திரட்டியவற்றையும் சன்மானமாகப் பெற்றவற்றையும் அரசாங்க நிதியில் சேர்த்து விடுமாறு உத்தரவிட்டார்கள்.

பாகாணதிபதிகளாக இருந்தவர்களும் கலீபா வின் இந்த உத்தரவின்படியே நடத்தப்பட்டார்கள். பஸறாவின் அதிபதியாயிருந்த ஸஹாபியும் பஹ்றை னில் அதிபதியாகவிருந்த ஸஹாபியும் இவ்வுத்தர வுக்கிணங்க பெருந்தொகையான பொருட்களை அரசாங்க நிதியில் சேர்த்துவிட்டார்கள்.

அபூஹுறைறு (றளி) அவர்கள், பஹ்றைன் நாட்டு அதிபதியான பிறகு அதிகம் செல்வமுடையவராகிவிட்டார் என்ற செய்தி கலீபா உமர் (றளி) அவர்களுக்குக் கிடைத்தது. உடனே அபூஹுறைறு (றளி) அவர்களின் சொத்துக்களையெல்லாம் பரிசீலனை செய்து சந்தேகத்துக்கிடமானவற்றையெல்லாம் அரசாங்கத்திற் சேர்த்தும் விட்டார்கள். இது சம்பந்தமாக இருவருக்கும் இடையில் வாக்கு வாதம் ஏற்பட்டது. இந்த வாக்குவாதத்தில் உத்தமர் உமர் (றளி) அவர்களின் நேர்மை மிக்க ஆட்சியின் உருவத்தைக் காண்கிறோம்:

உமர் (றளி): உம்மை பஹ்றைனுக்கு அதிகாரியாக நியமித்தபோது உமது காலில் அணிய செருப்பும் இருக்கவில்லை. இப்பொழுது நீர் 1600 தீனர் கொடுத்து ஒரு குதிரை வாங்கியுள்ளதாய் அறிகிறேன்.

அபூஹுறைறு (றளி): ஆம் எங்களுக்கு ஒன்றல்ல பல குதிரைகள் உண்டு. நமக்கு ஏராளமான சன்மானங்கள் கிடைக்கின்றன.

உமர் (றளி): உமக்கு உணவுக்கும் ஏனைய தேவைகளுக்கும் போதிய பணத்தை அரசாங்கத்திலிருந்து பெற்றுக் கொள்ள நாம் ஏற்பாடு செய்திருந்தோமே!

அபூஹுறைறு (றளி): அப்படியானால் எனக்குக் கிடைத்த சன்மானங்களை யெல்லாம் உம்மிடம் ஒப்படைக்கவா சொல்கிறீர். அது முடியாது!

உமர் (றளி): முடியாது! அல்லாஹ்வின் மீது ஆணையாக உமது முதுகை உரிப்பேன் (எழுந்து, தம் கையிலிருந்த சாட்டையால் அபூஹுறைறு (றளி) அவர்களின் முதுகில் அடித்து) எங்கே அந்தப் பணம்?

அபூஹுறைறு (றளி)! நான் அவற்றையெல்லாம் தர்மம் செய்யப்போகிறேன்!

உமர் (றளி): நீர் சம்பாதித்து ஹலாலான முறையில் பொருள் திரட்டி அவற்றை உமது இஷ்டம் போல் தர்மம் செய்யலாம். பஹ்றைன் தேசத்தில் நீர் பணம் வசூலித்தீரா, அல்லாஹ்வின் பணியைச் செய்தீரா!

கூபாப் பகுதியில் கடமையாற்றிய ஸஃதுப்னு அபீவக்காஸ் (றளி) அவர்களின் சொத்துக்களும் கணக்கிடப்பட்டு அப்படியே செய்யப்பட்டது.

எகிப்து தேசத்தின் அதிபதியாயிருந்த அம்ருப்னுல் ஆஸ் அவர்களும் உத்தமர் உமர் (றளி) அவர்களின் விசாரணையிலிருந்து தப்ப முடியவில்லை. உமர்

(றளி) அவர்கள் ஒரு முறை பின்வருமாறு கடிதம் எழுதினார்கள்:

''உமக்கு அளவுக்கதிகம் பொருட்களும் கால் நடைகளும் இருப்பதாகக் கேள்விப்படுகிறேன். நீர் அங்கு பதவியேற்கச் சென்ற போது அப்படியொன் றும் இருக்கவில்லையே!''

இதற்கு அம்ருப்னுல் ஆஸ் (றளி) அனுப்பிய பதிலில், ''இது விவசாயமும் வர்த்தகமும் மலிந்த செல்வம் கொழிக்கும் நாடு. தேவையைவிடக் கூடு தலான வருவாய் நமக்குக் கிடைக்கிறது'' எனக் குறிப்பிட்டார்கள்.

இதைக்கண்ட உமர் (றளி) அவர்கள், ''பல தீய அதிகாரிகளின் செயல்களிலிருந்து நான் நிறைய அனுபவம் பெற்றுள்ளேன். உமது பதிலும் ஏதோ பயந்தவன் எழுதியது போல் தெரிகிறது. நான் உம்மீது சந்தேகம் கொள்கிறேன் உமது சொத்துக் களைப் பரிசீலனை செய்ய முஹம்மத்பின் மஸ்லமாவை அனுப்புகிறேன். அவர் கேட்கும் சகல விபரங்களை யும் நீர் கொடுக்க வேண்டும்'' எனப் பதில் எழுதி விட்டு அக்கணமே முஹம்மத் பின் மஸ்லமா (றளி) அவர்களையும் அனுப்பிவைத்தார்கள். அம்றுப்னுல் ஆஸ் அவர்களும் கலீபாவின் உத்தரவுக்கிணங்க தமது சொத்துக்களின் விபரங்களையெல்லாம் தெளி வாகக் கொடுத்தார்கள்.

இம்மண்ணுலகில் நீதியை நிலைநாட்டிய உத்த மர்களின் வாழ்க்கையில் இத்தகைய அற்புதமான சம்பாஷணைகளும் கடிதத்தொடர்புகளும் ஏராள மாகக் காண்கிறோம். முஸ்லிம்களின் அன்றைய

ஆட்சி முறையிலும் உண்மையான இஸ்லாமிய சட்டதிட்டங்கள் செயற்பட்டன. அதன் மூலம் இம்மண்ணும் விண்ணும் பிரகாசித்தன என்ற உண்மையை சரித்திரம் கூறுகிறது.

## கள்ளக் கடத்தல்

ஒரு ஊரிலிருந்து மற்றொரு ஊருக்கு நேர்மை யற்ற முறையில் பொருட்களைக் கடத்தலையே கள்ளக் கடத்தல் என்கின்றோம். இது இன்று உலகின் பல பாகங்களிலும் பல உருவங்களில் நடைபெறு வதைக் காண்கிறோம். இதை எந்த வகையிலும் இஸ்லாம் அனுமதிக்கவில்லை. ஒரு தேசத்தின் பொது நன்மையைக் கருதி விதிக்கப்பட்டுள்ள வர்த்தக விதிமுறைகளுக்கு மாறாக எடுத்துச் செல்லப்படும் எப்பொருளும் இதில் அடங்கும். ஆகவே நாட்டுப்பற்றும் நேர்மையும் உடைய ஒருவர் இதில் ஈடுபட முடியாது. முறையாகாது.

கடத்தல் என்னும் போது விமானக்கடத்தலும் இவ்வகையிற் சேரும். எமது நாட்டுப்பிரஜை செய்தார் என்ற காரணத்துக்காக இது ஒரு நேர்மை யான செயல் என்று கூறுவது தவறு. கடத்தப் பட்ட விமானத்துக்குள் பணயக் கைதிகளாய் வைக் கப்பட்டுக்கிடந்த நிரபராதிகளான பல நூறு பிர யாணிகளின் நெஞ்சங்கள் எப்படிப் பதறியிருக்கும்! தங்களுக்கு என்ன நடக்கப் போகிறதோ என்று தவிக்கும் இவர்களின் நிலையை அறிந்த உற்றார் உறவினர், மனைவி மக்கள் எப்படிப் பதறியிருப் பார்கள்! கைதிகளாக விமானத்துக்குள் அடை பட்டுக்கிடக்கும் இவர்களுக்கு ஏற்படும் உள, உடற் தாக்கங்களுக்கு எப்படி நஷ்டஈடு மதிப்பிடுவது?

இந்தத்தாக்கத்தால் எத்தனை பேர் நிரந்தர நோயாளியாகிவிட்டனரோ! இப்படி யோசிக்கும் போது இது ஒரு நியாயமற்ற செயல் என்பதை மிக இலகுவாய் உணர முடிகிறதல்லவா?

## பாகப்பிரிவினை

ஒருவர் இறந்துவிட்டால் அவர் விட்டுச் செல்லும் சொத்துக்கள் ஓரிரு நபரிடம் தேங்கிவிடாமல் அவற்றுக்குப் பலரும் பங்குதாரராக இஸ்லாம் மாத்திரமே ஒரு விரிவான பங்கீட்டு முறையை மனிதனுக்கு வகுத்துக் கொடுத்துள்ளது. சமூகத்திலும் இறந்தவரின் குடும்பத்திலும் ஒவ்வொருவருக்கும் உள்ள பொறுப்புக்களுக்கு ஏற்றவாறு இச்சொத்துக்கள் கூட்டியும் குறைத்தும் சமமாகவும் பிரிக்கப்படும் முறையை அல்குர்ஆன் மிகத் தெளிவாகக் கூறுகிறது. இவ்வளவு தெளிவான பாகப்பிரிவினை வேறு எந்தச் சமயத்திலோ நவீனப் பொருளியல் திட்டத்திலோ விளக்கப்பட்டதாகத் தெரியவில்லை. அல்குர்ஆன் கூறும் இத்திட்டத்தை மாற்ற எந்த அதிகாரிக்கும் அனுமதியில்லை. இதுபற்றி அல்குர்ஆன் பின்வருமாறு கூறுகிறது :

''உங்கள் சந்ததியில் ஆணும் பெண்ணும் இருந்தால் ஓர் ஆணுக்கு இருபெண்களுக்குரியது போன்ற பாகம் உண்டென்று அல்லாஹ் உங்களுக்குக் கட்டளையிடுகின்றான். அவர்கள் பெண்களாக மட்டுமிருந்து, அவர்கள் இருவராகவோ அதிகமாகவோ இருந்தால், இறந்தவர் விட்டுச் சென்றவற்றில் மூன்றில் இரண்டு பங்கைத் தங்களுக்குள் சமமாக அடைவார்கள். ஒரே பெண்ணிருந்தால் அவளுக்கு அச்சொத்தில் பாதியுண்டு. இறந்தவருக்குச் சந்ததியுமிருந்து அவ

ருடைய பெற்ருேருமிருந்தால், தாய், தந்தை ஒவ்வொருவருக்கும் அவர் விட்டுச்சென்ற சொத்தில் ஆறிலொரு பாகமுண்டு. இறந்தவருக்குச் சந்ததியில்லாமலிருந்து, பெற்ருர் மட்டும் அவருக்கு அனந்தரக்காரர்களாஞல், அவருடைய தாய்க்கு மூன்றிலொரு பாகந்தான். (மீதி தகப்பனைச் சாரும்.) இந்நிலையில், இறந்தவருக்கு சகோதரர்களுமிருந்தால், தாய்க்கு ஆறிலொன்றுதான். (இவையனைத்தும்) மரண சாசனத்தையும் கடனையும் நிறைவேற்றிய பின்னரே பங்கிடவேண்டும். உங்கள் தந்தையர் உங்கள் சந்ததியினர் ஆகியோரில் உங்களுக்குப் பலனளிப்பதில் மிக நெருங்கியவர் யார் என்பதை நீங்கள் அறியமாட்டீர்கள். ஆகவே இவை அல்லாஹ்விஞல் உங்களுக்கு விதிக்கப்பட்டவை. நிச்சயமாக அல்லாஹ் மிக அறிந்தோனும் ஞானமுடையோனுமாக இருக்கின்ருன்.'' (4:11)

''உங்கள் மனைவிமார் இறந்து அவர்களுக்குச் சந்ததி இல்லாவிட்டால், அவர்கள் விட்டுச் சென்றதில் உங்களுக்குப் பாதி உண்டு. அவர்களுக்குச் சந்ததியிருந்தால், அவர்கள் விட்டுச் சென்றதிற் காற்பங்குதான் உங்களுக்குண்டு. அதுவும் அவருடைய மரண சாசனத்தையும் கடனையும் நிறைவேற்றிய பின்னர்தான். உங்களுக்குச் சந்ததியில்லாத நிலையில் நீங்கள் இறந்துவிட்டால், நீங்கள் விட்டுச் சென்றதிற் காற் பாகம்தான் அவர்களுக்கு. உங்களுக்குச் சந்ததியிருந்தால் நீங்கள் விட்டுச் சென்றதில் எட்டிலொரு பாகந்தான் அவர்களுக்கு. அதுவும் உங்கள் மரண சாசனத்தையும் கடனையும் கொடுத்த பின்னர்தான். (தகப்பன், பாட்டன்,

பிள்ளை, பேரர் ஆகிய) வாரிசுகள் இல்லாத ஓர் ஆணோ பெண்ணோ இறந்து, அவர்களுக்குத் தாய் ஒன்றான ஒரு சகோதரன் அல்லது சகோதரி இருந்தால், அவர்களில் ஒவ்வொருவருக்கும் இறந்தவர் விட்டுச் சென்றதில் ஆறிலொரு பாகமுண்டு. இத்தகைய சகோதர சகோதரிகள் பலர் இருந்தால் அச்சொத்தில் மூன்றில் ஒருபாகத்தில் இவர்கள் சமமாகப் பங்கு கொள்வர். இதுவும் அவருடைய மரண சாசனத்தையும் கடனையும் கொடுத்த பின்னரே. எனினும் (மரண சாசனத்தால் வாரிசுகளுக்கு) நஷ்டத்தை உண்டுபண்ணாதவனாக இருக்க வேண்டும். இது அல்லாஹ்வின் கட்டளையாகும். அல்லாஹ் நன்கறிந்தோனும் மிகப் பொறுமையுடையோனுமாக இருக்கின்றான்.'' (4:12)

''இவை அல்லாஹ்வின் வரம்புகளாகும். எவர் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் வழிப்பட்டு நடக்கின்றாரோ, அவரை நீரருவிகள் சதா ஓடிக்கொண்டிருக்கும் சுவனபதிகளில் அவன் சேர்க்கின்றான். அவற்றில் அவர்கள் என்றென்றும் தங்கி விடுவார்கள். இது மகத்தான வெற்றியாகும்.'' *(4:13)*

''எவன் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் மாறு செய்து, அவன் வகுத்த எல்லைகளை மீறுகின்றானோ அவனை நரகத்திற் புகுத்திவிடுவான். அதில் அவர்கள் என்றென்றும் தங்கிவிடுவர். அன்றி இழிவுபடுத்தும் வேதனைகளும் அவர்களுக்குண்டு.'' *(4:14)*

நாட்டின் செல்வம் ஒரு சிலரிடம் தேங்கிக் கிடந்து மற்றவர்க்குப் பயனற்ற முறையில் அச்

சிலர் மாத்திரம் தம் மனம்போன போக்கிற் செல விடக் கூடாது என்பதற்காக, ஒருவர் தன் சொத் துக்களைத் தனக்குப்பின் சில குறிப்பிட்டவர்க்கு உயில் எழுதிவைத்தலை இஸ்லாமிய அறிஞர்கள் அங்கீகரிக்கவில்லை. ஏனெனில் இத்தகைய செயல் களால் இஸ்லாமிய பாகப்பிரிவினை முறை பாதிக் கப்படுகின்றது.

ஒருவர் தன் சொத்திலிருந்து சட்டப்படி சேர வேண்டியதை விடக் கூடுதலாக ஒருவருக்குக் கொடுக்குமாறு மரண சாசனம் எழுத இஸ்லாம் அனுமதிக்கவில்லை. பாகப்பிரிவினை பெறும் அனந் தரருக்கு மரணத்தின்போது வஸீய்யத்துச் செய்து சொத்துக்களைக் கொடுக்கக் கூடாது என்று முஹம் மத் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். பாகப்பிரி வினை பெற உரிமையற்றவர்க்கு ஒருவர் தன் சொத் துக்களில் மூன்றிலொரு பாகத்திற்கதிகமாக வஸிய் யத்துச் செய்யவும் முடியாது.

முஹம்மத் (ஸல்) அவர்கள், நோயுற்றிருந்த தோழர் ஸஃதுப்னு அபீ வக்காஸ் (றளி) அவர்க ளைப் பார்க்கச் சென்றார்கள். அப்பொழுது மிக்க வருத்தத்தோடிருந்த ஸஃத் (றளி) அவர்கள், ''அல் லாஹ்வின் தூதரே, என்னுடைய நிலையை நீங்கள் பார்த்தீர்கள்தானே. எனக்கு வாரிசாக ஒரே யொரு மகள்தான் இருக்கிறாள். எனக்கு நிறைய செல்வங்களிருக்கின்றன. அவற்றில் மூன்றில் இரண்டு பங்கை நான் தர்மம் செய்துவிடட்டுமா?'' என்றார்கள். ''வேண்டாம்'' என்றார்கள் முஹம் மத் (ஸல்) அவர்கள். யாறஸூலல்லாஹ், ''அப் படியானால் அரைவாசியை தர்மம் செய்யலாமா?''

என்றூர்கள் ஸஃத் (றளி). ''முடியாது'' என்றூர்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள். அப்படியாஞல் மூன்றிலொரு பகுதியைத் தர்மம் செய்யலாமா?'' என்றூர்கள் ஸஃத் (றளி) அவர்கள். இதைக்கேட்ட அல்லாஹ்வின் தூதர் முஹம்மத் (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறிஞர்கள்:

''மூன்றிலொன்றும் அதிகம்தான். நீர் உமது அனந்தரகாரர்களை செல்வந்தர்களாக விட்டுச் செல்வது, அவர்களை கைநீட்டித் திரியும் ஏழைகளாக விடுவதைவிட மேலானது. நீர் அல்லாஹ்வின் திருப்பொருத்தத்தை நாடி எந்தச் செலவு செய்தாலும் அதற்காக உமக்கு நிச்சயமாக கூலி கொடுக்கப்படும். அது உமது மனைவியின் வாயில் நீர் வைக்கும் உணவாக இருந்தாலும் சரியே'' என்றூர்கள்.

இவையெல்லாம் பன்ஞூறு வருடங்களுக்கு முன்பே இஸ்லாம் மனித குலத்துக்குத் தந்த சட்டங்களாகும். ஆஞல் இன்றைய நவீன உலகில் ஒருவர் தன் முழுச் சொத்தையும் தன் மக்களில் ஒருவருக்கோ சிலருக்கோ கொடுத்து விடுகிறூர். அல்லது தனக்குப் பிடித்த வேறு மனிதனுக்குக் கொடுத்து விடுகிறூர். அவர் அதைத் தன் மனம்போனவாறு செலவு செய்கின்றூர். ஏனைய உறவினரும் ஏழைகளும் அதைக் கண்டு கலங்குவதையும் சில சந்தர்ப்பங்களில் பல குடும்பப்பகைகளும் போராட்டங்களும் தோன்றுவதைப் பார்க்

கின்றோம். இஸ்லாம் கூறும் முறையைப் பின்பற்றும்போது இவ்வாறான அவலநிலை தோன்ற இடமில்லை.

## வரிகள்

பல்வகை வருவாய்களுக்கும் இஸ்லாம் வரி முறைகளை வகுத்துள்ளது. இதுபற்றிய பூரண விளக்கம் பிக்ஹ் எனப்படும் சட்டக்கலை நூல்களில் தெளிவாகக் கொடுக்கப்பட்டுள்ளது. இச்சட்டங்கள், பொதுவாகப் பொருளியல் நலன்களை மக்களுக்குப் பகிர்ந்தளிக்கவும்,வறுமை நீக்கவும் பொருட்தேக்கத்தைத் தடுக்கவும் வழிவகுக்கின்றன. வரிகள் யாவற்றையும் இங்கே விளக்குவதைத் தவிர்த்து, சில முக்கியமானவற்றை மாத்திரம் சுருக்கிக் கூறுகிறோம்:

காணிவரி: அரசாங்க நிலங்களில் பயிர் செய்வோர் செலுத்த வேண்டியவரி. இது கால, தேச, வர்த்தமானங்களுக்கமைய இஸ்லாமிய ஆட்சியாளரால் நிர்ணயிக்கப்படும்.

கலீபா உமர் (றளி) அவர்களின் ஆட்சிக்காலத்தில் இறுக் தேசத்தில் பின்வரும் விகிதத்தில் நிலவரி விதிக்கப்பட்டிருந்தது: 1800 சதுர யார் பரப்புள்ள நிலத்துக்கு அதில் மரக்கறி பயிரிடப்படுவதாயின் ஐந்து திர்ஹம், பேரித்தம், திராட்சை பயிரிடப்படுவதாயின் பத்து திர்ஹம். கோதுமை போன்ற தானிய

வகைகள் பயிர் செய்யப்படுவதாயின் தண்ணீர் வசதியிருப்பின் ஒரு திர்ஹம் அல்லது இரண்டு கொத்து தானியம்.

இவ்வாறு வசூலிக்கப்படும் வரிகள் யாவும் அரசாங்கத்துக்கு உரியதே அன்றி ஆட்சியாளருக்கோ அதிகாரிகட்கோ உத்தியோகத்தர்க்கோ உரியதல்ல. இவை யாவும் திறைசேரிக்கும் அரசின் களஞ்சியத்துக்கும் சென்று அங்கிருந்து பொது மராமத்து வேலைகளுக்குச் செலவிடப்படும்.

கனிப்பொருள் வரி: தனிமனிதனுக்குச் சொந்தமான நிலங்களிலிருந்து தங்கம், வெள்ளி போன்ற உலோகப் பொருட்களோ எண்ணெயோ தோண்டி எடுக்கப்பட்டால் அவை அந்நிலமுடையாருக்கே உரியன. அரசின் நிலத்திலிருந்து தோண்டப்பட்டாலும் தோண்டியவர்க்கே உரியன. ஆனால் ஐந்திலொரு பங்கு அரசாங்கத் திறைசேரிக்குச் செலுத்தப்பட வேண்டும்.

மனிதனின் சாதாரண தேவைகளுக்கு உலோகப்பொருட்கள் உபயோகித்தல் அறிமுகமில்லாத அக்காலத்திலே இச்சட்டங்கள் இஸ்லாமிய ஆட்சியில் செயல்பட்டு

வந்துள்ளன என்று சரித்திரம் கூறுகிறது.

பொது நலன் கருதி இத்தகைய வளங்களைத் தோண்டி எடுக்கும் வேலையை அரசாங்கமே மேற்கொள்ளவும் இஸ்லாம் அனுமதிக்கிறது.

வேட்டைவரி: கடலிலோ கரையிலோ வேட்டையாடப்படும் பொருட்களுக்கு ஒரு குறிப்பிட்ட வரியை இஸ்லாம் விதிக்கவில்லை. ஆயினும் முத்து, பவளம், அம்பர் போன்ற பொருட்களில் ஐந்திலொரு பங்கு செலுத்தப்பட வேண்டுவென்று சட்ட வல்லுனர்களான இமாம்கள் கூறுகின்றனர். கலீபா உமர் (றளி) அவர்கள், முத்துக் குளிப்போரிடமும் அம்பர் வேட்டையாடுவோரிடமும் தாம் கொண்டு வந்ததில் ஐந்திலொரு பங்கை பைத்துல்மால் எனும் அரசாங்க நிதிக்குச் செலுத்துமாறு கட்டளையிட்டுள்ளார்கள்.

சுங்கவரி: ஒரு குறிப்பிட்ட வழியால் அல்லது துறைமுகத்தினூடாக அல்லது கால்வாய் வழியாக வர்த்தகம் போன்றவற்றுக்காக பொருட்கள் கொண்டு செல்வதற்கோ அல்லது கொண்டு வருதற்கோ துறைமுகம் போன்றவற்றில் பொருட்களை வைக்கப்படுவதற்காக வசூலிக்கப்படும் வரிகள்

இவ்வகையிற் சாரும். இஸ்லாமிய ஆட்சியாளர்கள் இவ்வகையான வரியை பத்து வீதம்வரை வசூலித்துள்ளதாக சரித்திரங்களிற் காணப்படுகின்றது.

உற்பத்தி வரி: நாணயங்களை அச்சிடல், தொழிற்சாலைகள் மூலம் பல்வேறு பொருட்களை உற்பத்தி செய்தல் முதலானவற்றுக்கு விதிக்கப்படும் வரிகள் யாவும் இவ்வகையைச் சேரும். இவற்றுக்கு இஸ்லாமிய ஆட்சி முறையில் பொது மக்களின் நன்மையை அடிப்படையாக வைத்து வரி விதிக்கப்பட்டு வந்துள்ளது. பொது நலன் கருதி இவற்றை அரசாங்கமே பொறுப்பேற்று உற்பத்தி செய்வதில் தவறில்லை.

ஏனைய வரிகள்: நாட்டின் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுள்ளவர்கள், மக்கள் நலனை முன்னிட்டு, பொது வேலைகளைச் சிறப்பாகச் செய்யத் தேவையான பணத்தைப் பெறும் பொருட்டு மேலும் பல வரிகளை விதிக்க முடியும். இத்தகைய வரிகள் யாவும் இஸ்லாமிய அடிப்படை ஏவல் விலக்கல்களுக்கு முரணாக அமையக் கூடாது என்பது இஸ்லாமிய ஆட்சி முறையிற் பேணப்படவேண்டியதாகும். அப்படியே தேவை முடிந்ததும் இத்தகைய வரிகளை நிறுத்தி மக்களின்

வரிப்பளுவைக் குறைப்பதிலும் இஸ்லாமிய ஆட்சியாளர் கவனமாயிருக்கவேண்டும்.

ஸக்காத்: இது இஸ்லாத்தின் அடிப்படையான கடமைகளில் ஒன்று. இஸ்லாத்தின் ஐந்து தூண்களில் ஒன்று. இது மிகக் கவனமாகவும் முறையாகவும் செலுத்தப்படுதற்கு வழிவகை செய்தல் இஸ்லாமிய ஆட்சியாளரின் கடமையாகும். இஸ்லாமிய ஆட்சியில்லாத சூழலில் முஸ்லிம்கள் இக்கடமையை சிறப்பாக உரிய முறையில் நிறைவேற்ற வழிவகுத்துக் கொள்ளல் கட்டாயமாகும்.

خُذْ مِنْ أَمْوَالِهِمْ صَدَقَةً تُطَهِّرُهُمْ وَتُزَكِّيهِمْ بِهَا

''அவர்களின் பொருட்களிலிருந்து தர்மத்தை எடுப்பீராக. இதனால் நீர் அவர்களைத் தூயவர்களாக்கி வளர்ச்சியடையச் செய்கின்றீர்''. (9–103)
ஸக்காத் செலுத்துவதை வற்புறுத்தும் வசனங்கள் அல்குர்ஆனின் பல்வேறு அத்தியாயங்களில் இருநூற்றுக்கு மேல் உண்டு.

ஸக்காத் ஒரு தர்மம் அல்ல; அது ஒரு கட்டாயக் கடமை அது நபர்மீதுள்ள வரியல்ல; அது குறித்த நிபந்தனைகள் பூரணமான செல்வத்தின் மீதுள்ள கடமை வரி. ஆகவே சிறுவர், அனாதையர் முதலானோருக்குரிய செல்வங்களிலும் உரிய முறையில் ஸக்காத் செலுத்தும் பொறுப்பு, இவர்களைப் பாதுகாத்து வளர்க்கும் பொறுப்பாளர் மீது உண்டு.

இஸ்லாமிய ஆட்சியில் ஸக்காத்தை விரும்பியவர் விரும்பியவாறு செலுத்தலாம் என்று விட்டு விட முடியாது. உரிய முறையில் இது அறவிடப்பட்டு, இதற்கு உரியவர்களுக்கு முறையாகப் பங்கிட ஒழுங்கு செய்யப்பட வேண்டும். இவற்றை ஒழுங்காக நிறைவேற்றத் தவறுவோர் மீது சட்ட நடவடிக்கையும் மேற்கொள்ள வேண்டும்.

முஹம்மத் (ஸல்) அவர்கள் காலத்தில் ஸக்காத் ஒழுங்காக அறவிடப்பட்டு, நபி (ஸல்) அவர்களிடம் கொண்டுவந்து ஒப்படைக்கப்பட்டதும், அவர்களே அவற்றை உரிய மக்களுக்கு இயன்றளவு சீக்கிரமாக ஒப்படைத்து வந்துள்ளார்கள்.

நபி (ஸல்) அவர்கள் இவ்வுலக வாழ்க்கையை முடித்துக் கொண்ட பின்பு இஸ்லாமிய மக்களின் ஏகத்தலைவராக–கலீபாவாக அபூபக்கர் (றளி) அவர்கள் தெரிவு செய்யப்பட்டார்கள். இந்தக் கட்டத்தில் சிலர் தங்கள் ஸக்காத்தை முறையாகச் செலுத்துவதில் சற்று தாமதம் காட்டினார்கள். நாம் தொழுகை, நோன்பு ஹஜ் போன்ற கடமைகளை நிறைவேற்றிக் கொள்கிறோம் ஆனால் ஸக்காத் செலுத்த எம்மை வற்புறுத்தக் கூடாது என்று கூறினார்கள். (இதுவும் அன்றைய யூதர்களின் ஊடுருவலின் பயனாக எழுந்த கருத்துமாற்றம் என்பது குறிப்பிடத்தக்கது.) ஆனால் கலீபா அபூபக்கர் (றளி) அவர்கள், இவர்களுக்கு இவ்விஷயத்தில் சற்றும் விட்டுக் கொடுக்கவில்லை. இஸ்லாத்தின் ஆரம்ப வளர்ச்சிப் படியில் நிற்கும் நாம் இவ்விஷயத்தில் சற்று விட்டுக் கொடுத்தால், நல்லது என்று ஆலோசனை கூறப்பட்டது. இதை அவர்கள் ஏற்க

வில்லை. அல்லாஹ்வின் தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களிடம் எவ்வாறு முறையாக ஸக்காத் செலுத்தப்பட்டதோ, அவ்வாறே தங்கள் ஸக்காத்தை செலுத்த மறுப்பவர்களை எதிர்த்து வாளேந்திப் போர் புரியவும் நான் தயங்கமாட்டேன் என்று கண்டிப்பாகக் கூறினார்கள். எனவே எல்லோரும் முறையாக ஸக்காத்தை செலுத்தி வந்தார்கள்.

وَوَيْلٌ لِّلْمُشْرِكِينَ ۝٦ الَّذِينَ لَا يُؤْتُونَ الزَّكَوٰةَ وَهُم بِالْآخِرَةِ هُمْ كَٰفِرُونَ

''அல்லாஹ்வுக்கு இணைவைப்போருக்குக் கேடுதான். இவர்கள் ஸக்காத் கொடுக்காதவர்கள். இவர்கள் தான் மறுமையையும் மறுப்பவர்கள்'' (41:67)

இங்கே, ஸக்காத்தை கொடுக்கத் தவறுவோரை அல்லாஹ்வுக்கு இணைவைக்கும் கொடியவர்கள் என்று அல்லாஹ் குறிப்பிடுவது கவனித்தற்பாலது. அல்லாஹ் மனிதனின் எத்தவறை மன்னித்தாலும் அவனுக்கு இணைவைத்தலை மன்னிப்பதில்லை என்று கூறியுள்ளான். அப்படியானால், அத்தகைய கொடியவர்களுடன் இவர்களைச் சேர்த்துக் கூறுகின்ற அல்லாஹ், ஸக்காத்தை எவ்வளவு முக்கியமாகக் கருதுகிறான் என்று நாம் சிந்தனை செய்வோமாக.

அன்று சில சஹாபாக்கள் கூறிய ஆலோசனையின்படி இந்த ஸக்காத்தைச் செலுத்த மறுத்தவர்களை, கலீபா அபூபக்கர் (றளி) அவர்கள் சும்மா விட்டிருந்தால் இஸ்லாமிய சரித்திரத்திலிருந்து ஸக்காத் அன்றே எடுபட்டுப் போயிருக்கும். அப்பால் இந்த ஸக்காத் மூலம் சாதிக்கப்பட்ட சாதனைகளைப் பற்றி இஸ்லாமியப் பொருளாதாரம் பெருமைப் பட்டிருக்குமா? இது நமக்கு ஒரு நல்ல பாடத்தைப்

போதிக்கிறது. நாட்டின் பொருளாதார நிலைகளை யும் ஏனைய மாற்றங்களையும் கண்டு அவைற்றிற் கிணங்க இஸ்லாமியக் கடமைகளையும் ஏனைய திட் டங்களையும் மாற்றியமைக்க வேண்டுமென்று அபிப் பிராயப்படுவோர் பலர். அதைப் பகிரங்கமாகப் பேசி, சாதிக்க முனைவோர் சிலர். இத்தகைய மேதைகள் நம் சமூகத்திலும் இருக்கின்றனர். சென்ற பதின்மூன்று நூற்றாண்டுகளாக வாழ்ந்த இத்தகைய புத்திசாலிகள் தங்கள் கட்டைப் புத் திக்கேற்ப ஒவ்வொரு விஷயத்திலும் சீர்திருத்தம் செய்து வந்திருந்தால் அன்றைய உண்மை இஸ்லாத் தின் சுயரூபத்தில் ஏதாவது இன்று நமக்கு மிஞ் சியிருக்குமா என்று ஒரு கணம் சிந்திப்போமாக. ஆகவே உண்மையான இஸ்லாமியக் கொள்கைகளும் கோட்பாடுகளும் தமக்குப் பிடிக்கவில்லையென்று கரு தும் புத்திசாலிகள் அவர்களின் புத்திக்கேற்ப அல் லாஹ்வின் போதனைகளை மாற்ற முனையும் பயங்கர விளையாட்டை விட்டு தமக்குப் பிடித்தபடி செய்து கொள்ளலாம். அது அவருடைய விருப்பம். இன்று பல மேதாவிகள் இப்படிச் செய்து கொண்டுதானி ருக்கிறார்கள். இவர்களிடம் கேட்டுக் கொள்வது என்னவென்றால், உங்கள் இந்த நிலையைப் பகிரங் கமாகச் சொல்லி இஸ்லாமியக் கட்டுக்கோப்பிலி ருந்து துணிந்து வெளியேறிவிடுங்கள். அப்பொ ழுது இத்தகையோர் செய்யும் கிருத்தியங்களெல் லாம் இஸ்லாம்தான்; ஏனெனில் இவர்களும் முஸ் லிம்கள் தானே என்று ஏமாந்துள்ள மக்களுக்கு உங்கள் சுயரூபம் தெளிவாகிவிடும். உங்கள் குருட்டு ஞானத்தை இஸ்லாமென்று கூறி நீங்கள் சில நன் மைகளை அடைவது நயவஞ்சகச் செயலாகும். இத்

தகைய குருட்டுத் தத்துவங்களை இஸ்லாம் என்று கூறி அப்பாவி மக்களை வழிகெடுத்தல் துரோகச் செயலாகும்.

மக்களின் பொருளாதார ஏற்றத் தாழ்வுகளைச் சமப்படுத்தி ஏழை எளியவர்க்கு தனவந்தரின் சொத்துக்களில் சட்டபூர்வமான ஒரு பங்கை நிர்ணயித்துக் கூறும் ஓரேயொரு மார்க்கம் இஸ்லாம் தான் என்றால் அது மிகையாகாது. ஏனெனில் ஸக்காத் எடுக்கவேண்டிய முறைகளையும் கொடுக்க வேண்டிய ஒழுங்குகளையும் கொடுக்கப்பட வேண்டிய மக்களையும் இஸ்லாம் மிகத் தெளிவாகக் கூறுகிறது. இதை மாற்றியமைக்க எந்த ஆட்சிக்கும், அதிகாரிக்கும் அனுமதியில்லை.

إِنَّمَا ٱلصَّدَقَٰتُ لِلْفُقَرَآءِ وَٱلْمَسَٰكِينِ وَٱلْعَٰمِلِينَ عَلَيْهَا وَٱلْمُؤَلَّفَةِ قُلُوبُهُمْ وَفِى
ٱلرِّقَابِ وَٱلْغَٰرِمِينَ وَفِى سَبِيلِ ٱللَّهِ وَٱبْنِ ٱلسَّبِيلِ فَرِيضَةً مِّنَ ٱللَّهِ وَٱللَّهُ عَلِيمٌ حَكِيمٌ

''ஸக்காத் எனும் தானங்களெல்லாம், தரித்திரர்க்கும், ஏழைகட்கும் ஸக்காத் பணியில் வேலைசெய்வோருக்கும் புதிதாக இஸ்லாத்தைத் தழுவியவர்க்கும் அடிமைகளை விடுதலை செய்தற்கும், கடன்பட்டோர்க்கும் அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் செய்வதற்கும், பிரயாணிக்கும் அல்லாஹ் விதித்த கடமை என்ற முறையில் உரித்தானவை. அல்லாஹ் மிக்க அறிந்தோனும் ஞானமுடையோனுமாயிருக்கிறான்'' (9:60)

இந்த அல்குர்ஆன் வசனத்தின்படி பின்வருவோர் ஸக்காத்தைப் பெற உரித்துடையோராகின்றனர்:—

1. <u>பரம தரித்திரர்:</u> வாழ்க்கைத் தேவைகளில் அடிப்படை வசதிகள் கூட இல்லாமல் வாடுவோர்.

இவர்கள், பக்கீர் (ஒருமை) புக்கரு (பன்மை) என அழைக்கப்படுகின்றனர். இத்தகைய ஏழைகள் பற்றுக்குறையால் துன்புறும் மூன்றும் உலக நாடுகளில் இலட்சக் கணக்கிலும் கோடிக் கணக்கிலும் இருக்கின்றனர். செல்வம் கொழிக்கும் அமெரிக்கா, குவைத் போன்ற நாடுகளிலும் இருக்கின்றனர்.

2. ஏழைகள்: தமது சாதாரணத் தேவைகள் யாவற்றையும் பூரணமாக பெற்றுக் கொள்ளாதவர்கள். இன்றைய உலகில் இத்தகையோர்தான் பெரும்பான்மையினர் என்று கூறலாம். தமது அத்தியாவசியப் பொருட்கள் நூற்றுக்கு நூறும் முற்றாகப் பெற்றுக்கொள்ள முடியாத நிலையில் உள்ளவர்கள், இக்குழுவிற் கணிக்கப்படலாம். இத்தகையோர் மிஸ்கீன் (ஒருமை) மஸாக்கீன் (பன்மை) என அழைக்கப்படுகின்றனர்.

3. ஆமில்கள்: ஸக்காத் அறவிடுதல், ஒழுங்குபடுத்தல், பங்கீடு செய்தல் போன்ற வேலைகளைச் செய்வதற்காக நியமனம் செய்யப்படும் உத்தியோகத்தர்கள். இத்தகைய உத்தியோகத்தர்க்கு நியாயமான வேதனம் ஸக்காத்திலிருந்தே வழங்கலாம். அரசாங்கங்கள் மாத்திரம் தான் இத்தகைய உத்தியோகத்தரை நியமிக்கலாம் என்பதில்லை. ஸக்காத் கொடுக்கும் தனி நபரும், ஸக்காத்தை முறையாகத் திரட்டி உரியவர்க்கு வினியோகிப்பதில் ஈடுபடும் ஸ்தாபனங்களும், இவ்வேலைக்குத் தேவையான உத்தியோகத்தர்களை வேலையாட்களை நியமித்து அவர்களுக்குரிய கூலியை ஸக்காத்திலிருந்து வழங்கலாம். இத்தகையோர் ஏழைகளாயிருக்கவேண்டும் என்பதில்லை.

இப்படியொரு சாராருக்கும் ஸக்காத் கொடுக்க வேண்டும் என்று வற்புறுத்துவதிலிருந்து நாம் விளங்கிக்கொள்வதென்ன? ஸக்காத்தை ஏனோ தானோ என்று பொறுப்பற்ற முறையில் எப்படியாவது எவருக்காவது கொடுத்தால் கடமை தீர்ந்து விடாது. அதை ஒரு ஸ்தாபன ரீதியாகத் திட்டமிட்டு உரியவர்க்கு முறையாகக் கொடுக்க ஒழுங்கு செய்ய வேண்டும். ஆட்சியமைப்பு இல்லாத போதும் அதை அழகாகச் செய்தாற்றான் அதனால் எதிர்பார்க்கப்படும் பொருளாதார நன்மைகள் சமுதாயத்துக்கு ஏற்படும். ஒரு தனிநபர் தன் ஸக்காத்தை வினியோகிக்க உதவிக்கு ஆள் தேடத் தேவையில்லை. சட்டபூர்வமாக தன்னிடமுள்ள ஸக்காத்திலிருந்தே கூலியைக் கொடுக்க ஒழுங்கு செய்து கொள்ளலாம். தம் சொந்தப் பணத்திலிருந்து கொடுக்கத்தேவையில்லை.

<u>4. புதிதாய் இஸ்லாத்தைத் தழுவியோர்:</u> இத்தகையோர் சாதாரணமாக தம் உற்றார் உறவினர், சுற்றம் சூழல் என்பவற்றைப் பிரிந்தமையால் மனத் தாக்கத்தோடிருக்க, இலட்சிய அடிப்படையில் இஸ்லாமிய வாழ்க்கை முறையை ஏற்றதனால் பலவகையான தாக்கங்களைச் சமாளிப்பதோடு பொருளாதாரத் தாக்கமும் இருக்கலாம், இஸ்லாமிய சமூகத்தில் தான் புதியவன்தானே என்ற தாழ்வுச்சிக்கல் இவர்களுக்கு உண்டாகலாம்; அல்லது பண்பாடு குறைந்த முஸ்லிம்களால் இப்படி நடத்தப்படலாம். அல்லது இஸ்லாத்துக்கு ஊறு விளைவிக்க எண்ணங் கொண்டு இஸ்லாத்திற் பிரவேசிப்பவராயிருக்கலாம். இத்தகைய எல்லா வகையான தாக்கத்திலிருந்தும் இவர்களை கரைசேர்த்து நான் சேர்ந்த சமூகத்தில்

எனக்கொரு பங்கு நிச்சயம் உண்டு என்ற எண்ணத்தோடு தலைநிமிர்ந்து வாழவைப்பது இதன் நோக்கங்களில் ஒன்று. ஸக்காத் நிதி நிலைமை இடம்தருமாளுல் இவர்களுக்கு தேவையான உதவிகளையெல்லாம் செய்து கொடுக்கலாம்.

சில சந்தர்ப்பங்களில் இந்த உதவி அல்லது கடமை துஷ்பிரயோகம் செய்யப்படுவதும் உண்டு. இஸ்லாத்தைத் தழுவிய சிலர் இருபது வருடங்களுக்கு மேலாக தாம் இஸ்லாத்தைத் தழுவியதைச் சொல்லி உதவிகளை பெற்றே சோம்பேறி வாழ்க்கை நடத்துகின்றனர். வேறு சிலர் இஸ்லாத்தைத் தழுவியபோது தமக்குக் காட்டப்பட்ட இத்தகைய அன்பையும் ஆதரவையும் பயன்படுத்திப் பழகி சமூகத்துக்கும் நாட்டுக்கும் எவ்விதத்திலும் பயன்படாத சாப்பாட்டு ராமன்களாக மாறிவிடுகின்றனர். வேறு சிலர் தாடியும் தலைப்பாகையும் ஜுப்பாவையும் அணிந்துக்கொண்டு அப்பாவி மக்களை ஏய்த்துப் பிழைப்பதுடன் சந்தர்ப்பம் வாய்க்கும்போது சில தீய செயல்களிலும் இறங்கிவிடுகின்றனர். இத்தகையோர் உண்மையிலேயே இஸ்லாத்தை உணர்ந்து இஸ்லாத்தைத் தழுவினூர்களா, அல்லது இஸ்லாத்தைத் தழுவிய பிறகாவது இந்த வாழ்க்கைத்திட்டத்தை விளங்கிக்கொண்டார்களா; அல்லது விளங்கிக்கொள்ள விரும்புகிருர்களா? என்பது அவதானிக்கப்படவேண்டிய ஒன்ருகும். தங்கள் முன்னைய சமூகக் கட்டுப்பாடுகளிலிருந்து தம்மை விடுவித்துக் கொள்வது, மற்றவரின் உழைப்பில் சோம்பேறி வாழ்க்கை நடத்தல், யாசகம் போன்றவற்றில் நிரந்தரமாய் ஈடுபடல், தமது காதல் விவகாரங்களைச் சாத்தியப்படுத்தல் போன்ற அற்ப நோக்கங்களோடு

இஸ்லாத்தைத் தழுவும் சிலர் இஸ்லாத்தைப்பற்றியும் முஸ்லிம்களைப் பற்றியும் தவறான கருத்துக்களையும் தப்புமனப்பான்மையையும் பிற சமயத்தவர் மத்தியில் உருவாக்கவும் வளர்க்கவும் காரணமாகின்றனர்.

ஆகையால், ஒருவர் இஸ்லாத்தைத் தழுவ விரும்புகிறார் என்ற மாத்திரத்திலேயே அவருடைய பேச்சில் மயங்கிவிடாமல், அவருடைய இஸ்லாமிய அறிவு, அவருடைய தற்போதைய சூழல் என்பவற்றை அவதானித்து உண்மையிலேயே அவர் சத்தியத்தை விளங்கி ஏற்று அதைப் பின்பற்றி இம்மையிலும் மறுமையிலும் ஈடேற்றம் பெறத்தான் ஆசைப்படுகிறாரா; அல்லது மேலே கூறப்பட்டவை போன்ற அற்ப ஆசைகளுக்குத் தன் சமயத்தையும் சமூகத்தையும் விற்று இஸ்லாத்தின்மீது மாசு கற்பிக்கப் போகிறாரா? என இயன்றவரை அவதானித்து ஏமாற்றும் நோக்கம் இல்லை என்றுவது திருப்திப்படுமுன் அத்தகையோருடைய இவ்விஷயத்தில் உதவாதிருப்பதுதான் இஸ்லாத்துக்குத் தாம் செய்யும் சேவை என்ற உண்மையை தஃவா என்ற சேவையில் இறங்கும் ஸ்தாபனங்களுக்கும், முஸ்லிம் விவாகப் பதிவாளர்களுக்கும் குறிப்பாகவும், ஏனைய சகோதரர்க்குப் பொதுவாகவும் கூறிக்கொள்கிறோம்.

இத்தகைய சுயநலமிகள், இஸ்லாத்தைத் தழுவும் கூட்டத்தில் மாத்திரம்தான் இருக்கிறார்கள் என்று நாம் நினைத்துக் கொள்ளக்கூடாது. புத்த பிக்குவாக நடித்து பௌத்த சகோதரர்களை நீண்ட காலம் ஏமாற்றியவர்களைப் பற்றி நாம் கேள்விப்படவில்லை. இவர்களும் பெயரளவில் முஸ்லிம்கள் என்றுதான் கருதப்பட்டனர். இஸ்லாமியர் கொள்

கைகளுக்கு முற்றிலும் முரணான கருத்துக்களைப் பேசும் சில முர்த்தத்துகளும் தம்மை முஸ்லிம்கள் என்கின்றனர். கிறிஸ்த்தவ பாதிரியாக சமயசேவை யிலேயே ஈடுபடும் ஒருவர், தன் பரம்பரை முஸ் லிம் பெயரைக் கூட மாற்றிக்கொள்ளாமலிருக்கி றார். இததகையோரைப் பார்த்து நாம் ஏனைய சமயங்கள் மீதோ அச்சமயத்தைச் சேர்ந்த மக்கள் மீதோ, குரோதமோ கோபமோ வைத்துக்கொள்ள முடியவில்லை. ஏனெனில் மனிதனின் அடிப்படை உரிமைகளில் ஒன்றான சமய சுதந்திரத்தை நாம் அம்மனிதனுக்குக் கொடுத்துள்ளோம். அதை மறுப் பதற்கு நமக்கு அதிகாரம் இல்லை. நாம் என்ன சொல்கிறோம் என்றால், ஒரு சமயத்தின் நல்ல அம் சங்களை மாத்திரம் பெற்றுக்கொள்வதற்காக நய வஞ்சகராக எவரும் நடிக்க வேண்டாம். ஏனெனில் <u>நயவஞ்சகம் குப்ர் எனும் இறைவனை மறுத்தலை விடக் கொடியது!</u>

**5.** <u>அடிமைகள்:</u> அடிமைத்தளையிலிருந்து தம்மை விடுவித்துக்கொள்ளப் பொருளோ பணமோ தேவைப்படும் அடிமைகளுக்கு ஸக்காத்திலிருந்து கொடுத்து அவர்களை விடுதலை செய்ய உதவ வேண் டும். மனிதனுடைய சமத்துவத்தைக் காக்கவும் அடிமைத்தளையை அறுத்தெறியவும் இஸ்லாம் எவ் வளவு அக்கறை காட்டுகிறது என்பதை இங்கே நாம் உணர முடிகிறது.

இஸ்லாமியப் போதனையை இறை தூதர் முஹம்மத் (ஸல்) அவர்கள் கட்டியெழுப்ப வந்த போது அன்றைய சமுதாயத்தில் அடிமை வியா

பாரம் மலிந்து காணப்பட்டது. கோத்திரச்சண்டை ஓயாத சூழலில் எப்பொழுதும் சில கோஷ்டி வெல்வதும் வேறு சில தோல்வியடைந்து தமது செல்வங்களையும் மனைவி மக்களையும் வென்றவரிடம் பறிகொடுப்பதும் சாதாரணமாக இருந்தது. போர்களின்போது கைப்பற்றப்படும் எதிரிகளின் தரப்பைச் சேர்ந்த யாவரும் அடிமைகளாகவே கருதப்பட்டனர். இவர்களை விற்கலாம் வாங்கலாம், உரித்தாளி விரும்பியபடி தன் கைப்பொருள்போல நடத்தலாம். உரித்தாளியின் கட்டுப்பாட்டைமீற முடியாது. இந்த நிலையைவிட்டு நீங்கி சுதந்திரம் பெற ஓரே வழி உரித்தாளியின் பிரகடனம். பணத்தைப் பெற்றுக் கொண்டோ பெருமலோ உரியவர் (எஜமான்) ஒரு அடிமையை உரிமை விடலாம். குறித்தளவு பணம் அல்லது பொருள் தேடித்தந்தால் உன்னை நான் உரிமை விடத்தயார் என்று எஜமான் வாக்களித்திருந்தால், அத்தகையோருக்குத் தம்மை உரிமை விட்டுக்கொள்ளத் தேவையான உதவி செய்ய ஸக்காத்தைப் பயன்படுத்த வேண்டும்.

அடிமை வியாபாரம் அறபி நாட்டிலும் இன்றில்லை. ஆனால் அன்று உலகின் எல்லாப் பாகத்திலும் நாம் மேலே குறிப்பிட்ட யுத்த முறையும் அடிமை வியாபாரமும் இருந்துள்ளது. அன்று மிக நாகரிகம் பெற்றிருந்த நாடுகள் என்று கருதப்படும் ரோமாபுரி போன்ற தேசங்களில் அழகிய அடிமைப் பெண்கள் அணியணியாக சந்தையில் வைக்கப்பட்டு விற்பனை செய்யப்பட்டனர். அங்கே தனவந்தர் வந்து பார்த்து நாம் பழக்கடையில் நல்ல பழங்களைத் தெரிந்து வாங்குவது போல அவ்வடிமைப் பெண்களை வாங்கினார்கள்.

இவர்களைக் குறை கூறுவதற்காக நாம் இதை இங்கே குறிப்பிடவில்லை. அன்றைய உலகமே அடிமை வியாபாரத்தை ஒரு குறையாகக் காண வில்லை. அவ்வளவு சாதாரண விஷயமாகக் கருதப் பட்டது. அறிஞர்களும் சிந்தனையாளர்களும் இதை ஒரு பெரிய இழிநிலையாகக் கருதவில்லை.

ஆனால் முஹம்மத் (ஸல்) அவர்கள் தமது இஸ்லாமியப் போதனையை ஆரம்பித்த காலத்தி லேயே இந்த சமூகநோய்க்குப் பரிகாரம் காண்ப தில் அக்கறை செலுத்தினார்கள், மக்களிடையே ஊறிப்போன பழக்கங்களை, அவற்றை வன்மையாகக் கண்டிப்பதன் மூலம் ஒழித்துக்கட்டுவது அவ்வளவு சிரமம் அல்ல. படிப்படியாகத்தான் இப்பீடைக்கு மருந்து கட்டவேண்டும் என்று உணர்ந்து கொண் டார்கள். அந்த முறையே அல்லாஹ் சொல்லிக் கொடுத்த முறைபோன்றும். அது எப்படி அமைந் தது என்று பார்ப்போம்.

அடிமைகளைப் படிப்படியாக ஒழிக்க திட்ட மிட்ட இஸ்லாம், முதலாவதாக, (அ) எல்லோ ருமே அல்லாஹ்வின் அடிமைகள் என்ற உணர்வை மக்களிடையே பரப்பி உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்ற பேதம் இறைவனை வழிபடுவதில் உள்ள ஏற்றத்தாழ்வின் மூலமேயன்றி வேறு எதிலும் கணிக்க முடியாது என்றது. இஸ்லாமிய வாழ்க்கை முறையை நம்பி அதை ஏற்று வாழும் யாவரும் சகோதரர்கள் என்ற எண்ணத்தை வளர்த்தது.

(ஆ) அதே வேளையில் மக்கள் மனங்களில் அன்பு, ஆதரவு, அரவணைப்பு, ஆறுதல்கூறல், போன்ற அருங்குணங்களை வளர்த்து அப்போதி

ருந்த அடிமைகளை நடுத்தெருவில் தவிக்க விட்டு விடாமல் அவர்களை அன்போடும் பண்போடும் நடத்தச் செய்தது.

(இ) அடிமையாயிருந்தாலும், எஜமானுக்கு ஒரு குழந்தை பெற்றுக்கொடுத்ததும் அவள் அடிமைத்தளையிலிருந்து தாமாகவே விடுதலையாகி விடுகிறாள்; அத்துடன் அக்குழந்தை அடிமையே அல்ல என்ற நியதியின் மூலம் அடிமைகள், பரம்பரையாக அடிமையாயிருக்கும் பழக்கத்துக்கு முற்றுப்புள்ளி வைத்தது.

(ஈ) அடிமைகளை விடுவித்தல் இதை அல்லாஹ்தஆலாவுக்கு மிக்க விருப்பமான ஒரு செயலாக அறிமுகம் செய்து, இறைபக்தர் பலரும் தம்மிடமிருந்த அடிமைகளை விடுதலை செய்ய வைத்தது.

(உ) சன்மார்க்க விவகாரங்களிலும் பொதுப் பிரச்சினைகளிலும் தங்கள் கருத்துக்களை எடுத்துச் சொல்ல அடிமைகளுக்கு சுதந்திரம் கொடுக்கப் பட்டது.

(ஊ) அல்லாஹ்வுக்கு விருப்பமில்லாத காரியங்களை எஜமான் சொன்னாலும் செய்யக்கூடாது. ஏனெனில் எல்லோருக்கும் பெரிய எஜமான், அல்லாஹ்தான் என்ற உணர்வின் மூலம் அடிமை மனப்பான்மையை ஒழித்தது.

(எ) அடிமைகள் தம்மை விடுதலை செய்து கொள்ளப் பணம் தேடும் சந்தர்ப்பத்தில் அதற்கான பணத்தை ஸக்காத்திலிருந்து கொடுக்க வேண்டும் என்று கட்டளையிட்டது.

(ஏ) பல்வேறு குற்றங்களுக்கும் பாபச் செயல்களுக்கும் தண்டனையாக அடிமைகளை விடு

தலை செய்ய வேண்டும் என்று சட்டம் விதித்தது.

உதாரணமாக (அ) ஒரு முஸ்லிம் தன் மனைவியுடன் பாலுறவு கொள்வதன் மூலம் தன் நோன்பை முறிப்பாராயின் இச்செயலுக்கு தண்டனையாக ஓர் அடிமையை விடுதலை செய்யவேண்டும் (ஆ) அவ்வாறே ஹஜ் கடமையை நிறைவேற்றும்போது இத்தகைய உறவில் ஈடுபட்டாலும் இத்தகைய தண்டனையுண்டு. (இ) ஒரு முஸ்லிம் தன் மனைவியைத் தன் அருமைத் தாய் போன்றிருக்கிறாள் என்று ஒப்பிட்டுக் கூறினால், இது ஒரு தீயபேச்சாகக் கருதப்படுகிறது. இச் செயல் மூலம் இவர் தன் மனைவியுடன் உறவு வைக்க முடியாதவராகின்றார். இக்குற்றத்துக்கு பரிகாரமாக ஓர் அடிமையை விடுதலை செய்தல் கடனாகின்றது. இக்கடனை தீர்த்தபின்பே இவர் தன் மனைவியோடு பழையபடி உறவுகொள்ளலாம்.

இத்தகைய காரணங்கள் எதுவும் இல்லாத போதும் ஓர் அடிமையை உரிமைவிடுவது அல்லாஹ்வின் அன்பைப் பெறுதற்குரிய மிகச்சிறந்ததோர் செயலாகும் என்றும் உரிமைவிடப்படும் ஓர் அடிமையின் ஒவ்வொரு உறுப்பும் அவ்வடிமையை உரிமையிட்டவனை நரக நெருப்பிலிருந்து காப்பாற்ற உதவும் என்றும் இறைதூதர் முஹம்மத் (ஸல்) அவர்கள் கூறக்கேட்ட ஆரம்ப முஸ்லிம்கள் தங்களிடமிருந்த அடிமைகளை மட்டுமல்ல இயன்றளவு அடிமைகளை விலைகொடுத்து வாங்கியும் உரிமையிட்டார்கள்.

இப்படியாக இறைதூதர் (ஸல்) அவர்கள் 63 அடிமைகளை விடுதலை செய்துள்ளதாகவும் அவர்

களின் அருமை மனைவி ஆய்ஷா (றளி) 67 அடிமை களையும் அப்பாஸ் (றளி) அவர்கள் 70 அடிமைகளை யும் இப்னு உமர் (றளி) அவர்கள் 1000 அடிமை களையும் அப்துல் றஹ்மான் (றளி) அவர்கள் 30,000 அடிமைகளையும் விடுதலை செய்ததாகவும் சரித்திரத் திற் காண்கிறோம். இதுபற்றிய மேலும் விவரம் ஹதீஸ் கிரந்தங்களிற் காணலாம்.

இதற்குப் பிறகு இஸ்லாமிய ஆட்சியின் கீழ் அடிமைகளாகக் கணிக்கப்பட்டோர், யுத்தக்களங் களில் தோல்வியடைந்த எதிரிகளிடமிருந்து சிறை பிடிக்கப்பட்டவர்கள் மாத்திரமே. இவர்களில் ஒரு சிலர் தமக்குரிய தண்டத்தைக் கட்டி, விடுதலை பெற்றனர். மற்றும் சிலர் எதிரிகளிடம் கைதி களாய்ப் பிடிபட்ட முஸ்லிம்களுக்குப் பகரமாக மாற்றிக் கொள்ளப்பட்டனர். எக்காரணம் கொண் டும் இவர்கள் துன்புறுத்தப்படவில்லை. இவர்கள் முஸ்லிம் ஆட்சியாளரால் மிக்க கௌரவமாகவும் மனிதாபிமானத்துடனும் நடத்தப்பட்டனர். தாம் உண்ணும் உணவும் தாம் அணியும் உடையுமே தமது அடிமைகளுக்கும் கொடுக்கவேண்டும் என்பது இறைதூதர் முஹம்மத் (ஸல்) அவர்களின் போதனை.

முஸ்லிம்களின் அருங்குணங்களை உணர்ந்த அனேக அடிமைகள் இஸ்லாத்தை மனமுவந்து ஏற் றுக்கொண்டு, முஸ்லிம்களுடனே இருக்கலாயினர். இவர்களின் மக்கள், காலக்கிரமத்தில் சிறந்த அறி ஞர்களாகவும், ஆராய்ச்சியாளர்களாகவும் நீதிபதி களாகவும் சேனாதிபதிகளாகவும் மாகாணாதிபதி களாகவும் திகழ்ந்தார்கள் என்பது உலகறிந்த உண்மை.

இத்தகைய அருமையான மனிதாபமுள்ள திட்டங்களின் பயனாக நாற்பது ஆண்டுகளுக்குள் இஸ்லாமிய உலகிலிருந்து அடிமைகள் ஒழிக்கப்பட்டார்கள் என்பது இற்றைக்கு பதின்மூன்று நூற்றாண்டுகளுக்கு முன்புள்ள சரித்திரம். வேறு முறைகள் பின்பற்றப்பட்டிருந்தால் சமூகத்திற் புரையோடிக் கிடந்த இந்த அடிமைநோய், வேறுபல தீயவிளைவுகளைத்தான் தந்திருக்கும் என்பதைச் சிந்தனையாளர் உணரலாம்.

ஆனால், இஸ்லாமும் முஸ்லிம்களும் அடிமைகளின் பிரச்சினையை இவ்வளவு அழகாகத் தீர்த்து வைக்கும் அன்றைய உலகில் பூச்சியங்களாகவிருந்த ஐரோப்பியர், இன்று இஸ்லாத்தைக் குறை கூறுகின்றனர். எனவே அவர்களின் நிலையை சற்று திரும்பிப் பார்த்தல் பொருந்தும் அல்லவா?

மேனாடுகளில் அடிமை வியாபாரம் மிக மும்முரமாக நடந்தது. 18ம் நூற்றாண்டின் கடைசி வரை நடைபெற்றது என்றால் ஆச்சரியப்படுகிறீர்களா? அதுவும் யுத்தக்களங்களில் தோல்விகண்டவர்களையல்ல. யுத்தமென்றால் என்னவென்றே தெரியா நிரபராதிகளை!

அமெரிக்காவில் மேற்கிந்தியர், எனப்படும் கறுப்பு இன மக்களைப் பிடித்து விற்பனை செய்யும் வழக்கம், இந்த இருபதாம் நூற்றாண்டுவரை இருந்தது. மேனாட்டவர் ஆபிரிக்காவின் மத்திய பகுதியில் வாழ்ந்த கறுத்த இன மக்களை மிருகத்தனமாக வேட்டையாடிப் பிடித்து அடிமைகளாக விற்பதற்காகக் கப்பலேற்ற உபயோகிக்கப்பட்ட கடற்

கரைக்கு அடிமைக்கரை என்றே பெயர் வைக்கப் பட்டது. இப்படி ஒரு நூற்றாண்டுக்குள் (1680-1786) பிரித்தானியக் குடியேற்ற நாடுகளுக்கு அடிமைகளாக அனுப்பப்பட்ட கறுப்பர் தொகை இரண்டு கோடி என்று அவர்களின் அறிக்கையே கூறுகிறது. 1790ம் ஆண்டில் மாத்திரம் 75,000 அப்பாவி மக்கள் அடிமைகளாக்கப்பட்டுப் பிரித்தானியாவின் குடியேற்ற நாடுகளுக்கு அனுப்பப்பட்டனர். இவர்களை ஏற்றிக்கொண்டு சென்ற கப்பல்களில் இவர்கள் கால்நடைகளைப் போன்று கட்டி வைக்கப்பட்டு துன்புறுத்தப்பட்டார்கள். சிலர் மரப்பெட்டிகளுள் மூடிவைக்கப் பட்டார்கள். போதிய உணவோ சுகாதார வசதியோ கொடுக்கப்படவில்லை. இப்படி அடிமைகளாக அனுப்பப் பட்ட ஆபிரிக்கர்களில் இருபது சதவீதமானோர் அமெரிக்காவில் இறக்கப்படு முன்னரே கடற்பிரயாணத்தின்போது இறந்தார்கள் என்ற விபரங்களையும் ஐரோப்பிய ஆராய்ச்சியாளர்களே கூறுகின்றனர். ஐரோப்பியர்கள், ஆபிரிக்காவிலிருந்து அடிமைகளாக்கிக் கொண்டுசென்ற மக்களின் தொகை குறைந்த பட்சம் பத்துக்கோடியிருக்கும் என்று சொல்லப்படுகிறது. இப்படியாக மனித வேட்டையில் திளைத்தவர்கள்தாம் இன்று மனித உரிமை பற்றிக் குரல் கொடுப்பதாக நாம் நம்பியிருக்கிறோம்.

6. கடன்பட்டோர்: தமது வாழ்க்கைத் தேவைகளுக்காகவோ வர்த்தகம் போன்றவற்றிலோ பட்ட கடனைக் கொடுக்க வசதியின்றித் தவிப்போர்க்கும் ஸக்காத்திலிருந்து கொடுக்கப்பட வேண்டும். முடியுமாயின் முழுக்கடனையும் கொடுக்கப் போதிய பணத்தையோ பொருளையோ கொடுக்கலாம். இத்

தகையோர் சாதாரணமாக நம் சமூகத்தில் காணப் படுகின்றனர். வர்த்தக நடவடிக்கைகளும் கொடுக்கல் வாங்கற் தேவைகளும் சமூகத்தில் இருக்கும் வரை இத்தகைய கடனாளிகளும் ஆங்காங்கே இருக்கத்தான் செய்வர். ஆனால் ஸக்காத் முறையாக வினியோகிக்கும் திட்டம் சரியாக செயற்படும்போது தான் இத்தகையோர் பயன்பெற முடியும். தனிப் பட்ட முறையில் தங்கள் ஸக்காத்தைக் கொடுத்து வருவோரும் இத்தகைய கடனாளிகளைக் கண்டு தங்கள் ஸக்காத்தை இவர்களுக்குக் கொடுக்கலாம்.

7. <u>அல்லாஹ்வின் பாதையில் ஜிஹாத் செய்வோர்:</u> சன்மார்க்கத்தின் வளர்ச்சிக்காகவும், அதைப் பாதுகாப்பதற்காகவும் அத்தியாவசியமான பணிகளில் ஈடுபட்டிருப்போரின் அத்தியாவசிய தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்ளத் தேவையான பொருளும் பணமும் ஸக்காத்திலிருந்து கொடுக்கப்பட வேண்டும்.

8. <u>வழிப்போக்கர்:</u> இஸ்லாம் அனுமதிக்கும் எக்காரியத்துக்கேனும் பிரயாணத்தில் இறங்கி தம்மூர் சென்று சேர வசதியற்று நடுவழியிற் தயங்குவோர். இந்த நிலை சிலவேளை செல்வந்தர்க்கும் ஏற்படுவதுண்டு. தம்மிடமுள்ள பணங்கள் பிரயாணத்தில் எதிர்பாராவிதமாக செலவாகியமை, அல்லது களவு போனமை, கொள்ளைபோனமை போன்ற காரணங்களால் தம்மூர் திரும்ப முடியாதிருப்போர்க்கும் தமது பிரயாணத்தின் போது விபத்துக்குள்ளாகி தம்மிடமுள்ள உடைமைகளையெல்லாம் இழந்து பிரதேசத்தில் நிர்க்கதியாவோர்க்கும் ஸக்காத்திலிருந்து கொடுக்க வகைசெய்யலாம். இத்தகையோர்

தமது ஊர் திரும்புவதற்குத் தேவையான அளவு பணத்தை ஸக்காத்திலிருந்து பெற்றுக்கொள்ள அருகதையுடையோர்களாவர்.

இங்கே கூறப்பட்ட எட்டுக் கூட்டத்தினர்க்கும் உரித்தானதே ஸக்காத். இதை முறையாகத் திரட்டி ஒழுங்காகப் பங்கீடு செய்ய ஒரு சமூகம் தவறினல் அதற்கு அச்சமூகத்தின் பொறுப்பாளர்கள் குறிப் பாக ஸக்காத்தைச் செலுத்த வேண்டியவர்கள் பதில் கூறியாக வேண்டும். ஸதக்கா எனும் தான தருமங்களைப் போல் இதையும் கருதி அல்லாஹ் வின் தண்டனைக்குள்ளாகாது இத்தகையோர் தம் மைக் காத்துக்கொள்ள வேண்டுமானல் இந்தக் கடமையை நிறைவேற்றி விட்டால் மட்டும் போதாது; இதை முறையாக நிறைவேற்றியாக வேண்டும்.

ஸக்காத் எடுக்கப்படும் பொருட்களோ பணமோ வியாபாரமோ எங்கிருக்கிறதோ அங்கேயுள்ள மேற் படி எட்டுக் குழுவினர்க்கு அதை வினியோகித் தலே சிறந்த முறையாகும். ஏனெனில் செல்வமும் வியாபாரமும் அறுவடைகளும் சிறப்பாக நடந்து அவற்றை அனுபவிக்கும் காட்சியைக் கண்ணுறும் சூழலில் வாழ்கின்ற ஏழைகளையும் பரமதரித்திரர் களையும் ஏனையவர்களையும் கண்டும் அவர்களைப் புறக்கணித்து மற்றொரு பகுதியில் உள்ளவர்க்குக் கொடுப்பதனல் ஏழை மக்களின் மனம் புண்பட வாய்ப்புண்டாகிறது. இதனல், காலப்போக்கில் பல எதிர்ப்புச் சக்திகள் தலை தூக்கவும், இத்தகை யோரைத் தூண்டிவிட்டுக் கூத்துப்பார்க்கும் விஷ மிகளுக்கு சந்தர்ப்பமும் ஏற்படுகின்றது.

பல முஸ்லிம்கள் இன்றும் ஸக்காத்தைச் செலுத்தி வருகின்றனர் என்பதை நாம் மறுக்க வில்லை. அதனுல் எதிர்பார்க்கப்பட்ட பயனைச் சமூகத்தில் காணமுடியவில்லையே என்றுதான் கூறுகிறோம். நல்ல காரியத்தைச் செய்து நற்பயனைக் காண ஆசைப்படுகிறோம். ஆனுல் கவலைக்குரிய விளைவுகள் உண்டாகின்றனவே. இதைப் பற்றி யோசிக்க வேண்டாமா?

பணத்தைத் தேடுவது அவ்வளவு இலகுவான காரியமல்ல. முதலாவது அல்லாஹ்வின் கிருபையும் இரண்டாவது கடும் உழைப்பும் கவனமும் சிக்கனமும் வேண்டும். அப்படியே பணத்தைச் செலவு செய்து நல்ல பயனைப் பெறுவதற்கும் இவ்வரிய அம்சங்கள் தேவை. பொறுப்பற்ற முறையில் பணத்தையோ பொருளையோ வீசிவிட்டால் அதனுல் நல்ல பயன் கிட்டாது. அனேகமாக தீமை வந்து சேரும். ஸக்காத் மாத்திரம் இந்த நியதிக்கு அப்பாற்பட்டதல்ல. நாம் கொடுக்கும் ஸக்காத் எத்தனை ஏழைகளின் துன்பத்தைத் துடைத்திருக் கிறது? எத்தனை எத்தனை ஏழைகளுக்கு தொழில் வசதி கொடுத்திருக்கிறது ? எத்தனை திறமைசாலிகளைக் கைதூக்கி விட்டது? எத்தனை கடனளிகளுக்கு நிவாரணம் கொடுத்திருக்கிறது? எத்தனை விழுந்து போன வியாபாரிகளைத் தூக்கிவிட்டது? எத்தனை பிரயாணிகளைத் தம்மூர் சேர்த்து விட்டது? எமது ஸக்காத்தைப் பெற்றவர்களில் எத்தனை பேர் இன்று தாங்களும் ஸக்காத் கொடுக்கும் நிலைக்கு வந்துள்ளனர்? எனக் கேள்விகளை எழுப்பி நாமே பதில் சொல்லிப் பார்க்க வேண்டும்.

இதற்கு மாறாக நாம், கொடுக்கும் ஸக்காத்தும் தர்மங்களும் மூலம் பல நூறு ஏழைகளை உருவாக்கி, அவர்கள் பரம்பரை ஏழைகளாக இனம் பிரித்து மானம் மரியாதை இழந்து தெருத்தெருவாக அலைந்து திரியப் பழக்கிவிட்டிருக்கிறோம். அதே வேளை மானத்தையும் மரியாதையையும் காப்பாற்றி வாழும் சுயமரியாதையுள்ள பன்னூறு ஏழைகள் எவ்வித உதவியும் பெறவில்லை. இவர்களின் ஒட்டி யுலர்ந்த ஏழைக்கன்னியர் கண்ணீரும் கம்பலையு மாகப் புழுங்குகின்றனர். சுயமரியாதையோடும் நாணயத்தோடும் வர்த்தகம் செய்து எதிர்பாராத தாக்கங்களால் கடன்பட்டு வீழ்ச்சியுற்றவன் சுய மரியாதையின் காரணமாக தன்வேதனையை மனத் தில் அடக்கி அடக்கி நோயாளியாகி மூலையில் முடங்கிக்கிடக்கிறான். சீரும் சிறப்புமாக வாழ்ந்த இவனுடைய மனைவிமக்கள் இடிபட்ட நிலையில் திகி லடைந்து செய்வதறியாது தவிக்கின்றனர். தவிர்க்க முடியாத கஷ்டங்களை நீக்கிக்கொள்ளும் வரை தற் காலிகமாக உதவிதேடி தெருவில் இறங்கியவர்கள் பரம்பரைப் பக்கீர்களாகவே மாறிவிட்டனர்.

இதற்கிடையில் ஸக்காத்துக்கு எவ்வகையிலும் அருகதையற்றவர்கள் பலரும் இச்சந்தர்ப்பத்தை பயன்படுத்தி வருகின்றனர். இவர்களும் வீடுவீடாக கடைகடையாகச் சென்று தர்மம் கேட்கின்றனர். இதற்குத் துணையாகத் தலையில் தொப்பியை அல் லது முக்காடு போட்டுக்கொள்கின்றனர். இது மிகவும் பயங்கரமான விளைவைக் கொண்டுவரும் என்பதை இங்கே கூறிக்கொள்ள விரும்புகிறோம். தங்கள் சமூகத்தவரோடு நின்றுவிடாது ஏனைய சமூ கத்தவரையும் இவ்விழிதொழிலுக்குத் தூண்டிவிடும்

இத்தகைய தர்மங்கொடுக்கும் முறைக்கு தடை யொன்று போடப்பட்டாலும் ஆச்சரியப்படுவதற் கில்லை. இப்படி நாம் சில உண்மைகளை வேதனை யோடு கூறியபோதெல்லாம் சில தன்மானக் குஞ்சு கள் எம்மீது சீறி விழுந்ததுண்டு. ஆனால் விஷயம் அப்படித்தான் நடந்தது.

இற்றைக்கு முப்பது வருடங்களுக்கு முன்பு, எங்கள் நாட்டில் ஒருவர் ஐம்பது ஏக்கருக்கு மேல் நிலம் வைத்திருக்க முடியாது என்றும், ஒருவர் பல வீடுகளுக்குச் சொந்தக்காரராயிருக்க முடியாது என் றும் சட்டங்கள் வரும் என்று எமது செல்வந்தர் கள் கனவிலும் நம்பவில்லை. ஆனால் இன்று என்ன நடக்கிறது. இனிமேல் என்ன நடக்கப் போகிறது. ஆம் இப்படியான நிலை வருமுன் உங்கள் செல் வங்களைக் கொண்டு நல்லதைச் செய்யுங்கள் என்று அன்றும் நாம் கூறியபோது எம்மைப் பார்த்து ஒரு கூட்டம் ஏளனமாகச் சிரித்தது. இளமைத்துடிப் பில் பேசுகிறார்கள். அனுபவமில்லாத ஆலிம்கள் என்றார்கள். அன்று இளமையில் அனுபவமில்லாமல் கூறினோம் ஆனால் அல்லாஹ்வும் றஸூலும் சொன் னதை ஆதாரங்காட்டித்தான் கூறினோம். இன்று அனுபவத்தையும் சேர்த்துக் கூறுகிறோம். இன்றும் அல்லாஹ்வும் றஸூலும் கூறியதைத்தான் முன்வைத் துக் கூறுகிறோம். இத்தகைய தடைகளோ தண் டனைகளோ வந்தால், அதனால் குற்றம் செய்தவர் கள் மாத்திரம்தான் சிரமப்படுவார்கள் என்று நினைக்கவேண்டாம். நிரபராதிகளுக்கும் இதனால் தொந்தரவு வரலாம்.

وَاتَّقُوا فِتْنَةً لَّا تُصِيبَنَّ الَّذِينَ ظَلَمُوا مِنكُمْ خَاصَّةً وَاعْلَمُوا أَنَّ اللَّهَ شَدِيدُ الْعِقَابِ

*''அநியாயம் செய்தவர்களை மாத்திரமன்றி மற்றவர்களையும் பிடிக்கும் தீமையைப் பயந்து கொள்ளுங்கள். அல்லாஹ் தண்டனை கொடுப்பதில் கண்டிப்பானவன் என்பதையும் அறிந்துகொள்ளுங்கள்''*
***(8:25)***

ஸக்காத் பெறத் தகுதியுடைய இவ்வெட்டுக் கூட்டத்தினரையும் கவனிப்போம். இவர்களுக்கு ஸக்காத்தில் உரிமையிருக்கிறது. ஸக்காத்தாகக் கொடுபடவேண்டிய பகுதி அந்த ஸக்காத்தை நிறைவேற்ற வேண்டியவருக்கு உரியதல்ல என்பதை நாம் உணரவேண்டும். தமக்கு உரித்தில்லாத பிறர்க்குரிய ஸக்காத்தை தாம் வைத்திருப்பது நெருப்பு என்பதை நினைக்க வேண்டும்.

தம் சொத்துக்களில் பிறர்க்குரிய பங்கான ஸக்காத்தை நீக்கிவிடாமல் அவற்றைத் திரட்டி வைப்போரைக் கடுமையாக எச்சரிக்கிறது அல்குர்ஆன்:

وَالَّذِينَ يَكْنِزُونَ الذَّهَبَ وَالْفِضَّةَ وَلَا يُنفِقُونَهَا فِي سَبِيلِ اللَّهِ فَبَشِّرْهُم
بِعَذَابٍ أَلِيمٍ ﴿٣٤﴾ يَوْمَ يُحْمَىٰ عَلَيْهَا فِي نَارِ جَهَنَّمَ فَتُكْوَىٰ بِهَا جِبَاهُهُمْ وَجُنُوبُهُمْ
وَظُهُورُهُمْ هَٰذَا مَا كَنَزْتُمْ لِأَنفُسِكُمْ فَذُوقُوا مَا كُنتُمْ تَكْنِزُونَ

''பொன்னையும் வெள்ளியையும் சேகரித்து வைத்துக் கொண்டு அவற்றை அல்லாஹ்வின் பாதையிற் செலவு செய்யாதிருப்போர்க்கு துன்புறுத்தும் தண்டனையுண்டு என்று (நபியே) நீர் நன்மாராயம் சொல்வீராக. அவற்றை நரக நெருப்பிற் பழுக்கக் காய்ச்சி, அவர்களின் நெற்றிகளிலும், விலாக்களிலும், முதுகுகளிலும் சூடிட்டு, நீங்கள் உங்களுக்கு சேகரித்து வைத்தவை இதுதான்; நீங்கள் சேகரித்து

வைத்தவற்றை சுவைத்துப் பாருங்கள் என்று கூறப் படும் நாளை நினைவூட்டுவீராக.'' (9:35,36)

ஸக்காத் பின்வரும் சொத்து வகைகளில் கட மையாக்கப்பட்டுள்ளது.

1. தானியங்களும், பழங்களும்.
2. கால் நடைகள்.
3. வெள்ளி, தங்கம்.
4. வர்த்தகப் பொருட்கள்.
5. நாணயங்கள்.

இவ்வகைகள் பற்றிய விரிவான விளக்கத்தை இச்சிறு நூலில் அடக்கிவிட முடியாது. ஆகையால் ஒரு சில குறிப்புக்களை மாத்திரம் தருகின்றோம். விரிவாய் விளங்க அறிஞர்களை அணுகலாம் அல் லது அறபியில் உள்ள நூல்களை வாசிக்கலாம்.

மழை, ஆறு முதலியவற்றின் மூலம் இயற்கை யாக நீர் பாய்ச்சப்பட்டு விளைவிக்கப்படும் தானி யங்களிலும் பேரிந்து, திராட்சை ஆகிய கனிகளி லும் குறித்த அளவுக்கு மேல் விளைச்சலிருந்தால் அதில் பத்திலொரு பங்கு ஸக்காத்தாகச் செலுத்தப் பட வேண்டும். ஏற்றம், கிணறு, இயந்திரம் போன்றவற்றால் நீர்ப்பாய்ச்சப்பட்டால் அத்தகைய மகஸூலில் இருபதில் ஒன்று ஸக்காத்தாகக் கொடு படவேண்டும். இது தம் சொந்த நிலத்திற் பயிரிடப் பட்டால் மாத்திரமே. அன்றி அரசாங்க நிலங்க ளிலாயின், அரசு வேறுவகையான வரிகளை நிய மிக்கலாம்.

சிரமமின்றி மேய்க்கப்படும் மந்தைகளான ஆடு, மாடு, ஒட்டகை என்பவற்றுக்கு ஒவ்வொரு இனத்

துக்கும் தனித்தனி விகிதத்தில் ஸக்காத் செலுத்துவது உரித்தாளியின் கடமை.

வெள்ளி, தங்கம் என்பவற்றில் ஒரு குறிப்பிட்ட அளவை, ஓராண்டு காலம் தன்னிடம் வைத்திருப்பவர் அதில் 1/40ஐ ஆண்டு முடிவில் ஸக்காத்தாகச் செலுத்தவேண்டும்.

வியாபாரச் சரக்குகள் யாவற்றையும் வருடம் பூர்த்தியானதும் கணக்கிட்டு முழு இருப்பிலும் 1/40ஐ ஸக்காத்தாகச் செலுத்திவிடுவது உரிமையாளரின் அல்லது வர்த்தகத்தை நடத்துவோரின் கடமையாகும். இது இலாபத்தில் மாத்திரம் கொடுக்கப்படுவதல்ல. வியாபாரத்தின் பெயரால் தன்னிடமுள்ள சகல பொருட்களும் கணக்கிடப்படவேண்டும். முழுதுக்கும் ஸக்காத் கொடுக்க வேண்டும். இலாபத்தில் மாத்திரம் கொடுபடும் நவீன வரிகளை விட ஸக்காத் மிக்க விரிவானது.

ஸக்காத்தை முறையாகக் கணித்து, உரியவர்க்கு ஒப்படைத்தல் ஆட்சியாளருக்குத்தான் கடமையென்று நினைக்க வேண்டாம். இதைச்சரியாக நிறைவேற்றுவது ஸக்காத் கொடுக்கும் ஒவ்வொருவர் மீதும் கடனாகும். ஆகவே எதிர்பார்க்கப்படும் பயன் ஸக்காத்திலிருந்து கிட்டவில்லையென்றால், இதற்கு பதில் கூறவேண்டியவர்கள் ஸக்காத்தைக் கொடுக்க கடமைப்பட்டவர்களே.

இதற்கெல்லாம் நாமென்ன செய்யலாம்! என்று எவரும் தட்டிக்கழிக்க முடியாது. மிக அற்ப விஷயங்களுக்கெல்லாம் தாபன ரீதியாக இயங்கும்

நாம் இந்தக்கடமையைப் பொறுத்தவரை இலே சாகத் தப்ப முடியாது.

விளையாட்டுக்களுக்காக தெருவுக்குத்தெரு கிராமத்துக்குக்கிராமம் சங்கங்கள். பத்திரிகை வாசிப்பவர்க்குச் சங்கம், சிரமதானவேலைகளுக்குச் சங்கம், வியாபாரத்துக்குச் சங்கம், ஒரு தனிமனிதனைக் கொண்டாடச் சங்கம், மீலாதுக்குத் தெருவுக்கொரு சங்கம், மவ்லூதுக்குச் சங்கம், ரூதிப்களுக்குச்சங்கம், ஏன் பூக்களுக்குமட்டுமா நாய்களுக்கும் சங்கம், ஆனால் கடமையை நிறைவேற்ற ஒரு சங்கம் இல்லை. நகரவரியிருப்போர் சங்கம், வருமானவரியிருப்போர் சங்கம் உண்டு ஆனால் அல்லாஹ்வின் கடமையான வரியை அழகாக நிறைவேற்றிப் பயன்பெற ஒரு சங்கம் அமைக்க எவரும் கவலைப்படவில்லை! நாட்டுக்கு நாடு நட்புறவுக்குச் சங்கம். ஆனால், சமூகத்தின் நட்புறவை வளர்த்து, அதனால் இம்மையிலும் மறுமையிலும் நன்மை பெற ஒரு சங்கம் அமைக்க ஒரு கோடீஸ்வரரும் இல்லை. சமூகத் தலைவர்களும் இவ்விஷயத்திற் கவலை கொண்டதாகத் தெரியவில்லையே.

ஸக்காத்தை முறையாகக் கொடுக்கப் பலநூறு பேர் தேவையில்லை. ஒரு நபரே ஆரம்பம் செய்யலாம். தம்மிடமுள்ள ஸக்காத்தை உரியமுறையில் செலுத்தலாம். அல்லது இத்தகைய பலர் சேர்ந்து இவ்வேலையை ஆரம்பம் செய்யலாம். அல்லது நம்மிடம் பல வருடங்களாக இருந்துவரும் பைத்துல்மால் சங்கமே இதை முறையாகச் செய்ய ஸக்காத் செலுத்தும் சோதரர்கள் ஒத்துழைக்கலாம்.

சொற்ப அளவிலான ஸக்காத்தை அறவிட்டு வினியோகித்து சமூகத்தின் பொருளாதாரப் பிரச்சினையைத் தீர்த்துவைக்க முடியுமா? இன்று வருமான வரி 80% வரை அறவிடப்பட்ட போதிலும் பொருளாதாரப் பிரச்சினைகளைத் தீர்க்க முடியவில்லையே! என்று அங்கலாய்ப்போரும் எம்மிடையே இருக்கிறார்கள். இவர்கள் வேதாந்திகள், சொல் வீரர்கள், செயலில் இறங்க மனமில்லாதவர்கள்.

ஸக்காத்திற்கும் இன்றைய வருமானவரிக்குமிடையில் எத்தனையோ வகையில் வித்தியாசங்களுண்டு. இவ்விரண்டையும் ஒன்றாகக் கணிக்க முடியாது. ஸக்காத்தை உரிய முறையிற் செலுத்தியதன் பயனை முன்னைய முஸ்லிம்கள் நன்றாக அனுபவித்தார்கள். இஸ்லாம் முழுமையாகப் பின்பற்றப்பட்டு ஒரு நூற்றாண்டுக்குள் ஸக்காத் பெற அருகதையான எவரும் இல்லாத நிலை அங்கே ஏற்பட்டு, எல்லா முஸ்லிம்களின் ஸக்காத்தும் அரசாங்க நிதியில் குவிக்கப்பட்டதாக சரித்திரம் கூறுகிறதே. பொருளாதார நிலை வளர்ச்சி காரணமாக கண்தெரியாத ஒவ்வொருவருக்கும் ஒரு வழிகாட்டி அரசாங்கத்தால் நியமிக்கப்பட்டார். கொடிய நோயால் வாடும் ஒவ்வொருவருக்கும் உதவிசெய்யத் தேவையானோரும் அரசாங்கத்தால் கொடுக்கப்பட்டனர் எனவும் அறிகின்றோமே.

## விசேட தருமங்கள்

சில விசேட தினங்களிலும் விசேட வணக்கங்களின் போதும் சமூகத்திலுள்ள வசதிகுறைந்த மக்கள் பயனடையும் வகையில் சில தருமங்களை இஸ்லாம் கடமையாக்கியுள்ளது. அவற்றில் முக்கிய

மானவையும் பெரிதும் பயனளிப்பவையுமான இரண்டை இங்கு குறிப்பிடுவோம்:-

(1) ஸதக்கத்துல் பித்ர்

நோன்புப் பெருநாளன்று ஒவ்வொரு முஸ்லிமும் தனக்காகவும், தன் பராமரிப்பில் வாழும் ஒவ்வொரு நபருக்காகவும் தமது உணவுத் தானியத்திலிருந்து ஏழைகளுக்குக் கொடுக்க வேண்டிய தர்மமாகும். அரிசி அல்லது கோதுமை போன்ற பிரதான உணவுப் பொருள் ஓர் ஆளுக்காக நான்கு இருத்தல் வீதம் ஸக்காத் பெற அருகதையுடையோருக்குக் கொடுக்க வேண்டும். தனவந்தர் மாத்திரமல்ல; பெருநாளன்றைய தேவைகளுக்கு மேலதிகமாக உணவோ பொருளோ பணமோ வைத்திருக்கும் ஒவ்வொரு முஸ்லிமும் இக்கடமையைச் செய்ய வேண்டும். பெருநாள் தொழுகை வரை பிற்படுத்துவது கூடாது. றமளான் ஆரம்பத்திலிருந்தே கொடுக்கலாம். இதையும் ஒன்று திரட்டி ஒழுங்காகக் கொடுத்தால் தனித்தனியாகக் கொடுப்பதைவிடப் பயனுள்ளதாக அமையும்.

(2) கால் நடைகளைக் குர்பான் செய்தல்

ஹஜ் கடமையை நிறைவேற்றும்போது ஹாஜிகளும் ஹஜ்பெருநாளன்று ஏனைய முஸ்லிம்களும் ஒட்டகை, மாடு, ஆடு முதலான கால்நடைகளை அறுத்து, அதிற் சில பங்கைத் தாமும் உண்டு, பெரும்பகுதியை ஏழைகளுக்குக் கொடுத்தல்.

இவ்விரு தர்மங்களின் நோக்கங்கள் பல. அவற்றில் முக்கியமானது பொருளாதார, சமூக நலனை

அடிப்படையாய்க்கொண்டதாகும். சாதாரணமாக பெருநாள் தினத்தில் மக்கள் மகிழ்வோடிருக்கும் போது ஏழைகள் மாத்திரம் ஒட்டிய வயிற்ரேடும், குமுறும் இதயத்தோடும் இருக்க விடாமல், அவர் களும் வயிறுர உண்டு மகிழ்ந்திருக்க வழி செய்வ தாகும்.

இத்தகைய தானம் செய்யும்போது சுய நலன் களின் அடிப்படையில் பிரதிபலனை எதிர்பார்க்கா மல் உயர்ந்த பண்பட்ட இலட்சியத்தோடு அல் லாஹ்வின் திருப்தியை நாடிச் செய்யவேண்டும் என்பது முக்கியமாகக் கவனிக்கப்படவேண்டும்.

لَن يَنَالَ ٱللَّهَ لُحُومُهَا وَلَا دِمَآؤُهَا وَلَٰكِن يَنَالُهُ ٱلتَّقْوَىٰ مِنكُمْ

''நீங்கள் அறுக்கும் கால்நடைகளின் மாமிசமோ இரத்தமோ அல்லாஹ்வை அடையமாட்டா; உங் கள் இறையச்சம்தான் அவனை அடையும்.'' *(22:37)*

எவர்க்கும் பயனளிக்காத முறையில் உயிர்ப் பிராணிகளைப் பலியிட்டு வீணுக்குவதை இஸ்லாம் அனுமதிக்கவில்லை. நிழல்தரும் விருட்சங்களையோ கனிதரும் மரங்களையோ தாவரவர்க்கங்களையோ தக்க காரணமின்றி வெட்டுவதையும் இஸ்லாம் வரவேற்கவில்லை. ஒரு நாள் கூத்துக்காக மீசையைச் சிரைத்துக்கொள்வதுபோல, சில தற்காலிகக் காட் சிக்காகவும் வரவேற்புக்காகவும் போலி அலங்காரங் களுக்காகவும் பல பயனுள்ள மரங்களை வெட்டிப் பாழாக்குவோரும், பல பெறுமதிவாய்ந்த பொருட் களை விரயம் செய்வோரும் சற்று நிதானமாக சிந்திக்கவேண்டும்.

## தண்டனைகள்

மக்கள் செய்யும் சில தவறுகளை, சமூகத்திலிருந்து அகற்றும் நோக்கோடு அத்தவறு செய்தோர்க்குத் தண்டனையாகச் சில தர்மங்களை விதித்துள்ளது இஸ்லாம்: –

(அ) சத்தியம் செய்தவர் தன் சத்தியத்தை மீறி நடந்தால், இத்தவறுக்குப் பரிகாரமாக பத்து ஏழைகளுக்கு உணவு கொடுக்க வேண்டும்; அல்லது உடை கொடுக்கவேண்டும்.

(ஆ) றமளான் மாதத்தில் தனது நோன்பை எவ்வித காரணமும் இன்றி விட்டால், அந்த நோன்புக்குப் பதில் ஒரு நோன்பை நோற்பதுடன் குற்றப்பரிகாரமாக ஏழைக்கு உணவளிக்க வேண்டும்.

(இ) ஒரு முஸ்லிம் தன் மனைவியையும் தன்னைப் பெற்று வளர்த்த தாயையும் ஒரே அடிப்படையில் கணிக்க முடியாது. கணவனுக்கும் மனைவிக்கும் உள்ள தொடர்புக்கும், மகனுக்கும் தாயாருக்கும் உள்ள தொடர்புக்கும் இடையே மிக்க வித்தியாசம் உண்டு. ஆகையால் ஒருவர் தன் மனைவியைப் பார்த்து நீர் என் தாயைப் போன்றிருக்கிறீர் என்று சொல்லக் கூடாது. அப்படிச் சொன்னால் அவருக்கு அம்மனைவி ஹறாமாகின்றாள். அவளை மறுபடி ஹலால் மனைவியாக்கிக் கொள்ள வேண்டுமானால், அக்கணவர் ஓர் அடிமையை விடுதலை செய்ய வேண்டும், அது முடியாவிட்டால் இரண்டு மாதங்கள் தொடர்ந்து நோன்பு நோற்க வேண்டும். அதுவும் இயலாவிட்டால் அறுபது ஏழைகளுக்கு உணவு கொடுக்கவேண்டும்.

## சுற்றம் பேணல்

வசதியுள்ளவர் தமது சுற்றத்தாரைப் பேண வேண்டும். அவர்களில் ஏழைகளை அனுசரித்தல் கடமையாகும். இத்தகைய சமூகக்கூட்டுப் பொறுப் புணர்ச்சியை இஸ்லாம் வற்புறுத்துகிறது. தன்வீட் டைக்கவனிக்குமுன்பே அண்டை அயலாரைக்கவ னிக்கும் பண்பை இஸ்லாம் வலியுறுத்துகிறது.

ஒருவர் பசிக்கொடுமையால் இறந்துவிட்டால் இவருடைய கிராமவாசிகள் யாவருமே இம்மரணத் துக்குப் பொறுப்பாளிகள் என இஸ்லாமிய அறிஞர் கள் கூறியுள்ளார்கள்.

அண்டை அயலாரைப் பேணுமாறு அடிக்கடி அறிவுரை கூறுகிறது அல்குர்ஆன்.

وَاعْبُدُوا اللَّهَ وَلَا تُشْرِكُوا بِهِ شَيْئًا وَبِالْوَالِدَيْنِ إِحْسَانًا وَبِذِي الْقُرْبَىٰ وَالْيَتَامَىٰ
وَالْمَسَاكِينِ وَالْجَارِ ذِي الْقُرْبَىٰ وَالْجَارِ الْجُنُبِ وَالصَّاحِبِ بِالْجَنبِ وَابْنِ السَّبِيلِ وَمَا
مَلَكَتْ أَيْمَانُكُمْ إِنَّ اللَّهَ لَا يُحِبُّ مَن كَانَ مُخْتَالًا فَخُورًا

''அல்லாஹ்வையே வணங்குங்கள். அவனுக்கு எதை யும் இணையாக்காதீர்கள். பெற்றோருக்கு நன்றி செய்யுங்கள். உறவினருக்கும், அனாதைகளுக்கும், ஏழைகளுக்கும், அண்டைவீட்டிலுள்ள உறவினர்க் கும், அண்டைவீட்டாரான அந்நியருக்கும், உங்க ளோடிருக்கும் நண்பர்களுக்கும் வழிப்போக்கருக்கும், உங்கள் ஆதிக்கத்திலிருக்கும் அடிமைகளுக்கும் அன் போடு நன்றி செய்யுங்கள். கர்வங்கொள்வோனை யும், பெருமையடிப்போனையும் அல்லாஹ் நிச்சய மாக நேசிப்பதில்லை'' (4:36)

''பக்கத்து வீட்டான் பசித்திருக்க தான் உண்ணும் தன்மையுடையவன் உண்மையான முஃமின் அல்லன்; அவன் எம்மைச் சேர்ந்தவனல்லன்'' என்ற கருத்தை இறைதூதர் முஹம்மத் (ஸல்) அவர்கள் பல சந்தர்ப்பங்களிலும் கூறியுள்ளார்கள்.

அன்றைய முஸ்லிம்களின் அன்றாட வாழ்க்கையிலும் இவ்வரிய போதனைகள் செயற்பட்டுவந்தன. ஒரு முறை ஓர் ஆட்டை அறுத்து உரித்துக்கொண்டிருந்த தன் வேலைக்காரனைப் பார்த்து இப்னு அப்பாஸ் (றளி) அவர்கள், ''தம்பி, நம் அடுத்த வீட்டு யூதரை மறந்துவிடாதே'' என்று இடைக்கிடை கூறிக்கொண்டிருந்தார்கள். இதைக்கேட்ட ஒரு நண்பர், ''ஏன் அடிக்கடி அடுத்தவீட்டாரை நினைவுறுத்துகிறீர் என்று கேட்டார். ''அல்லாஹ்வின் மீது சத்தியமாகக் கூறுகிறேன்; இறைதூதர் (ஸல்) அவர்கள், அண்டைவீட்டாரைக் கவனித்துக்கொள்ளுமாறு அடிக்கடி உபதேசித்தார்கள். அண்டைவீட்டாருக்குப் பாகப்பிரிவினையிலும் பங்கு கொடுக்கச் சொல்லிவிடுவார்களோ என்று எண்ணினோம். அதனாற்றான் அடுத்த வீட்டு யூதருக்கும் ஆட்டிறைச்சி அனுப்புமாறு வேலைக்காரனுக்கு நினைவூட்டுகிறேன்'' என இப்னு அப்பாஸ் (றளி) அவர்கள் விளக்கினார்கள்.

யூதர்கள், அன்றும் இன்றும் முஸ்லிம்களின் வீழ்ச்சிக்குக் குழி தோண்டும் திறமை சாலிகள் என்பதை சரித்திரம் நிரூபித்துக் கொண்டிருக்கிறது. இத்தகைய மனிதர்களுக்கும் அண்டைவீட்டார் என்ற காரணத்தால் இப்படி ஆதரிப்பவர்கள் எத்தகைய பண்பாடுடையோராயிருந்திருப்பார்கள் என்று சிந்திப்போமாக.

## உபகாரச் சம்பளம்

சம்பாதிக்க இயலாத, இயற்கை இடர்ப்பாடுடையோர், வயது முதிர்ந்த ஏழைகள், சம்ரட்சணை செய்யப் பொறுப்பானவர் இல்லாப் பெண்கள் முதலானோருக்கு பைத்துல்மால் எனப்படும் அரச நிதியிலிருந்து உதவி வழங்கப்பட வேண்டும் என்று இஸ்லாமிய அரச அமைப்பு கூறுகிறது. இத்தகையோர் முஸ்லிமாக இருக்கவேண்டும் என்ற நிபந்தனையில்லை. ஏனெனில் மனிதன் உயிர்ப்பிராணி என்ற அடிப்படையில் உணவு, உடை, போன்ற அத்தியாவசிய அடிப்படைத் தேவைக்காக உதவி தேடும் எவர்க்கும் எப்பிராணிக்கும் அவற்றைக் கொடுக்க இயன்றவர் கட்டாயம் கொடுக்க வேண்டும்.

وَفِىٓ أَمْوَٰلِهِمْ حَقٌّ لِّلسَّآئِلِ وَٱلْمَحْرُومِ

''அவர்களின் செல்வங்களில் யாசகம் கேட்போருக்கும் வசதி இல்லாதோருக்கும் ஒரு பங்கு உண்டு.''
(51-19)

ஒவ்வொரு மனிதனும் தன் அடிப்படை உரிமைகளைப் பெற்று உயிர் வாழும் உரிமையை இஸ்லாம்தான் உலகில் நிலைநாட்டியது. எந்த ஒரு சூழலிலும் முஸ்லிம்கள், எந்த இன மக்களையும் வீணாகத் துன்புறுத்தியதாகவோ அவர்களின் உரிமைகளைப் பறித்ததாகவோ நாம் காணமுடியாது. மாறாக அவர்களை அன்பாகவும் பண்புடனும நடத்தினார்கள் என்றுதான் காண்கிறோம்:

ஒருமுறை கலீபா உமர் (றளி) அவர்கள், வயது முதிர்ந்த ஒரு யூதர் யாசகம் செய்து கொண்டு

திரிவதைக் கண்டார்கள். இது கலீபாவுக்குப் பெரும் வேதனையைக் கொடுத்தது. உடனே அவ் வயோதிப யூதருக்கு பைத்துல் மால் நிதியிலிருந்து செலவு செய்ய ஒழுங்கு செய்யப்பட வேண்டும் என்று உத்தரவிட்டார்கள். ''பெரியவரே, நீர் வாலிபராயிருக்கும்போது உம்மிடமிருந்து வரிவசூ லித்துவிட்டு உமது தள்ளாத வயதில் உம்மை யாச கம் செய்ய விட்டால், நாம் நேர்மையைக் கடைப் பிடித்தவராக மாட்டோம்'' என்று கூறினார்கள்.

இத்தகைய மனித உரிமைகளைப் பதின்மூன்று நூற்றாண்டுகளுக்கு முன்பே முஸ்லிம்கள் இப்பூவுல கில் நிலைநாட்டினார்கள். ஆனால் மனித உரிமைக் காக மாநாடு நடத்தி சாசனம் தயாரிக்க மிக்க ஆர்வத்தோடு பாடுபடும் மேநாட்டு மேதாவிகளின் சட்டதிட்டங்களிலோ அரசியல் திட்டங்களிலோ மனிதனின் அடிப்படை உரிமைகளைப் பற்றி ஒன்று மில்லை. அப்படி இருந்தாலும் அது எல்லா மனி தருக்குமாக இருக்காது. அவர்களுக்கு மாத்திரம் தான் அமுலாகும்.

ஆஸ்திரேலியாவில் வெள்ளையர்கள் குடியேறிய வுடன் அங்கே வாழ்ந்த சுதேசிகள் மிருகங்களைப் போன்று வேட்டையாடப் பட்டார்கள். அவர்கள் முற்றாக ஒழித்துக்கட்டப்பட்டு வெள்ளையர்களுக்கு நாடொன்று உருவாக்கப்பட்டது. இவ்வாறே அமெரிக்காவின் ஆதிக்குடிகளான கறுப்பர்கள் ஒழித்துக் கட்டப்பட்டு வெள்ளையர் அதனை தங்கள் நாடாக்கிக் கொண்டனர். அங்கே மிக்க சிரமங் களுக்கிடையே உயிர்தப்பிய செவ்விந்தியர்கள் ஒரு தனிப்பகுதிக்கு ஒதுக்கப்பட்டனர்.

ஆபிரிக்க உபகண்டத்தில் ஊடுருவல் நடத்திய ஐரோப்பிய மேன்மக்கள், அங்கேயும் மனித வேட்டையாடத் தவறவில்லை. இதுபற்றி நாம் இந்நூலில் முன்னொரு பகுதியிற் குறிப்பிட்டோம்.

## ஏனைய கட்டுப்பாடுகள்

மேலே கூறப்பட்டவை தவிர வேறுபல விதிகளை அல்லது வரிகளை ஆட்சியாளர் வகுக்கலாம். இவற்றால் மக்களுடைய நலன் கருதப்படுவதுடன் இஸ்லாமிய அடிப்படைகளுக்கு இணக்கமாகவும் இவை அமையவேண்டும்.

இறைதூதர் (ஸல்) அவர்களின் வாழ்க்கையில் இப்படிச் செய்தமைக்கும் உதாரணமுண்டு. பனுன்னளீர் கோத்திரத்தை எதிர்த்து அறப்போர் செய்து அதில் இறைதூதரும் ஸஹாக்களும் வெற்றியடைந்த போது, அந்த யுத்தகளத்தில் சேகரிக்கப்பட்ட பொருட்கள் யாவும் இறைதூதரிடம் குவிக்கப்பட்டன. இவற்றை மக்காவைத் துறந்து மதீனா வந்த முஹாஜிர்களுக்கும் மதீனாவில் வாழ்ந்த சில ஏழைகளுக்கும் மாத்திரமே பகிர்ந்து கொடுத்தார்கள். மதீனாவிலிருந்த நிரந்தரக் குடிகளுக்கும் தங்கள் செல்வங்களையெல்லாம் மக்காவில் விட்டுவந்த முஹாஜிர்களுக்குமிடையில் காணப்பட்ட பொருளாதார ஏற்றத்தாழ்வைக் குறைக்கவே முஹம்மத் (ஸல்) அவர்கள் இவ்வாறு செய்தார்கள்.

وَمَآ ءَاتَىٰكُمُ ٱلرَّسُولُ فَخُذُوهُ وَمَا نَهَىٰكُمْ عَنْهُ فَٱنتَهُوا۟

''அல்லாஹ்வின் தூதர் உங்களுக்குக் கொடுத்ததை எடுத்துக் கொள்ளுங்கள்; அவர் தடுத்தவற்றில் இருந்து தவிர்ந்து கொள்ளுங்கள்'' (59:7)

## தான தருமங்கள்

மேற்கூறப்பட்ட எட்டு வகை வரிகளுக்கும் மேலாக தான தருமங்கள் செய்வதில் மக்களை ஊக்குவிக்கிறது இஸ்லாம். தருமம் செய்தலை ஒரு புண்ணிய கருமமாக — வணக்கமாகக் கருதுகிறது.

பணத்தை நாட்டுக்குப் பயன்படும் வகையில் பரிமாறாது பதுக்கிவைத்தல் பாபம். இப்படிச் செய்வோர்க்குக் கடும் தண்டனையுண்டு என்று அல் குர்ஆன் எச்சரித்துக்கொண்டே இருக்கின்றது.

''நீங்கள் கிழக்குப் பக்கமோ மேற்குப் பக்கமோ உங்கள் முகங்களைத் திருப்புவது மாத்திரம் நன்மை யாகிவிடாது; அல்லாஹ்வையும் இறுதி நாளையும் மலக்குகளையும் வேதத்தையும் நபிமார்களையும் மெய் யாகவே நம்பி, பொருளை அதன்மீது தனக்கு ஆசை யிருந்த போதிலும், பந்துக்களுக்கும் அநாதைகளுக் கும், ஏழைகளுக்கும், வழிப்போக்கர்களுக்கும், யாச கர்களுக்கும், கொடுத்து தொழுகையையும் கடைப் பிடித்து, ஸக்காத்தும் கொடுத்து வருவோரும், வாக்குறுதி செய்தால் அதை நிறைவேற்றுவோரும், நஷ்டத்திலும், கஷ்டத்திலும், யுத்தத்தின்போதும் பொறுமையைக் கைக்கொள்வோரும் தாம் நல்ல வர்கள். இவர்கள்தாம் உண்மையாளர்கள்; பய பக்தியுடையவர்கள்''. (2:177)

''நபியே, எதைச் செலவு செய்வது ? என்று உம்மிடம் கேட்கின்றனர். அதற்கு நீர் கூறும்; நீங்கள் செலவு செய்பவை உங்கள் பெற்றோர்க்கும் சுற்றத்தார்க்கும் அனாதைகளுக்கும் ஏழைகளுக்கும் வழிப்போக்கர்களுக்கும் கொடுங்கள். நீங்கள் செய்

யும் நற்கருமங்களை நிச்சயமாக அல்லாஹ் நன்கு அறிந்தவன்.'' (2:215)

''விசுவாசிகளே, பேரமும் நட்பும் பரிந்து பேசலும் இல்லாத நாள் வருமுன்பே, உங்களுக்கு நாம் அளித்திருப்பவற்றிலிருந்து நற் கருமங்களிற் செலவு செய்யுங்கள். இதை நிராகரிப்போர் தமக்குத்தாமே தீங்கிழைத்துக் கொண்டவர்களே.'' (2:254)

''அல்லாஹ்வின் பாதையில் தங்கள் பொருளைச் செலவு செய்கின்றவர்க்கு உதாரணம். ஒரு வித்தின் உதாரணத்தை ஒத்திருக்கின்றது. அந்த வித்து ஏழு கதிர்களைத் தந்தது. ஒவ்வொரு கதிரிலும் நூறு வித்துக்கள். அல்லாஹ் தான் விரும்பியவர்க்கு மேலும் பன்மடங்கு கொடுக்கின்றான். ஏனெனில் அல்லாஹ் மிக்க விசாலமானவன்; நன்கு அறிந்தவன். (2:261)

''தங்கள் பொருட்களை அல்லாஹ்வின் பாதையிற் செலவு செய்து, அப்பால் தாம் செலவு செய்தவற்றுக்கு இகழ்ச்சியையோ துன்பத்தையோ தொடரச் செய்யாதோர்க்கு அவர்களின் நற்கூலி அவர்களின் இறைவனிடம் உண்டு. அவர்களுக்கு எவ்வித பயமும் இல்லை; அவர்கள் கவலைகொள்ளவும் மாட்டார்கள்''. (2:262)

''அல்லும் பகலும் இரகசியமாகவும் வெளிப்படையாகவும் தம் பணத்தை நற்காரியங்களுக்குச் செலவு செய்வோருக்குத் தம் இறைவனிடம் நற்கூலியுண்டு. இவர்கட்குப் பயமில்லை; இவர்கள் அஞ்சாநெஞ்சர்கள்'' (2:274)

தனவந்தர்களுக்கு இஸ்லாமிய வாழ்க்கை முறையில், இருவகையான பொறுப்புக்கள் உண்டு. ஒன்று: அவர்கள் அல்லாஹ் காட்டிய முறையில் செல்வங்களை நிர்வகிக்கவேண்டும். மற்றது: அல்லாஹ் விதித்த முறைப்படி அவற்றின் பங்குகளை உரியவர்க்கு ஒப்படைத்தல் வேண்டும். இந்த வகையில் இவர்கள் அல்லாஹ்வின் பிரதிநிதிகளாகின்றனர்.

ءَامِنُوا بِاللَّهِ وَرَسُولِهِ وَأَنفِقُوا مِمَّا جَعَلَكُم مُّسْتَخْلَفِينَ فِيهِ فَالَّذِينَ ءَامَنُوا مِنكُمْ وَأَنفَقُوا لَهُمْ أَجْرٌ كَبِيرٌ

''அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் விசுவாசியுங்கள். அவன் உங்களை எதற்குப் பிரதிநிதிகளாக்கியுள்ளானோ அதிலிருந்து நற்கருமங்களுக்குச் செலவு செய்யுங்கள். எனவே உங்களில் எவர் விசுவாசங்கொண்டு நற்கருமங்களிற் செலவிடுகின்றாரோ அவர்களுக்கு பெரிய கூலியுண்டு'' (57:7)

## தேவைக்கதிகம் திரட்டாமை

அல்லாஹ்வின் பாதையில் என்னும் சொற்றொடர் அல்குர்ஆனிலும் நபி முஹம்மது (ஸல்) அவர்களின் போதனைகளிலும் அதிகமாக உபயோகிக்கப் பட்டிருப்பதைக் காண்கிறோம். இஸ்லாமிய அறிஞர்களும் இத்தொடரை நிறைய உபயோகிக்கின்றனர். அல்லாஹ்வின் திருப்தியை நாடிச் செய்யப் படும் செயல்கள் யாவும் அவனுடைய பாதையில் செய்யப்படுவனவே. பொது நலன்களைக் கருதி செய்யும் வேலைகளையெல்லாம் இத்தொடர் மூலம் குறிப்பிடுவதுண்டு.

பொது நலன்களுக்குத் தம் செல்வங்களைச் செலவிடுவதை இஸ்லாம் ஊக்குவிக்கிறது. மெய் தான் இது. ஒவ்வொருவரும் நிறைவேற்ற வேண்டிய கடமைகளை நிறைவேற்றிய பின்னரே செய்யவேண் டும். கடமைகளும் கடன்களும் நிறைவேற்ற வேண்டி யிருக்க அவற்றைப் புறக்கணித்துவிட்டுப் பொது வேலைகளில் ஈடுபடுவதும், பொது வேலைகளுக்குச் செலவழிப்பதும் முறையாகாது என்பதை, ஏகப் பட்ட சமூக சேவையாளர்களுக்கும் தலைவர் என்று தம்மைக் கருதிக்கொள்வோருக்கும் நினைவுறுத்த விரும்புகிறோம்.

ஒரு நாள், முஹம்மத் (ஸல்) அவர்களும் தோழர் அபூதர் அல் கிபாரீ (றளி) அவர்களும் உஹது மலையடிவாரத்தில் சென்று கொண்டிருந் தார்கள். ''அபூதர், என்னிடம் இந்த மலையளவு சொத்திருந்து, அவற்றை அல்லாஹ்வின் பாதை யில் செலவிட்டு, அதில் ஒரேயொரு களஞ்சி மீதப் பட்டிருந்தாலும் நான் மகிழ்ச்சியடையமாட்டேன்'' என முஹம்மத் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

இதன்படியே அபூதர் (றளி) அவ்ர்கள் கலீபா உமர் (றளி) அவர்களின் ஆட்சியின்போது, ஒவ் வொருவரும் தம் தேவைக்கதிகமாகத் தம்மிடம் உள்ள சொத்துக்களை ஏழைகட்கும், அனாதைகட் கும் வழங்க முன்வருமாறு அழைத்தார்கள். வீண் செலவு, இடாம்பீகம், பணத்தைப் பதுக்கிவைத்தல் போன்றவற்றை விட்டு மக்களைத் தடுத்தார்கள்.

தேவைக்கதிகமாக வைத்திருப்பவற்றை அப் படியே கொடுத்து வெறுங்கையோடு வாழ்வது

கடமையாக்கப்படவில்லை. மக்கள் மனமுவந்து உதவி செய்யும் மனப்பக்குவத்தைப் பெறவேண்டும் என்பதும் மக்கள் வறுமையில் வாடும்போது ஒரு சிலர் செல்வங்களை வரம்பு மீறி அனுபவித்துக் கொண்டும் கட்டிவைத்துக் கொண்டும் இருப்பது கூடாது என்பதுதான் இஸ்லாமியப் போதனை.

ஒருசில ஆராய்ச்சியாளர் மேலே கூறப்பட்ட நிகழ்ச்சியை ஆதாரம் காட்டி மக்களைப் பொது வுடைமை வாதத்தின் பக்கம் இழுக்க முனைகின் றனர். இது, இவர்களின் குறுகிய சிந்தனைப்போக் கின் விளைவு. உண்மையில் அன்று அபூதர் (றளி) அவர்கள் போதித்த கொள்கைக்கும் இன்று நாம் காணும் பொதுவுடைமைக்கும் மிக்க வித்தியாசம் உண்டு. சுருங்கக் கூறின், அன்று அபூதர் (றளி) கூறியது தாஞகக் கனிந்த பழம்; இன்று பொது வுடைமை கூறுவது தட்டிப்பழுக்கவைக்கப்பட்டது. ஆகவே அது இனிக்கிறது; இது புளிக்கிறது.

ஏனெனில் அபூதர் (றளி) அவர்களின் போத னைப்படி மனிதனின் பொருளாதார உரிமையும், பொருளீட்டும் சுதந்திரமும், ஊக்கமும் பாதிக்கப் படவில்லை. நிறையத் தேடுங்கள் நியாயமான வழி களில் பொருட்களைத் திரட்டுங்கள் பண்பட்ட உள்ளத்தோடு அவற்றை வாரி வழங்குங்கள் என் பதுதான் இந்த ஸஹாபியின் போதனை. ஆனல், நவீனகால ஐரோப்பியப் பொதுவுடைமை, தனி நபரின் ஊக்கங்களையும் உரிமைகளையும் ஏற்றுக் கொள்ளவே தயாரில்லை. முதலாளியும் தொழிலா ளியும் மோதிக்கொண்டு இருவருமே அழிவுப்பாதை யிற் செல்ல ஆலோசனை கூறுகிறது.

இஸ்லாத்திற் சில பொதுவுடைமைக் கருத்துக் கள் உண்டு. ஆகையால் இஸ்லாம் இன்றையப் பொதுவுடைமையை ஆதரிக்கிறது என்று எவரும் ஏமாறவேண்டாம். இஸ்லாத்தில் இன்றைய ஐரோப் பிய ஜனநாயகக் கொள்கையின் சில அம்சங்கள் காணப்படுகின்றன. ஆகையால், இஸ்லாம் ஜன நாயகத்தைத்தான் ஆதரிக்கிறது என்று ஏமாறவும் வேண்டாம். ஏனெனில் இஸ்லாம், ஒரு சம்பூரண மான திட்டம் அதிற் சில அம்சங்களை மாத்திரம் பின்பற்றுவதன் மூலம் திருப்தியடைவது மனிதன் தன்னையே ஏமாற்றிக் கொள்வதாகும். இஸ்லாத் தின் சகல அம்சங்களையும் தன்னகத்தே கொண்ட ஒரு திட்டமாயின் அதற்கு புதியதொரு பெயர் தேவையில்லை. அதை இஸ்லாம் என்றே கூறுங்கள். வேறு சரக்குகளையும் சேர்த்துக் கொண்டு (அதை மறைப்பதற்கும் மக்கள் கண்ணில் மண்ணைத் தூவ வும்) அதை 'இஸ்லாமிய' என்ற அடைசேர்த்து அழைக்க வேண்டாம். உலகில்உள்ள கொள்கைகள் இரண்டுதான் ஒன்று இஸ்லாம் (இறைவழி) மற் றது குப்ர் (இறைவழியை ஏற்காமை) மூன்றாவது ஒரு வழியில்லை. ஆகவே இஸ்லாமியப் போதனையை முற்றாக ஏற்க மனமில்லாத போது அதை மறைத்து வாழ வேண்டியதில்லை. சீனியிற் பொதிந்த வில்லை (*Sugar Coated Pill*) போல சகல கிருத்தியங்களை யும் 'இஸ்லாமிய' எனும் பதத்தால் மறைத்து விடவேண்டாம் என்று கூறிவைக்க விரும்புகிறோம்.

இஸ்லாமியப் பொருளாதாரத் திட்டத்தின் மகிமை விளங்க வேண்டுமாயின் அத்திட்டத்தை முற்றாக நோக்க வேண்டும். ஒரு சில அம்சங்களை மாத்திரம் தனியாகக் கவனிக்கும் போது அதன்

உலகளாவிய பயனைப் புரிந்து கொள்வதில் நாம் தவறிவிடலாம்.

இஸ்லாம் மனிதனின் திரட்டூக்கத்தையும் முயற்சியையும் வளர்க்கிறது. அதேவேளையில் மனிதருக்கிடையே ஏற்றத்தாழ்வு, வர்க்கபேதம் என்பன தலைகாட்டவிடாது சமஉரிமை வழங்குவதுடன் சமத்துவத்தையும் பாதுகாக்கின்றது. பொருளாதாரத் தொடர்புகள் பற்றிய சட்டங்களை வகுத்துக் கொடுத்து, அவற்றை தூய்மை, நேர்மை, நீதி, பரஸ்பரம் உதவி, பொறுப்புணர்ச்சி எனும் அரிய பண்புகளின் துணையோடு அமுல் நடத்திக் காட்டியுள்ளது. கூட்டுப் பொறுப்புள்ளதோர் சமுதாயத்தைச் சிருஷ்டித்து எல்லோரின் உரிமைகளையும் பாதுகாத்து வாழப் பழக்கிவிட்டது. இத்தகையதொரு சாதனையை மனித சரித்திரத்திலே நிலை நாட்டிய பெருமை இறைவழியாம் இஸ்லாத்துக்கே உரியது.

ذَٰلِكَ ٱلدِّينُ ٱلْقَيِّمُ وَلَٰكِنَّ أَكْثَرَ ٱلنَّاسِ لَا يَعْلَمُونَ

''இதுதான் நேரான நிலையான வழி. ஆனால் அனேக மனிதர்கள் இந்த உண்மையை அறிந்துகொள்ளவில்லை.'' (30:30)

## ஆண் பெண் சமத்துவம்

சமூக உரிமைகளிலும் நீதிபரிபாலனத்திலும் பொருளியலிலும் மனித உரிமைகளை இஸ்லாம் எப்படி நிலைநாட்டியது என்பதை முன்னைய அத்தியாயங்களிற் கண்டோம். இங்கே சமூகத்தில் ஆணுக்கும் பெண்ணுக்கும் இஸ்லாம் கொடுத்துள்ள சமத்துவத்தைப் பற்றிக் கவனிப்போம்.

சமத்துவம் என்பதன் பொருள், சகல விஷயங்களிலும் ஒரு ஆண் செய்ய அனுமதிக்கப்படும் அளவு பெண்ணும் அனுமதிக்கப்பட வேண்டும்; இதில் எந்த வகையிலும் இருபாலாருக்குமிடையில் வித்தியாசப்படக் கூடாது என்பதே என்றால் இவ்வித சமத்துவம் இவ்வுலகில் சாத்தியப்படாது என்றே நினைக்கிறோம். ஏனெனில் ஆணும் பெண்ணும் இயல்பாகவே பல்வேறு அம்சங்களில் வித்தியாசமாகவேயுள்ளனர். எப்பொழுதும் பெண்களே குழந்தை பெறுகின்றனர், ஆணுக்கு இந்த வாய்ப்பில்லை. ஆணின் முகத்தில் தாடி மீசை வளர்கிறது. ஆனால் பெண்களுக்கு அப்படியில்லை. உடலுறுப்புக்கள் இருபாலாருக்கும் ஒரே அமைப்பில் இல்லை. பெண்களுக்கு சிறுதொடக்கு மாதாந்தம் ஏற்படுகிறது; ஆண்களுக்கில்லை. ஆகவே இயற்கையிலேயே சில வித்தியாசங்கள் இருபாலாரிடமும் உண்டு; இவற்றையெல்லாம் மாற்றி சமப்படுத்துவதுதான் உண்மையான சமத்துவம் என்று எவரும் வாதாடுவதானால் இதை எவராலும் இதுவரை சாதிக்க முடியவில்லை, இனிமேலும் சாதித்துவிடலாம் என்று தென்படவில்லை. ஆண்கள் தங்கள் முகத்தை அழுத்தமாக சவரம் செய்து கொள்வதனாலோ பெண்களும் ஆண்களைப்போல் உடையணிந்து கொள்வதாலோ செயற்கைக் கருப்பையின் மூலம் ஒரு பிள்ளையை உருவாக்குவதனாலோ ஆணும் பெண்ணும் சமமாக முடியாது. فِطْرَتَ اللَّهِ الَّتِي فَطَرَ النَّاسَ عَلَيْهَا لَا تَبْدِيلَ لِخَلْقِ اللَّهِ

''அல்லாஹ் மனிதர்களைச் சிருஷ்டித்த வழியே அவனுடைய இயற்கைவழி. அவனுடைய சிருஷ்டியில் எவ்வித மாற்றமும் இல்லை'' *(30:30)*

எனவே நாம் சமத்துவம் என்று சொல்லும் போது, ஆண் பெண் இருபாலாரின் இயற்கை அமைப்புக்களையும், இயல்பூக்கங்களையும் நன்கு உணர்ந்து அவற்றின் அடிப்படையிலேயே சிந்தனை செய்ய வேண்டும். இவற்றை மறந்து வெறும் வேதாந்தம் பேசலாகாது. ஏட்டுச்சுரைக்காயாக நமது சமத்துவம் மாறக்கூடாது என்று ஏற்கெனவே கூறிக்கொண்டு விஷயத்துக்கு வருவோம்.

இஸ்லாம், ஆண்களுக்கும் பெண்களுக்கும் கொடுத்துள்ள வாழ்க்கைத் திட்டத்தில் ஆண்கள் மேலானவர் பெண்கள் தாழ்ந்தவர்கள் என்ற வாதத்துக்கே இடமில்லை. ஏனெனில் இருபாலாரின் சகல வேலைகளிலும் பொதுவாக மனித சமுதாயத்தின் சுமுகமான வாழ்வுக்கு அத்தியாவசியமான பொருத்தமான கட்டுப்பாடுகளையும் அடிப்படை விதிகளையும் இருபாலார் மீதும் கடமையாக்கியுள்ளது இஸ்லாம். இக்கட்டுப்பாடுகளையும், கடமைகளையும் பேணும் போது இருபாலாரின் உரிமைகளும் பேணப்படுகின்றன. எனவே தேவையான சமத்துவம் அங்கே தானுகவே கொடுக்கப்பட்டு விடுகிறது. மெய்தான், ஒருசில கட்டுப்பாடுகள் பேணப்பட்டு வேறுசில புறக்கணிக்கப்பட்டால்; ஒருசில கடமைகளைப்பேணி வேறுசில பேணப்படாவிட்டால்; ஒருசிலர் எல்லாவற்றையும் பேண மற்றும் சிலர் புறக்கணித்தால்; அல்லது ஆண்கள் பேணப் பெண்கள் பேணுதிருந்தால் அங்கே நிச்சயம் குறைபாடு ஏற்படவே செய்யும். இதனுற்ருன் அல்லாஹ் தன் திருமறையாம் அல்குர்ஆனில் பின்வருமாறு கூறுகிருன்:

أَفَتُؤْمِنُونَ بِبَعْضِ ٱلْكِتَٰبِ وَتَكْفُرُونَ بِبَعْضٍ ۚ فَمَا جَزَآءُ مَن يَفْعَلُ ذَٰلِكَ مِنكُمْ إِلَّا خِزْىٌ

فِي الْحَيَاةِ الدُّنْيَا ۖ وَيَوْمَ الْقِيَامَةِ يُرَدُّونَ إِلَىٰ أَشَدِّ الْعَذَابِ ۗ وَمَا اللَّهُ بِغَافِلٍ عَمَّا تَعْمَلُونَ

*''நீங்கள் இறைவேதத்திற் சில விஷயங்களை நம்பி வேறு சிலவற்றை நிராகரிக்கின்றீர்களா? உங்களில் எவர்கள் இவ்வாறு செய்கின்றனரோ அவர்களுக்கு இவ்வுலக வாழ்வில் இழிவைத் தவிர வேறு பிரதி பலன் கிடையாது. மறுமையில் கடுமையான வேதனையின் பால் தள்ளப்படுவார்கள். நீங்கள் செய்பவை பற்றி அல்லாஹ் பராமுகமாயிருக்கவில்லை'' (2:85)*

يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا ادْخُلُوا فِي السِّلْمِ كَافَّةً وَلَا تَتَّبِعُوا خُطُوَاتِ الشَّيْطَانِ ۚ
إِنَّهُ لَكُمْ عَدُوٌّ مُبِينٌ

*''விசுவாசிகளே, நீங்கள் இஸ்லாத்தில் முற்றாகப் பிரவேசியுங்கள். ஷைத்தானின் அடிச்சுவடுகளைப் பின்பற்றாதீர்கள். நிச்சயமாக அவன் உங்களுக்குப் பகிரங்க விரோதி'' (2:208)*

## சொத்துரிமை

ஆண்களுக்குத் தம் சொத்துக்களில் பூரண உரிமை இருப்பது போன்றே பெண்களுக்கும் தம் சொத்துக்களில் பூரண உரிமையுண்டு. இதை இரத்த சொந்தங் காரணமாகவோ விவாக பந்தல் காரணமாகவோ எவரும் பறிக்க முடியாது.

لِلرِّجَالِ نَصِيبٌ مِمَّا اكْتَسَبُوا ۖ وَلِلنِّسَاءِ نَصِيبٌ مِمَّا اكْتَسَبْنَ

*''ஆண்களுக்கு அவர்கள் சம்பாதித்தவை உரியன; பெண்களுக்கும் அவர்கள் சம்பாதித்தவை உரியன.'' (4:32)*

வாரிசுரிமையிலும் ஆண்களுக்கிருப்பது போன்றே பெண்களுக்கும் உண்டு.

لِّلرِّجَالِ نَصِيبٌ مِّمَّا تَرَكَ الْوَالِدَانِ وَالْأَقْرَبُونَ وَلِلنِّسَاءِ نَصِيبٌ مِّمَّا تَرَكَ الْوَالِدَانِ
وَالْأَقْرَبُونَ مِمَّا قَلَّ مِنْهُ أَوْ كَثُرَ نَصِيبًا مَّفْرُوضًا

''பெற்றோரும் நெருங்கிய உறவினரும் விட்டுப் போனவற்றில் ஆண்களுக்குப் பங்குண்டு. அவ்வாறே பெற்றோரும் நெருங்கிய உறவினரும் விட்டுப் போனவற்றில் பெண்களுக்கும் பங்குண்டு. அது கொஞ்சமாகவோ அதிகமாகவோ இருந்தபோதிலும். இது அல்லாஹ்வால் விதிக்கப்பட்ட பாகமாகும்.'' (4:07)

அனந்தரச் சொத்தில் பெண்களின் நலன் விஷேடமாகப் பேணப்படுகிறது என்று கூறினல் மிகையாகாது. ஏனெனில் ஒருபெண், இஸ்லாமிய வாழ்க்கை அமைப்பில் சிறுவயதில் தன் தந்தையின் பராமரிப்பில் அல்லது சகோதரன் போன்றவரின் பராமரிப்பிலும், விவாகம் செய்யப்பட்டதுமுதல் தன் கணவனின் பொறுப்பிலும் அப்பால் ஆண் மக்களின் பொறுப்பிலும் இருக்கிருள். இப்பொறுப்பாளர்கள் இவளுக்கு உணவு, உடை, உறைவிடம் என்பன கொடுக்க வேண்டும். ஆகவே இவளுடைய சொந்தப் பொருட்களிலிருந்து இவள் எதையும் செலவிடத் தேவையில்லை. இந்த நிலையிலும் ஒருவர் இறந்துவிட்டால் அவருக்கு ஒரேயொரு பெண் மகவு மாத்திரம் இருந்தால் இவளுக்கு இறந்து போன தன் தந்தையின் முழுச் சொத்துக்களில் நேர்பாதி கொடுக்கப்பட வேண்டும். இரண்டோ அதற்கதிகமாகவோ பெண்மக்களிருந்தால் இவர்கள் யாவருக்கும் தந்தையின் சொத்தில் மூன்றிலிரண்டு பங்கு சமமாகப் பிரிக்கப்படும். ஆண்மக்களும் பெண்மக்களுமிருந்தால், தந்தையின் சொத்

தில் இவர்களுக்குள்ள பங்கு, ஆண்களுக்கு இரு மடங்கு என்ற விகிதத்தில் பகிர்ந்தளிக்க வேண்டும்.

மகனின் சொத்தில் தாயாருக்கு மூன்றில் ஒன்று கொடுக்கப்பட வேண்டும். இம்மகனுக்கு சகோதரர்களிருந்தால் தாயாருக்கு ஆறிலொன்று கொடுக்கப்பட வேண்டும். அவ்வாறே ஒரு மனைவிக்குத் தன் கணவனின் சொத்தில் நான்கில் ஒரு பங்கு அல்லது எட்டிலொரு பங்கு கொடுக்கப்பட வேண்டும்.

விவாக ஒப்பந்தம் நடைபெறும்போது, மணமகளாகும் பெண்ணுக்கு அவளின் கற்புக்குப் பரிசாக மணமகன் மஹர் கொடுக்க வேண்டும் என்கின்றது இஸ்லாம். இது பணமாகவோ பொருளாகவோ பயனுள்ள ஒரு கல்வியாகவோ இருக்கலாம். இப்படி மஹராகவோ வேறு நன்கொடையாகவோ மனைவிக்குக் கொடுத்தவற்றை திருப்பி வாங்கக்கூடாது என்றும் கூறுகிறது அல்குர்ஆன்:

وَلَا يَحِلُّ لَكُمْ أَنْ تَأْخُذُوا مِمَّا آتَيْتُمُوهُنَّ شَيْئًا

''நீங்கள் அவர்களுக்குக் கொடுத்தவற்றிலிருந்து எதையும் எடுத்துக் கொள்வது உங்களுக்கு ஆகுமானதல்ல''. *(2:229)*

وَإِنْ أَرَدْتُمُ اسْتِبْدَالَ زَوْجٍ مَكَانَ زَوْجٍ وَآتَيْتُمْ إِحْدَاهُنَّ قِنْطَارًا فَلَا تَأْخُذُوا مِنْهُ شَيْئًا
أَتَأْخُذُونَهُ بُهْتَانًا وَإِثْمًا مُبِينًا

நீங்கள் ஒரு மனைவியை நீக்கிவிட்டு மற்றொரு பெண்ணை மணந்துகொள்ள விரும்பினால், அவர்களில் ஒருவருக்கு நீங்கள் ஒரு பொற்குவியலைக் கொடுத்திருந்தாலும், அதிலிருந்து எதனையும் நீங்கள் எடுத்துக்கொள்ளாதீர்கள். அபாண்டமாகவும்

பகிரங்கமாகவும் பழி சுமத்தி அதை நீங்கள் பறித்துக்கொள்ளலாமா!'' (4:20)

மனைவிக்குக் கொடுத்தவற்றையே திருப்பியெடுக்க வேண்டாம் என்பது இஸ்லாமியப் போதனை. ஆனால் நம்மவர்கள் இன்று என்ன செய்து கொண்டிருக்கின்றனர்? கல்யாணச் சந்தையிலே காளையர் பேரம்பேசி விற்கப்படுகின்றனர். சில படித்த வாலிபர்களும், அதிலும் இஸ்லாம் இஸ்லாம் என்று இரவுபகலாக சேவை செய்து கொண்டிருந்த சொல் வீரர்களும் அழகான வீடுகளுக்கும் புதுப்புது மோட்டார் வண்டிகளுக்கும் ஏமாந்து போகின்றார்கள். அவ்வளவுதான் இவர்களின் சீதன எதிர்ப்புப் போராட்டமும் அடங்கிவிடுகிறது. சில ஆர்வமுள்ள முஸ்லிம் வாலிபர்கள் தங்கள் இஸ்லாமிய அறிவையெல்லாம் தங்கள் பேராசை பிடித்த தாய்தந்தையரின் அதட்டலுக்கு அடைக்கலமாக்கிவிடுகின்றனர். ''உன்னுடைய மார்க்கமெல்லாம் உன்னோடு வைத்துக்கொள்! உனக்கு ஒரு மனைவியைத்தேடி முடித்துவைப்பது எங்கள்கடமை'' என்று கூறி இவர்களை பணத்துக்கு அடிமையாக்கிவிடுகின்றனர் பெற்றோர். அவ்வளவுதான், விலைபோன இவர்களின் வீரமும் சமூகசேவையும் இஸ்லாமியப் பற்றும் அடக்கப்பட்டு விடுகிறது. இது நிச்சயமாக இஸ்லாமிய முறையல்ல.

ஒரு பெண், தன் சொத்துக்களையோ வர்த்தகத்தையோ தானே நிர்வகிக்க எவ்விதத் தடையுமில்லை. இதில் கணவன் தலையிட அதிகாரமில்லை. ஆனால் இது, தன் கணவனுக்குச் செலுத்தவேண்டிய கடமைகளுக்கு முழுக்குப்போடவோ இஸ்லா

மிய நடை, உடை, பாவனைக் கட்டுப்பாடுகளை மீறவோ ஒரு காரணமாகக் காட்டமுடியாது.

## கல்வியுரிமை

கல்வி கற்பதில் ஆண்களுக்கிருக்கும் உரிமை பெண்களுக்கும் உண்டு. ''அவர்களுக்கு (பெண்களுக்கு) கல்விகற்பியுங்கள்; அல்லாஹ்வை தூய்மைப்படுத்துமாறு அவர்களுக்கு ஏவுங்கள்'' என்று முஹம்மத் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். கல்விபற்றிய அல்குர்ஆன் வசனங்கள் யாவும் ஆண்களையும் பெண்களையும் பொது'வாகவே குறிப்பிடுகின்றன.

உமர் (றளி) அவர்களின் மகள் ஹப்ஸா (றளி) அவர்கள், ஷிபாஉல் அதவிய்யா என்ற பெண்மணியிடம் அறபிமொழி பயின்று வந்தார்கள். இவர்களை மணம் முடித்துக்கொண்ட முஹம்மத் (ஸல்) அவர்கள் தொடர்ந்து அப்பெண்ணிடம் கற்க உத்தரவிட்டார்கள். இதற்கான ஏற்பாடுகளையும் செய்துவைத்தார்கள்.

சாதாரண கல்விகளில் மாத்திரமல்ல யுத்தப் பயிற்சிகளிலும் முஸ்லிம்பெண்கள் ஈடுபட்டதாக சரித்திரம் கூறுகிறது. அபூபக்கர் (றளி) அவர்களின் அன்பு மகளான ஆய்ஷா (றளி) என்னும் பெண்மணி ஈட்டி எறிதலிலும் அம்பெய்வதிலும் ஆண்களைவிட விசேஷம் பெற்றிருந்தார்கள்.

அல்லாஹ்வின் தூதரும் சகாபாக்களும் ஜிஹாத் எனும் அறப்போருக்குச் சென்றபோது அவர்களோடு பெண்களும் சென்று யுத்த நடவடிக்கைகளில்

ஈடுபட்டுள்ளார்கள். தோல்வியடைந்து ஓடிய எதிரிகள் விட்டுச்சென்ற பொருட்களை அங்கு வந்த ஆண்களுக்கும் பெண்களுக்கும் சமமாகவே பங்கிட்டுக்கொடுத்தார்கள் அல்லாஹ்வின் தூதர்.

ஒரு முறை உமையா பிந்த் கைஸ் என்ற பெண் மணி, நபி (ஸல்) அவர்களுடன் சென்று எதிரிகளை மிக்க வன்மையாகத் தாக்கினார்கள். போரில் முஸ்லிம்களுக்கே வெற்றி கிட்டியது. யுத்தத்தில் இப்பெண்மணி காட்டிய தீரச் செயலுக்காக இவருக்கு ஒரு மாலையைக் கொடுத்து இவரை அல்லாஹ்வின் தூதர் முஹம்மத் (ஸல்) அவர்கள் கௌரவித்தார்கள். நபி (ஸல்) அவர்களின் கரங்களால் கொடுக்கப்பட்ட அம்மாலையைத் தம் மரணம் வரை மிக்க மரியாதையோடு அணிந்து வந்தார், உமையா (றளி) அவர்கள். தன் மரணத்தின் பின் தன்னுடன் அம்மாலையும் அடக்கப்படவேண்டும் என்று கேட்டுக் கொண்டார்கள். அப்படியே அம்மாலை கழற்றப்படாமலே அவர்கள் அடக்கம் செய்யப்பட்டார்கள்.

ஒருமுறை முஸ்லிம்களுக்கும் ரோமர்களுக்குமிடையில் யுத்தம் மூண்டது. முஸ்லிம் வீரர்கள் எதிரிகளோடு போர்செய்யப் புறப்பட்டார்கள். மணக்கோலத்திலிருந்த வீராங்கனை உம்முஹக்கீம் அவர்களும் தம் கணவரோடு போர்க்களம் நோக்கிச் சென்றார்கள். அங்கே யுத்தத்தில் தம் அன்புக் கணவன் எதிரிகளின் வாளுக்கு இறையாகி ஷஹீதானதைக்கண்டு சற்றும் அதிர்ச்சியடையவில்லை உம்முஹக்கீம் அவர்கள். தன் உடையை நன்கு வரிந்து கட்டிக்கொண்டார்கள். எதிரிகளைத் தாக்கத்

தக்க ஆயுதங்கள் எதுவும் கிடைக்கவில்லை. உடனே பாய்ந்து தமது கூடாரத்தின் தடியைப் பிடுங்கி யெடுத்தார்கள். எதிரிகளின் பக்கம் பாய்ந்தார்கள். அத்தடியாலே ஏழு எதிரிகளை வீழ்த்தினார்கள். யுத்தம். முஸ்லிம்களுக்கு வெற்றியோடு முடிந்தது. இப்பெண்மணியின் வீரச்செயலின் நினைவாக அங்கிருந்த பாலமொன்றுக்கு இவரின் பெயர் சேர்த்து உம்முஹக்கீம் பாலம் என்று அழைக்கப்பட்டது. இன்றும் இப்பெயர் வழங்கப்படுகிறது.

## திருமண உரிமை

விவாகம் செய்து கொள்வதிலும் ஆணுக்கிருப்பது போன்று பெண்ணுக்கும் பல உரிமைகள் உண்டு. இஸ்லாமிய அமைப்பில் ஒரு பெண்பிள்ளை பருவமடைந்தவுடன் அல்லது குறிப்பிட்ட ஒரு வயதை அடைந்ததும் சகல கட்டுப்பாடுகளைவிட்டும் வெளியே வந்துவிடவில்லை. தந்தை, பாட்டன், சிறியதந்தை, பெரியதந்தை, சகோதரன் முதலான ஒருவரின் மேற்பார்வையிலேயே இருக்கிறாள். ஆகவே இவளின் விவாக வாழ்க்கைக்கு ஆவன செய்வதில் இவர்கள் கவனம் செலுத்துவார்கள். இவர்கள் தெரிவு செய்யும் கணவனை தக்க காரணங்களுடன் மறுக்க இப்பெண்ணுக்கு உரிமையுண்டு. இவளுக்குள்ள இவ்வுரிமை, இவளின் தந்தையின் பொறுப்பில் இவள் இருக்கும்போதும் ஏனையோரின் பொறுப்பில் இருக்கும் போதும் சமமான நிலையில் இருக்காது. அப்படி இவ்வுரிமை, இவள் கன்னிப்பெண்ணாயிருக்கும் போதும் கன்னியழிந்தவளாயிருக்கும் போதும் ஒரே தரமாயிருப்பதில்லை. அதாவது ஒரு கன்னிப் பெண்ணைவிட கன்னித்தன்மை இழந்தவள்

தன் கல்யாணத்தை மறுக்க கூடுதலான சுதந்திரத்தைப் பெறுகிறாள்.

கணவனுக்கு மனைவியை விட்டுப்பிரிய சில முறைகள் உண்டு. அப்படியே மனைவிக்கும் தன் கணவனைவிட்டுப் பிரிய முறையுண்டு முன்னையது ''தலாக்'' எனப்படுகிறது. பின்னையது ''குல்உ'' எனப்படுகிறது. விவாக பந்தம், பிரிக்க முடியாத ஒன்று என்று இஸ்லாம் கூறவில்லை. நிம்மதியான மகிழ்ச்சியான ஒரு வாழ்வுக்கு உதவாத பட்சத்தில், விவாக வாழ்க்கை ஒரு நரக வாழ்வாக மாறக்கூடும். அல்லது கணவன் ஒரு வழியிலும் மனைவி மற்றொரு வழியிலும் முறையற்ற தொடர்புகளை வைத்துக் கொண்டு, உடனிருந்து வாழும் துரோகிகளாகக் கூடும். சில வேளை இத்தகைய தீய உபாயங்கள் படுகொலைகளில் முடியவும் இடமுண்டு. அல்லது ஒருவரிடம் காணப்படும் கொடிய நோய் இருவரையும் அழித்துவிடக்கூடும். இத்தகைய நிலைகளை விட, எவ்விதப் போராட்டமும் இன்றி இருவரும் தம் விவாகப் பந்தத்தைப் பிரித்துக்கொண்டு, அமைதியாகப் பிரிந்து வாழ்வதே சமுதாய சுபீட்சத்துக்கு நல்லது என்று இஸ்லாம் கருதுகிறது. இந்த அடிப்படையிலேதான் விவாக விடுதலையை இஸ்லாம் அங்கீகரித்துள்ளது.

இவ்விஷயத்தை மனிதன் அனுபவத்தோடு இணைத்துப் பார்க்க வேண்டும். விவாக விடுதலையான தலாக் அல்லது குல்உ அனுமதிக்கப்பட்டுள்ள முஸ்லிம் உலகில் ஏராளமான விவாகப் பிரிவினைகள் நடப்பதாகத் தெரியவில்லை. மிகவும் அரிதாகவே காணப்படுகின்றன. ஏனெனில் மனிதன், சாதா

ரணமாகத் தன் மனைவியை விட்டுவிடவோ ஒதுக்கி விடவோ விரும்புவதில்லை. அப்படி விரும்பினாலும் இறைவன் அனுமதித்துள்ளவற்றில் அவனுக்கு மிக வும் விருப்பக்குறைவான செயல்தான் தலாக் என்று அல்லாஹ்வின் தூதர் எச்சரிக்கை செய்துள்ளார் கள். அதே வேளையில் கணவன் — மனைவிக்கிடை யில் ஏற்படும் பிணக்குகளை எப்படித் தீர்த்துக் கொள்ள வேண்டும் என்பது பற்றி, மிக்க உயர்ந்த பண்பான முறைகளை அல்குர்ஆனும் அல்லாஹ்வின் தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களின் முன்மாதிரி களும் மனித சமுதாயத்துக்குப் போதித்துக் கொண்டேயிருக்கின்றன.

## கருத்துரிமை

ஆண்களுக்கு தங்கள் கருத்தை வெளியிட உரிமை யிருப்பது போன்று பெண்களுக்கும் தங்கள் கருத்தை வெளியிட உரிமையுண்டு. அல்லாஹ்வின் கட்டளை களும் அவனுடைய தூதரின் போதனைகளும் மட் டுமே இவர்களைக் கட்டுப்படுத்த முடியும். இந்த நிலையை இஸ்லாம்தான் உலகில் நிலைநாட்டியது. முஹம்மத் (ஸல்) அவர்களின் காலத்திலேயே இப் படியான நிலையைப் பெண்கள் அடைந்தார்கள்.

ஜிஹாத் எனும் அறப்போரில் ஆண்களே அதி கமாகக் கலந்து கொள்வதைக் கண்டு இத்தகைய புனிதமிக்க தியாகத்தில் ஈடுபட எமக்கும் வாய்ப் பேற்பட வேண்டுமே என்ற ஆர்வத்தால் உந்தப் பட்ட ஜைனப் (றளி) எனும் பெண்மணி, அல்லாஹ் வின் தூதரிடம் வந்து நின்றார்கள். என்ன விஷயம் என்று கேட்கப்பட்டது. ''அல்லாஹ்வின் தூதரே,

நீங்கள் ஆண்களுக்கும் பெண்களுக்கும் தூதராகத் தானே வந்துள்ளீர்கள். ஜிஹாத் செய்வதற்கு ஆண்கள்தானே புறப்படச் சொல்கின்றீர்கள். இப்புனிதப் போரின் நன்மைகள் ஆண்களுக்கு மாத்திரமே கிடைக்கின்றன. ஆண்கள் போருக்குப் புறப்படும் போது அவர்களுக்குத் தேவையான உடை, உணவு போன்றவற்றை நாங்கள்தானே தயார்செய்து கொடுக்கிறோம். அவர்கள் வீடுதிரும்பும்வரை அவர்களின் செல்வக்குழந்தைகளை நாமே பராமரிக்கின்றோம். கால்நடைகளையும் வீடு, தோட்டங்களையும் நாமே பாதுகாக்கின்றோம்.'' என்று ஒரு பிரசங்கமே செய்துவிட்டார்கள். இதை புன்னகை பூத்த முகத்தோடு கேட்டுக்கொண்டிருந்த இறை தூதர் (ஸல்) அவர்கள் தம் தோழர்களைப் பார்த்து ''ஒருபெண் இவ்வளவு துணிவாகப் பேசுவாள் என்று நீங்கள் எதிர்பார்த்ததுண்டா?'' என்றார்கள். ''அல்லாஹ்வின் தூதரே நாம் எதிர்பார்க்கவே இல்லை'' என்றனர் தோழர்கள்.

ஜைனப் (றளி) அவர்களின் இக்கேள்வி அன்று பெண்களைப் பீடித்திருந்த அடிமை உணர்வு அற்றுப் போய்விட்டது என்ற உண்மையை அல்லாஹ்வின் தூதருக்கு உணர்த்தியது. எனவேதான் தமது இலட்சியப் போதனையின் பயனைக் கண்ட அவர்கள் புன்முறுவல் பூத்தார்கள். இந்தப் பெண் கேட்ட கேள்வி மதீனத்து மாதர்களின் ஏகோபித்த கேள்வி என்பதையும் உணர்ந்துகொண்டார்கள். எனவே பின்வருமாறு பதிலளித்தார்கள்.

''ஒரு பெண், அல்லாஹ்வையும் அவனுடைய நேர்வழியையும் நம்பியேற்று ஜிஹாதுக்காகப் புறப்

படும் தன் கணவனுக்கு ஆகவேண்டிய உதவிகளை யெல்லாம் செய்துகொடுத்து அவர் வெளியே சென்றது முதல் வீடு திரும்பும்வரை அவரின் பிள்ளைகளைப் பராமரித்து வீட்டையும் பொருட்களையும் பாது காத்துக் கொண்டு வீட்டிலிருந்தால் அவளுக்கு தன் கணவன் செய்த ஜிஹாதின் நற்கூலி கிடைக்கிறது; இச்செய்தியை உமது தோழிகளான ஏனைய பெண்களுக்கும் கூறுவீராக.''

இஸ்லாம் பெண்களுக்குக் கொடுத்த விமோசன வாழ்வையும் அதன் பெறுமதியையும் விளங்கிக் கொள்ள வேண்டுமானால், இஸ்லாம் தோன்றிய போது பெண்களின் நிலை எவ்வாறிருந்தது என்பதை நாம் கவனிக்க வேண்டும். இன்றைய நவீன உலகில் நாகரீகத்தின் பெயரால் பெண்மை எவ்வாறு சீரழிக்கப்படுகிறது என்றும் கொஞ்சம் கவனித்தால், இஸ்லாமிய வாழ்க்கை முறையின் மகிமை மேலும் துலங்கும். நான் முஸ்லிம் பெண்ணாய்ப் பிறந்ததையிட்டுக் கவலைப்படுகிறேன். என்று நாக்கூசாமல் கூறும் மேதைப் பெண்களுக்கும் தங்கள் கணிப்பு பிழையானது என்று விளங்கும்.

அரேபியாவில்: அறிவில்லாத காலம் — ஜாஹிலிய்யாக் காலத்தில் பெண்கள் ஒரு பீடையாகக் கருதப்பட்டனர். ஏனைய பொருட்களைப் போன்று ஆண்களின் உடைமையாயிருந்தனர். ஆண்களால் விரும்பியவாறு நடத்தப்பட்டனர், விற்கப்பட்டனர். தேவையான போது தங்கள் பாலுணர்ச்சியைத் தணித்துக் கொள்ளப் பயன்படுத்தப்பட்டனர். பெண்பிள்ளைகளை வைத்துக் கொண்டிருப்பது

பல வகையிலும் தொல்லை தருகின்றபடியால் பெற்ற வுடனே அவர்களைப் புதைத்துவிடுவது சிறந்தது என்று அன்றைய புத்திசாலிகள் ஆலோசனை கூறினர். எல்லோரும் இவ்வரிய ஆலோசனையைப் பின்பற்றினர். எனவே அது அன்றைய அறபிமக்களின் பண்பாடாக ஆயிற்று. இன்று இதேவேலை நாகரீகத்தின் பெயரால் நடைபெறுகின்றது. நமது புத்திசாலிகளும் இது மிகவும் நல்லது செய்து கொள்ளுங்கள் என்று எமது பாமர மக்களுக்கு ஆலோசனை கூறுகின்றனர். ஆனால் அன்று செய்யப்பட்டது மௌட்டீகம் — ஜாஹிலிய்யத்து. இன்று நடைபெறும் நவீன சிசுக்கொலைக்குப் பெயர் குடும்பக் கட்டுப்பாடு — நவீன ஜாஹிலிய்யத்து. இவ்விரண்டுக்கும் அன்று கூறப்பட்ட காரணமும் இன்று சொல்லப்படும் காரணமும் அடிப்படையில் ஒன்றுதான் அது தான் வறுமை!

அன்று அறியாமையால் சிசுக்கொலை செய்தவர்கள், தாம் பெற்றெடுத்த குழந்தைகள் பெண்கள் என்று தெரிந்த பிறகு வறுமையை மாத்திரமின்றி சுயமரியாதை, குடும்ப கௌரவம் மானக்கேடு என்பவற்றையெல்லாம் பயந்துதான் அவர்களைக் கொலை செய்தார்கள். இன்றைய நவீன சிசுவதை ஆண்பிள்ளைகளையும் விட்டுவைக்கவில்லை. இவர்களுக்குரிய ஒரே காரணம் வறுமை வந்து விடுமோ என்ற பயம்தான். இப்படி வறுமை வந்து, உங்களையெல்லாம் அழித்து விடும் என்று எம்மைப் பூச்சாண்டிகாட்டும் மேதாவிகள் ஏராளமான தானியங்களை நடுக்கடலிற் கொட்டிக்கொண்டுதான் எங்கள் நல்வாழ்வுக்குப் புத்தி சொல்கிறார்கள். வளர்முக நாடுகளின் உணவுத் தட்டுப்பாட்டை நிவர்த்தி

செய்ய இந்நாடுகளில் தானியக் களஞ்சியங்களை நிறுவும் ஆலோசனைக்கும் எதிர்ப்புத் தெரிவித்தவர் கள் இந்தப் பரோபகார மகான்களே. ஏழை நாடு களுக்கிடையே மோதலை உண்டாக்கி பொம்மலாட் டம் நடத்தும் சுக்கான்களும் இந்த மேதைகளின் கைகளிலேயே இருக்கின்றன.

அன்று, ஜாஹிலியத்தின் சிசுவதையைத் தடை செய்த அல்லாஹ்வின் அருள்வாக்கையே இன்றைய நவீன ஆராய்ச்சியாளருக்கும் கூறிவைக்கின்றோம்.

وَلَا تَقْتُلُوٓا۟ أَوْلَـٰدَكُمْ خَشْيَةَ إِمْلَـٰقٍ ۖ نَّحْنُ نَرْزُقُهُمْ وَإِيَّاكُمْ ۚ إِنَّ قَتْلَهُمْ كَانَ خِطْـًٔا كَبِيرًا

''நீங்கள் வறுமையைப் பயந்து உங்கள் குழந்தை களைக் கொலை செய்யவேண்டாம். அவர்களுக்கும் உங்களுக்கும் நாங்களே உணவுத்தருகிறோம். அவர் களைக் கொல்வது நிச்சயமாக பெரிய தவறான செயலாகும்'' (17:31), (6:151)

நல்ல வேளையாக அன்று அல்லாஹுதஆலா இந்த வசனத்தில் பெண்பிள்ளைகளை மட்டும் குறிப்பிடாமல் பொதுவாகப் பிள்ளைகள் என்றே குறிப்பிட்டான். அப்படியில்லையென்றால் இருபதாம் நூற்றாண்டு மேதாவிகள் இது பெண்பிள்ளைகளைத்தானே குறிக் கிறது என்று நியாயம் பேசியிருப்பார்கள். இத்த கைய சிசுவதை இருபதாம் நூற்றாண்டு சீதேவிகளிட மும் தலைதூக்கும் என்பதை வல்லநாயன் அறிந்தி ருந்தான் என்பதும் தெளிவாகிறது. அல்குர்ஆன், முக்காலத்துக்கும் பொருத்தமானது என்பதற் இதுவும் ஒரு சான்றாகும். அறபி நாட்டில் பெண் கள் மிகமோசமாக நடத்தப்பட்டது 13 நூற்றாண் டுகளுக்கு முன்பு.........ஆனால்,

## ஐரோப்பாவில்:

ஐரோப்பா அன்று — அதாவது இஸ்லாம் தோன்றியபோது — இருண்ட கண்டமாக இருந்தது. ரோமாபுரிபோன்ற புராதன நகரங்களில் அடிமைப்பெண்கள் விற்பனைக்கு வைக்கப்பட்டிருந்தனர். ஏன் பெண்ணுக்கு இதயம் உண்டு என்பதையே நம்பாத நிலை அங்கே இருந்தது. எவ்வித பண்பட்ட கட்டுப்பாடும் இல்லாத காரணத்தால் பெண்மை ஆண்களின் விருப்பம்போல் பாவிக்கப்பட்டது என்றுதான் கூறவேண்டும்.

இன்று நாகரீகமடைந்த ஐரோப்பாவென்று இறுமாப்புக்கொள்ளும் அந்நாட்டில் என்ன நடக்கிறது. நாகரீகத்தின் பெயரால் பெண்கள் அடிமைப்படுத்தப்படுகின்றனர். அவர்களின் உரிமைகள் பல மறுக்கப்படுகின்றன. பிரெஞ்சு நாட்டுச் சமூகவிவ்காரச் சட்டத்தின் 217ஆம் பிரிவில் இவ்வாறு கூறப்படுகிறது:

''விவாகமான பெண், தன் கணவனிடமிருந்து எழுத்து மூலம் சம்மதம் பெற்ற பின்னரே அவளுக்குச் சொந்தமான பொருட்களை விற்கவோ, தருமம் செய்யவோ, மாற்றவோ, ஈடுவைக்கவோ, வேறொரு பொருளை வாங்கவோ முடியும்''

இன்றைய மேனாட்டுப் பெண், விவாகம் செய்து கொண்டவுடன் தன் பெயரையும் தன் தந்தையின் பெயரையும் குடும்பப் பெயரையும் இழந்துவிடுகிறாள். இவற்றிற்குப் பதிலாகத் தன் கணவரின் பெயரையும் அவரின் குலப்பெயரையும் வரிந்து கொள்ள வேண்டும். இது அப்பெண்ணின் உரி

மையைப் பறிப்பதாகும் என்பதை அவர்கள் உணர வில்லை. ஏன் அவர்களின் மனப்போக்கில் சிந்தனை செய்து பழக்கப்பட்ட நாமும் இதை உணரத் தவறி விட்டோம். எனவேதான் நாமும் நம் பெண்கள் விவாகம் செய்து கொண்டவுடன் அவர்களின் பேரைப் பறித்து திருமதி...... என்று வைத்துக் கொள்கிறோம். உரிமைப் போராட்டத்தில் இறங்கி யுள்ள நம்மவர்களும் இப்படித்தான் தங்கள் பெயர் களைக் கூறிக்கொள்கின்றனர்.

பொதுவுடைமையைப் பின்பற்றும் நாடுகளில் பெண்களின் நிலை மிகவும் கவலைக்கிடமானது. சம உரிமை என்ற போர்வையில் பெண்மைக்குப் பொருத்தமற்ற முரட்டு வேலைகளில் பெண்கள் ஈடுபடுத்தப்படுகின்றனர். கள்ளங்கபடம் அறியா ஏழைப் பெண்கள் மாடாய் உழைக்கின்றனர். அதே வேளை சோம்பேறித் தடிப்பயல்களான வாலி பர்கள் சட்டத்தை ஏமாற்றி வெட்டிச்சோறு தின் கின்றனர். இதற்குப் பெயர் சமத்துவமாம்.

மற்றொரு சாரார், சமத்துவம் நாகரீகம் எனக் கூறி, அப்பாவிப் பெண்களை ஏமாற்றி அவர்களை நிர்வாணமாக அலையவிட்டுத் தங்கள் சுயநலமிக்க மட்டரகமான ஆசைகளைத் தீர்த்துக்கொள்ள அவர் களை இரையாக்கிக் கொள்கின்றனர். சத்திரத்திலும் சாவடியிலும் தங்கள் கற்பையும் கௌரவத்தையும் பெண்மையையும் நாகரீகத்தின் பெயரால் பறி கொடுத்துவிட்டு கடைசியில் நடுத்தெருவில் நின்று வானைப்பார்த்து வாயைப் பிளக்கின்றனர் இம் மேனாட்டுப் பெண்கள்.

எவ்வித அடிப்படையும் இல்லாத இக்குருட்டுச் சமத்துவம், உலகில் சாதித்தது என்ன? பெண்மை தன் தூய்மையை இழந்தது. அசிங்கமான செய்திகள் புள்ளிவிபரங்களின் உருவில் வெளிவந்து, சுயமரியாதையுள்ள மனிதனின் உள்ளத்தைத் துளைக்கின்றன.

அமெரிக்காவில் 60 சதவீதமான மாணவிகள், தம் கற்பைக் கலாசாலைகளிலேயே இழக்கின்றனர் என்று அந்த நாட்டுப் புள்ளி விபரமே கூறுகிறது. வேறு பல ஐரோப்பிய நாடுகளில் ஏராளமான தந்தையில்லாக் குழந்தைகள் பிறந்து கொண்டிருக்கின்றன. என்னவானாலும் இத்தகைய விவரங்களைப் புள்ளிவிபரங்களோடு வெளியிடுவதில் இந்நாடுகள் தயங்கவில்லை.

தங்கள் பாரம்பரியங்களெல்லாம் காலங்கடந்தவை என்று ஒதுக்கிவிட்டு, எதற்கெடுத்தாலும் மேனாட்டு குருக்களைப் பின்பற்றுவோர், தாம் எங்கே போய்க்கொண்டிருக்கிறார்கள் என்று சற்று சிந்தனை செய்ய வேண்டுகிறோம்.

<u>பாரதத்தில்:</u> இந்திய உபகண்டத்தில் அன்று வாழ்ந்த பிறமதத்து மக்கள், பெண்களுக்கு எவ்வித உரிமையும் வழங்கவில்லை. அங்கே அவளுக்கு சொத்துரிமை இருக்கவில்லை. தன் விருப்பப்படி ஒருவனை மணக்க முடியவில்லை. தந்தை தேடிக்கொடுக்கும் ஆடவனையே கணவனாக ஏற்கவேண்டும். அவன் வயது முதிர்ந்த கிழவனாகவோ, நோயாளியாகவோ, குரூபியாகவோ இருந்த போதிலும் சரியே.

கட்டிய புருஷன் என்ன அட்டகாசம் செய்தாலும் அவனோடு வாழ்வதன்றி விவாக விடுதலை

என்ற பேச்சே அவளுக்கில்லை. கல்லானாலும் கணவன்; புல்லானாலும் புருஷன் என்று மூத்தவர்கள் சொல்லிவிட்டார்கள்! இவளுக்கு இனி விமோசனமே இல்லை. ஆம் கணவன் ஒரு சில நாட்களில் இறந்து போனாலும் கட்டுக்குலையாத இவள், தன் வீட்டுக்குப் போகவோ வேறு ஒருவரை மறுமணம் செய்யவோ முடியாது! இறந்த கணவனைத் தகனம் செய்ய மூட்டப்படும் அக்கினியில் இவளும் நீரில் மூழ்கி வந்து பக்தியோடு பாய்ந்து சாம்பலாகி விடவேண்டும். இதைச் செய்ய மறுப்பவள் அல்லது தயங்குபவள் ஒரு பத்தினியான மனைவியாகக் கணிக்கப் படமாட்டாள். இதைச் செய்ய மறுக்கும் ஒரு பெண்ணை மற்ற பக்தர்கள் சும்மா விட்டுவிடப் போவதில்லை. பிடித்த பிடியில் அந்த அக்கினியில் தள்ளிவிடுவார்கள். இப்படிச் செய்வோரே சிறந்த பக்தர்கள் என்று கருதப்பட்டனர்.

மாதவிடாய் ஏற்பட்டதும் அவள் அசுத்தப் பிராணியாகக் கருதப்பட்டு, வீட்டைவிட்டு ஒதுக்கி வைக்கப்பட்டாள். அவள் உபயோகித்த பாத்திரங்கள் அசுத்தமானவை என்று ஒதுக்கப்பட்டன. அவள் மாதவிடாய் நின்று, நீராடி, வீடும் மாட்டுச் சாணத்தால் மெழுகப்பட்டாற்றான் அந்தவீடு மறுபடியும் தூய்மை பெறுகிறது. அவளும் தூயவளாகிறாள்.

உயர் குலத்தவர் செய்யும் தொழிலை தாழ்ந்த குலத்தவர் செய்யக் கூடாது. அது பெரும் பாவம் ஆகவே அப்படிச் செய்வோர் சமூகத்தின் தண்டனையிலிருந்து தப்ப முடியாது. உயர் குலத்தவரை மற்றவர் தொட்டால், உயர்குலத்தவர் அசுத்த

மடைந்து விடுவார். ஆகையால் நீரில் மூழ்கிக் குளித்து தம்மைச் சுத்தம் செய்து கொள்ள வேண்டும். என்றெல்லாம் பிராமணர்கள் கருதுகின்றனர்.

உலகின் பல கோணங்களிலும் பல குருட்டுக் கொள்கைகள் மலையேறிப் போயிருந்த நவீன காலத்திலும் மேலே கூறப்பட்ட பழக்கங்கள் இந்திய ஹிந்துக்களிடத்தில் ஊறிப்போயிருந்தன. 20ம் நூற்றாண்டிலேதான் இவற்றிற் சில நீக்கப்பட்டன. 1929ம் ஆண்டுதான் உடன்கட்டையேறுதல் எனும் பழக்கத்தை தடைசெய்யச் சட்டம் வந்தது. ஆயினும் ஐரோப்பியனின் சட்டத்துக்கு நாம் நமது சம்பிரதாயங்களை விட்டுக் கொடுப்பதா! என்று கூறிய பக்தர்கள் தங்கள் வழமையை விட்டுக் கொடுக்கவில்லை. இத்தகைய பழக்கங்கள் இந்தியாவிலிருந்து முற்றாக அகலவில்லை என்றுதான் தெரிகின்றது.

இந்திய பிறமதத்து மக்களின் விவாகத்திலும் எத்தனையோ சம்பிராயங்களைக் காண்கிறோம். சொத்துரிமையற்ற பெண்ணின் நலன்கருதாமல் உருவாக்கப்பட்டவையே அதிகம் காணப்படுகின்றன. சீதனம், கைக்கூலி, சீர்வரிசை, தாலி, மடிமாங்காய், புலால் விருந்து இப்படி எத்தனையோ உண்டு. இவையெல்லாம் வடநாட்டு ஆரியர்கள் புகுத்திய பழக்கங்கள் என்று சொல்லப்படுகிறது. சங்ககாலத் தமிழரிடம் இவை இருக்கவில்லை என்று கூறப்படுகின்றது. இதுபற்றி ஆராய நாம் இப்போது தயாரில்லை. அன்றைய இந்தியாவில் பெண்களின் நிலையை எடுத்துக்காட்டவே இவ்வளவும் கூறினோம்.

இந்திய உபகண்டத்தின் பெரும்பான்மையினரின் இப்பழக்க வழக்கங்கள் அங்கு வாழும் முஸ்

லிம்களிடமும் எப்படியோ புகுந்துள்ளன. இது தான் கலாசாரத் தாக்கம் எனப்படுகிறது. இலங்கைவாழ் முஸ்லிம்களிடையேயும் இப்பழக்கங்கள் வேரூன்றியுள்ளன. இவற்றில் அனேகமானவை இந்தியாவிலிருந்து வந்தவைகளே. பௌத்த சூழலில் வாழும் சில முஸ்லிம்களிடம் பௌத்த பழக்கங்கள் சில காணப்படுகின்றதையும் நாம் மறுப்பதற்கில்லை. இதில் ஆச்சரியப்பட ஒன்றுமில்லை.

ஆனால், நமக்கென ஒரு அழகிய முன்மாதிரியை அல்லாஹ்வும் றஸூலும் தந்திருக்க, அவை மிக அர்த்தமுடையனவாயும் பொருத்தமானவையாகவும் இருக்க, நம்மிடம் வந்தேறு குடிகளான அந்நிய கலாசாரங்களை இணங்கண்ட பிறகும் அவற்றை நீக்கிக்கொள்ள ஆர்வம் கொள்ளாமலும் உண்மையை சீரணிக்க முடியாமலும் நாம் திணறுவது தான் ஆச்சரியத்தைத் தருகிறது. நம்மிடம் வந்து புகுந்துகொண்ட இத்தகைய பித்அத்துக்களுக்கு நியாயம் கூறி வக்காலத்து வாங்கும் கூட்டத்தாரைக் காணும்போது, ஜாஹிலிய்யத்து நம்மைவிட்டுப் போகாது; அது போகத்துணிந்தாலும் நம் வக்கீல் கூட்டம் அதைப் போகவிடத் தயாரில்லை என்பது தெளிவாகிறது.

முஸ்லிம் பெருங்குடி மக்களே நீங்கள் கண்ணைத் திறந்தால் போதும். வந்தேறு குடிகள் உங்களை ஏமாற்ற முடியாது. உண்மையான இஸ்லாமியக் கல்யாணமுறை நம்மிடமிருக்க நமது கல்யாணத்துக்கு சீர் சிறப்பு வேண்டுமா? நிறைகுடமும் ஆலாத்தியும் வேண்டுமா? 'வுளூ செய்துகொண்டு காலுறையணிந்து காலனியுடன் வரும் மணமகனின்

காலை மச்சான் கழுவத்தான் வேண்டுமா? குடத்தை அவர் காலால் தட்டத்தான் வேண்டுமா? மஹர் செலுத்தி மணமுடிக்கும்போது தாலியொன்று கட்டத்தான் வேண்டுமா? தங்கநகை அணிய ஆண் மகனுக்குத் தடைவிதித்துள்ள இஸ்லாமிய விவாகத்தில் மணமகனுக்குத் தங்கமோதிரம் போட்டு ஒரு பாபத்தைச் செய்ய வேண்டுமா? அப்பாவி மணமகளை அலங்கரித்து காட்சிக்கு வைத்து, கண்டவர்க்கெல்லாம் அவளைக்காட்டி அவளுக்கும் பாபத்தைத் தேடிக்கொடுக்க வேண்டுமா? இவற்றையெல்லாம் விட்டுத்தள்ளி மக்களின் கஷ்டத்தைப் போக்கி இலகுவான இஸ்லாமிய முறையைப் பற்றி நடப்போம் என்று உண்மையைக் கூறுவோர்க்கு பழி சொல்வது முறையா? அறிவை வளர்ப்போம் அதிலும் இஸ்லாமிய அறிவை வளர்ப்போம் வாருங்கள்! அறியாமை இருள் ஓடிமறைந்துவிடும்.

**கிழக்கில்**

கீழைத்தேசங்களிலும் பெண்களின் நிலை திருப்திகரமாக இருக்கவில்லையென்பது சரித்திரச் சான்றுகளிலிருந்து தெளிவாகிறது. சில தேசங்களில் பெண்களின் ஆதிக்கம் அளவுமீறிக் காணப்படுகிறது. அதனல் பெண்களின் கட்டுப்பாடும் சீர்குலைந்துள்ளது. குடும்பத்தின் தலைமைத்துவத்தைப் பெண் வைத்துக்கொண்டு பல சிக்கலான பிரச்சினைகளுக்குள் விழுந்து விடுகிருள். இந்நிலையும் மனிதனின் சுமுகமான வாழ்வுக்கும் அவனுடைய இயற்கை அமைப்புக்கும் பொருந்தாது என்பதை அநுபவசாலிகளே கூறுகின்றனர்.

பல்வேறு நாடுகளிலும் ஒரு பெண்ணுக்குக் கொடுக்கப்பட்ட, கொடுக்கப்படும் உரிமைகளைக்

கவனிக்கும் போதுதான் இஸ்லாம் பெண்ணுக்குக் கொடுத்துள்ள உரிமைகளையும் கடமைகளையும் நாம் நன்கு உணர முடியும்.

பெண்களுக்கு மாத்திரமன்றி ஆண்களுக்கும் கற்புண்டு. இருபாலாரும் அதைப் பேணவேண்டும். ஒழுக்கத்தைக் கூறும்போது அல்குர்ஆன் பின்வருமாறு கூறுகிறது:

قُل لِّلْمُؤْمِنِينَ يَغُضُّوا مِنْ أَبْصَارِهِمْ وَيَحْفَظُوا فُرُوجَهُمْ ذَٰلِكَ أَزْكَىٰ لَهُمْ إِنَّ اللَّهَ خَبِيرٌ
بِمَا يَصْنَعُونَ ۝٣٠ وَقُل لِّلْمُؤْمِنَاتِ يَغْضُضْنَ مِنْ أَبْصَارِهِنَّ وَيَحْفَظْنَ فُرُوجَهُنَّ وَلَا يُبْدِينَ
زِينَتَهُنَّ إِلَّا مَا ظَهَرَ مِنْهَا وَلْيَضْرِبْنَ بِخُمُرِهِنَّ عَلَىٰ جُيُوبِهِنَّ وَلَا يُبْدِينَ زِينَتَهُنَّ إِلَّا لِبُعُولَتِهِنَّ
أَوْ آبَائِهِنَّ أَوْ آبَاءِ بُعُولَتِهِنَّ أَوْ أَبْنَائِهِنَّ أَوْ أَبْنَاءِ بُعُولَتِهِنَّ أَوْ إِخْوَانِهِنَّ أَوْ بَنِي إِخْوَانِهِنَّ أَوْ
بَنِي أَخَوَاتِهِنَّ أَوْ نِسَائِهِنَّ أَوْ مَا مَلَكَتْ أَيْمَانُهُنَّ أَوِ التَّابِعِينَ غَيْرِ أُولِي الْإِرْبَةِ مِنَ الرِّجَالِ
أَوِ الطِّفْلِ الَّذِينَ لَمْ يَظْهَرُوا عَلَىٰ عَوْرَاتِ النِّسَاءِ وَلَا يَضْرِبْنَ بِأَرْجُلِهِنَّ لِيُعْلَمَ مَا يُخْفِينَ مِنْ
زِينَتِهِنَّ وَتُوبُوا إِلَى اللَّهِ جَمِيعًا أَيُّهَ الْمُؤْمِنُونَ لَعَلَّكُمْ تُفْلِحُونَ

''நபியே விசுவாசிகளான ஆண்களுக்கு நீர் கூறும்: அவர்கள் தங்கள் பார்வைகளைக் கட்டுப்படுத்தவும். தங்கள் கற்பையும் பாதுகாத்துக் கொள்ளவும். இது அவர்களைப் பரிசுத்தமாக்கி வைக்கும். நிச்சயமாக அல்லாஹ் அவர்கள் செய்பவற்றை நன்கறிந்தவனாக இருக்கிறான். விசுவாசம் கொண்ட பெண்களுக்கு நீர் கூறும்: அவர்களும் தங்கள் பார்வையைக் கட்டுப்படுத்தி, தங்கள் கற்பையும் பேணிக் கொள்ளவும். தங்கள் தேகத்தில் வெளியே தெரியக் கூடியவற்றைத் தவிர தங்கள் அழகையும் அலங்காரங்களையும் வெளிக்காட்ட வேண்டாம். தங்கள் முந்தானைகளால் மார்பகங்களையும் மறைத்

துக் கொள்ளவும். தம்கணவர், தந்தையர், கணவரின் தந்தையர், குமாரர், கணவரின் குமாரர், சகோதரர், சகோதரரின் குமாரர், சகோதரிகளின் குமாரர், தங்களுடன் தொடர்புடைய பெண்கள், தம் வலக்கரம் சொந்தமாக்கிய அடிமைகள், அல்லது பெண்களைப் பற்றிய விருப்பற்று தங்களோடு சீவிக்கும் ஆண்கள், பெண்களின் மறைவான அங்கங்களை அறியாத சிறுவர்கள், ஆகியோரைத் தவிர மற்றெவர்க்கும் தங்கள் அழகையும் அலங்காரங்களையும் வெளிக்காட்ட வேண்டாம். தங்கள் மறைவான அழகு அலங்காரங்களை அறிவிக்கத் தம் கால்களைத் தட்டித்தட்டி நடக்க வேண்டாம். விசுவாசிகளே, நீங்கள் வெற்றிபெறுவதற்காக எல்லோரும் அல்லாஹ்வின்பால் மீளுங்கள்.'' *(24:30,31)*

يَٰٓأَيُّهَا ٱلنَّبِيُّ قُل لِّأَزْوَٰجِكَ وَبَنَاتِكَ وَنِسَآءِ ٱلْمُؤْمِنِينَ يُدْنِينَ عَلَيْهِنَّ مِن جَلَٰبِيبِهِنَّ ۚ ذَٰلِكَ
أَدْنَىٰٓ أَن يُعْرَفْنَ فَلَا يُؤْذَيْنَ ۗ وَكَانَ ٱللَّهُ غَفُورًا رَّحِيمًا

''நபியே, உமது மனைவியருக்கும் பெண்மக்களுக்கும், விசுவாசிகளின் பெண்களுக்கும் சொல்க: அவர்கள் தங்கள் முக்காடுகளை நன்கு தொங்க விட்டுக் கொள்வார்களாக. அவர்கள், கண்ணியமானவர்கள் என்று அறியப்பட்டு, எவ்வித துன்பத்துக்கும் உள்ளாகாதிருக்க இது நல்ல வழியாகும். அல்லாஹ் மிக்க மன்னிப்போனாகவும் கிருபையாளனாகவும் இருக்கிறான்.'' *(33:59)*

உடையைப் பொருத்தவரை இவ்வளவு தெளிவான ஒழுக்கம் இஸ்லாத்தில் மட்டுமே வரையறுத்துக் கூறப்பட்டுள்ளது, இது எவ்வளவு சிறந்த முறை என்பதை சற்று சிந்திப்போர் உணர முடி

யும். மனிதனின் உணர்வுகள் தவருன வழியிற் செல்லத் தூண்டுவதில் முக்கிய காரணியாய் உள்ள பார்வையைக் கட்டுப்படுத்துமாறு கூறி நின்று விடாமல், எங்கெல்லாம் இப்பார்வை விழுவதால் உணர்ச்சிகள் தட்டியெழுப்பப் . படுகின்றனவோ அங்கெல்லாம் இயன்றளவு மறைக்குமாறும் கூறு கிறது. இயல்பாக இத்தகைய உணர்வுகள் செயல் படாத உறவுமுறையுடையோரிடையே (உதாரண மாக, தந்தையும் மகளும், தாயும் மகனும், அண் ணனும் தங்கையும்...... அக்கட்டுப்பாட்டைத் தளர்த்தியுள்ளது.

பெண்கள் அழகானவர்கள் என்பது உண்மை. குரூபியானவளும் ஆண்களைப் பொறுத்தவரை கவர்ச்சியானவள். இது இயற்கையின் நியதி. இப்படித்தான் அல்லாஹ் மனிதனை மாத்திரமல்ல ஏனைய பிராணிகளையும் படைத்துள்ளான். இப் பெண்கள் அழகானவர்களாயும் இருந்தால், கவர்ச்சி மேலும் அதிகமாகும், இத்தகையோர் செயற்கை அலங்காரங்களையும் செய்துகொண்டால், கவர்ச் சிக்கு மேல் கவர்ச்சி. இவ்வனைத்தையும் பகிரங்கமா கத்திறந்து காட்டிக்கொண்டு திரிந்தால், உலகமே அழிவதற்கு அணுக்குண்டு எதுவும் தேவையில்லை! போரும் பொல்லாங்கும் பூசலும் நோயும் நிறைந்த ஒரு சமூகம் தினம் தினம் அழிந்து கொண்டே இருக்கிறது.

இத்தகைய அழிவுப்பாதையில் மனித இனம் அடியெடுத்து வைக்கக் கூடாது என்பதனுலேயே இஸ்லாம் கட்டுப்பாடுகளை விதித்துள்ளது. ஒரு பெண் தன் அழகையும் கவர்ச்சியையும் தன் கண

வனுக்குக் காட்டி மகிழ்ச்சிமிக்க வாழ்க்கையை அனுபவிப்பது தாம்பத்திய வாழ்வுக்கும் நல்லது. இறைவனிடமும் இது நல்ல செயல். ஆனல் மற்றவருக்குக் காட்டுவதும் மற்றவர் பார்த்து மதி மயங்கவோ மகிழவோ, புகழவோ, இகழவோ வாய்ப்பளிப்பதும் கொடுமை. தனக்குக் கொடுமை; மனித சமூகத்துக்கும் கொடுமை, உலகத்துக்கும் கொடுமை. இவ்வளவு பெரிய கொடுமையைச் செய்து, ஒருபெண் நன்மையை அடைய முடியுமா? நிச்சயமாக இம்மையிலும் முடியாது; மறுமையிலும் முடியாது. இந்த சாதாரண விஷயத்தை சீரணித்த சீதேவிப் பெண்கள் நம்மில் எத்தனைபேர் இருக்கின்றனர்!

நம் பெண்கள் மார்க்க ஒழுக்கங்களைப் பேணுதவர்கள் என்று நாம் கூறவில்லை. ஜாஹிலிய்யத்தின் அடிப்படையிலேதான் பேணவிரும்புகிறார்கள் என்று தான் கூறவிரும்புகிறோம்: பெண்கள் மாத்திரமல்ல ஆண்களும் அப்படித்தான்.

தாம் பாரம்பரியமாகச் செய்து வந்த தொழுகை, நோன்பு, போன்ற கடமைகளை மாத்திரமல்ல, ஸுன்னத்தான தராவீஹ், தஸ்பீஹ் போன்ற தொழுகைகளையும் ஆஷுரு, ஸவ்வால்மாத, (ஆறு நோன்பு) அரபா ஆகிய நோன்புகளையும் மிக அக்கறையாக நிறைவேற்றும் பெண்கள் சமூகத்தின் மேல் மட்டத்திலும் இருக்கின்றனர். இவற்றை பர்ளு, ஷர்த்து, ஸுன்னத்துக்களைப் பேணி நிறைவேற்றும் இத்தகைய சீமாட்டிகள் இஸ்லாம் கூறியபடி தங்களை மறைத்து உடையணிந்துகொள்ள

விரும்பவில்லை. இது ஒரு கொடிய பாபம், சமூகத் துரோகம், சமயத்துரோகம் என்பதை இவர்களால் சீரணிக்கவே முடியவில்லை. அதேவேளை இஸ்லாம் ஒரு சிறந்த வாழ்க்கைத்திட்டம் என்ற உண்மையை விளக்கிப் பேருரைகள் நிகழ்த்தவும் இவர்களால் முடிகிறது. ஒருமுறை 'இஸ்லாம் ஓர் ஒப்பற்ற வாழ்க்கைத் திட்டம்' என்ற தலைப்பில் அகில இலங்கை மட்டத்தில் நடந்த பேச்சுப் போட்டியில், ஓர் அழகிய இளம் பெண்ணுக்கு மத்தியஸ்தர்கள் பலரும் முதலாவது இடத்தை வழங்கியிருந்தார்கள். அப்பெண் மேடையிலே ஏறித் தன் பேருரையை நிகழ்த்திய சில நிமிடங்களுக்கேனும் தன்னை 'அந்த ஒப்பற்ற வாழ்க்கைத் திட்டம்' கூறுவதுபோல், ஆடைகளால் மறைத்துக்கொள்ள விரும்பவில்லை, தன் அழகான மேனியை ஆயிரம் ஆயிரம் மக்கள் விருப்பம்போல் இரசிக்கத் திறந்து கொண்டே பேசி முடித்தாள். ஆகவே, அப்பெண்ணுக்கு முதலாம் இடத்தைக் கொடுத்தீர்களே; அவளுடைய அழகைப் பார்த்துப் புள்ளி வழங்கினீர்களா; அல்லது இவ் வளவு பகிரங்கமாக இஸ்லாத்துக்கு அவள் செய்த துரோகச் செயலுக்கா? என்று அம்மத்தியஸ்தர்க ளிடம் கேட்டேன். அப்பொழுதுதான் அம்மேதை களுக்கும் மயக்கம் தெளிந்தது.

இங்கே மற்றொரு விஷயத்தையும் நினைவுறுத்தி வைக்கிறோம். அதாவது இஸ்லாம் தோன்றிய அறபிநாடுகளில் முஸ்லிம் பெண்கள் மேநாட்டு உடைகளையே அதிகமாக அணிகிறார்களே நாம் அதை விட மோசமாகவா அணிகிறோம்? அவர்களுக்கு இஸ்லாம் தெரியாதா? என்று நியாயிப்பவர்களும் உண்டு.

ஆம், நீங்கள் கூறும் செய்தி உண்மைதான். அவர்களின் உடையை விட உங்கள் உடை இஸ்லாத்திற்கு கிட்டியே இருக்கிறது: ஆனுல் முற்றிலும் இஸ்லாமிய உடையாகவில்லே. வாகனத்திற்கு பக்கத்தில் நின்றவர்களே வாகனம் கொண்டு செல்வதுண்டா. வாகனத்திற்குள்ளே ஏறிக்கொண்டவர்களேத்தான் அது கொண்டுபோய் விடுகிறது. அறபி நாட்டுப் பெண்கள் எம்மை விட அதிகமாக இஸ்லாத்தைத் தெரிந்தவர்களாக இருக்கலாம். அதனுல் அவர்கள் அல்லாஹ்வின் நல்லடியார்களாகவோ உண்மை முஸ்லிம்களாகவோ இருக்க முடியுமா? அப்படியாயின் இஸ்லாத்தைப் பற்றியும் முஸ்லிம்களேப் பற்றியும் நிறைய அறிந்து ஆராய்ந்து நூல்களேயும் எழுதிவைத்துள்ள ஐரோப்பியர்களான ஹிற்றி, ப்ருெக்லமான் போன்றவர்களேயும் சிறந்த முஸ்லிம்கள் என்று கணிக்கவேண்டிவரும். இவர்களேயோ அவர்களேயோ பார்த்து ஏமாருதீர்கள். முஸ்லிமைக் கண்டுகொள்வதற்கு ஒரேவழி அவனுடைய இஸ்லாமிய வாழ்க்கைதான்.

இஸ்லாமிய வாழ்க்கையை அறிந்து கொள்வதும் இன்று கஷ்டம் தான். இன்றைய முஸ்லிம்களேப் பார்த்துக் கற்றுக்கொள்ளவும் முடியவில்லே. முஸ்லிம் என்னும் பெயருக்குள் எத்தனே வகையான கோளாறு தென்படுகிறது! அடிப்படை இஸ்லாத்துக்கு முரணுன எத்தனேயோ கிருத்தியங்கள் இன்றைய இஸ்லாமியனின் வாழ்வில் ஊடுருவி வேர்விட்டு நிற்கின்றன. அவற்றையெல்லாம் உண்மை இஸ்லாம் என்று இவன் ஈமான் கொண்டும் காணப்படுகிறுன். 'இதுவல்ல தம்பி இஸ்லாம்' என்றுல், இவனுக்கு கோபம் பொத்துக்கொண்டு

வருகிறது. இப்படிச் சொன்னவரை எதிர்த்து 'ஜிஹாத்' செய்யவும் துணிந்துவிடுகிறான். ஆகை யால் அன்புள்ள சோதரர்களே, இன்று நூற்றுக்கு நூறு இஸ்லாத்தை அறிய வேண்டுமானால் முஸ் லிம்கள் எனப்படுவோரின் வேலைகளைப் பார்க்காதீர் கள். அங்கே கலப்படம். ஆகையால் இந்த வாழ்க்கை நெறியின் ஊற்றுக்கண்ணான அல்குர்ஆனையும் அதன் செயல்முறை விளக்கமான ஸுன்னாவையும் இவற் றின் அடியொட்டி வாழ்ந்த மேதைகளின் அரிய நூல்களையுமே பாருங்கள்.

يَٰنِسَآءَ ٱلنَّبِيِّ لَسْتُنَّ كَأَحَدٍ مِّنَ ٱلنِّسَآءِ ۚ إِنِ ٱتَّقَيْتُنَّ فَلَا تَخْضَعْنَ بِٱلْقَوْلِ فَيَطْمَعَ
ٱلَّذِى فِى قَلْبِهِۦ مَرَضٌ وَقُلْنَ قَوْلًا مَّعْرُوفًا ﴿٣٢﴾ وَقَرْنَ فِى بُيُوتِكُنَّ وَلَا تَبَرَّجْنَ تَبَرُّجَ
ٱلْجَٰهِلِيَّةِ ٱلْأُولَىٰ ۖ وَأَقِمْنَ ٱلصَّلَوٰةَ وَءَاتِينَ ٱلزَّكَوٰةَ وَأَطِعْنَ ٱللَّهَ وَرَسُولَهُۥٓ ۚ إِنَّمَا
يُرِيدُ ٱللَّهُ لِيُذْهِبَ عَنكُمُ ٱلرِّجْسَ أَهْلَ ٱلْبَيْتِ وَيُطَهِّرَكُمْ تَطْهِيرًا ﴿٣٣﴾

''நபியுடைய மனைவியரே, நீங்கள் சாதாரண பெண் ணைப்போலல்ல. நீங்கள் இறையச்சமுள்ளவர்களா யின் பிறருடன் பேசும்போது நளினம் காட்டாதீர் கள். அப்படிக்காட்டினால் நோய் பீடித்த மனமுடை யவன் தவறான விருப்பங்களைக் கொள்ளக்கூடும். எனவே எதையும் பளிச்சென்று நேர்மையாகச் சொல்லுங்கள். நீங்கள் உங்கள் வீடுகளிலே இருங் கள். முன்னைய அறியாமைக்காலத்தில் போன்று, வெளியே திரியாதீர்கள். தொழுகையை நிலை நிறுத் துங்கள். ஸக்காத்வரியைக் கொடுத்து விடுங்கள். அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் கட்டுப் படுங்கள். நபியின் வீட்டாரே, உங்களைவிட்டு அசுத் தங்களைப் போக்கவும். உங்களை முற்றிலும் பரிசுத் தமாக்கவுமே அல்லாஹ் விரும்புகிறான்'' (33:32:33)

மேலே கூறப்பட்ட போதனைகள் பெண்களுக்கு இஸ்லாம் கொடுத்துள்ள பண்புமிக்க ஒழுக்கக்கோவையில் மிக முக்கியமானவை. இவ்வொழுக்கங்களைப் பேணியவாறு ஒரு முஸ்லிம் பெண் தன் கடமைகளைச் செய்யத் தடையெதுவும் இல்லை. இவ்வொழுக்கத்தில் எந்தப் பெண்ணுக்கும் விதிவிலக்கு கொடுக்கப்படவும் இல்லை. இவ்வொழுக்கத்தை இன்றைய உலகம் பின்பற்றுமானால் உலகில் இன்று காணப்படும் ஒழுக்கக்கேடுகள் முற்றாக ஒழிந்து விடும்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் மனைவியரை நாம் மிகமேலான பெண்கள் என்று ஏற்றிருக்கிறோம். அல்லாஹ்வும் அப்படித்தான் கூறியுள்ளான். ஆனால், அவர்களின் புகழ்பாடவும் ஏற்றிப் போற்றவும், அவர்களை நமக்கு மறுமையில் தலைமை தாங்குமாறு அழைக்கவும் மிக்க ஆர்வமாய்க் களரிகளை நடத்துகிறோம். ஆனால், அந்த மேன்மக்களுக்கு அல்லாஹ் கற்றுக்கொடுத்துள்ள ஒழுக்கத்தைத்தான் நாம் கூட்டாமல் குறைக்காமல் மேலே குறிப்பிட்டோம். நமக்கு அவற்றைப் பின்பற்றியொழுகிப் பயனடைய மனம் வரவில்லை; நாகரீக மோகம் நம்மை ஆட்டிப்படைக்கிறது என்றால், நாம் நயவஞ்சகர்கள் என்று கூறுவதில் என்ன தவறிருக்க முடியும். 'முஸ்லிம் பெண்ணாக ஏன் பிறந்தேன்!' என்று அங்கலாய்க்கும் சகோதரிகள் உடனே பகிரங்கமாக இஸ்லாமியக் கொள்கை கோட்பாடுகளைவிட்டு வெளியேறட்டும்.

لَا يَضُرُّكُم مَّن ضَلَّ إِذَا اهْتَدَيْتُمْ

''நீங்கள் நேர்வழியில் நடந்தால் வழிகெட்டவர்கள் உங்களுக்குத் தீங்கிழைக்க முடியாது''

மெய்தான், முஸ்லிம்கள் என்ற போர்வையில் நீங்கள் செய்யும் இந்தவேலே இஸ்லாத்தின் தூய போதனைகளே அறியவிரும்பும் பிறசமூகத்தவருக்கும் குழப்பத்தை உண்டுபண்ணிவிடுகிறது. நீங்கள் போடும் இந்தக்கோலங்களெல்லாம் இஸ்லாம்தான் என்று சிலர் தப்பாகப் புரிந்து கொள்கின்றனர். ஆகையால் உங்கள் போன்ருேரின் இந்தப் பகிரங்க வெளிநடப்பு, நீங்கள் இஸ்லாத்துக்குச் செய்யும் சேவையாகக் கருதப்படும்.

இஸ்லாமியக் கொள்கை கோட்பாடுகளில் நம் பிக்கையின்றி வாழும் இத்தகைய போலிகள் தங் களுக்கு தைரியமிருந்தால் இதைவிட நல்லதொரு கொள்கையைத் தேடிக்கொண்டு வெளியேறட்டும். மெய்தான் முஸ்லிம் என்ற பெயரால் பெற்ற உத்தி யோகங்களேயும், பட்டம் பதவிகளேயும், பதவி உயர் வுகளேயும் விட்டு வெளியேற வேண்டும். ஏனெனில் உங்களுக்குத் தகைமைகள் இருந்தாலும் இல்லா விட்டாலும் முஸ்லிம் சமூகத்துக்குரிய பங்கைத் தான் நீங்கள் பெற்றுள்ளீர்கள்.

ஆனல், நிச்சயமாக நீங்கள் இதைச் செய்ய மாட்டீர்கள் என்பதும் எமக்குத் தெரியும். உங்கள் ஈமான் அவ்வளவு உறுதியானது என்பதனல் அல்ல. அது உறுதியில்லே என்பதற்கு உங்கள் நடை உடை பாவனைகளும் உங்கள் பேச்சுக்களும் போதிய சான் றுகள், இந்த இரண்டும் கெட்டான் நிலேயிலே தான் உலகை ஏமாற்றவும், உலகை அழகாக அனு

பவிக்கவும் உங்களுக்கு வாய்ப்புக்கள் அதிகம் உண்டு.

ஆகவே, எம்போன்ற ஏழைகள் உங்களை எச்சரிப்பதில் அர்த்தமுமில்லை. இப்படி எத்தனை பேரைக்கண்டவர்கள் நீங்கள்! எனவே சர்வ மரியாதைகளோடு அல்லாஹ்வின் எச்சரிக்கையை உங்கள் முன் வைக்கிறோம்:

وَٱللَّهُ خَيۡرُ ٱلۡمَٰكِرِينَ

''அல்லாஹ் சதி செய்பவர்களை மிகைப்பவன்''

''எனவே அல்லாஹ்வின் கட்டளை வரும்வரை காத்திருங்கள்.''

فَتَرَبَّصُواْ حَتَّىٰ يَأۡتِيَ ٱللَّهُ بِأَمۡرِهِۦ

## ஆனல்

எவ்வளவு சமத்துவ வாதம் செய்தாலும் ஆண் ஆண்தான்; பெண் பெண்தான். இருபாலாரின் இயற்கை அமைப்பையும் எவராலும் மாற்றியமைக்க முடியாதல்லவா. அப்படியானல் இவ்விரு பாலாரின் இயற்கை இயல்புகளுக்குப் பொருந்தும் வகையிலான உரிமைகளும் கடமைகளும் இருப்பது தானே நியாயம். இந்த உண்மையின் அடிப்படையிலே சில ஏற்றத்தாழ்வுகளை இஸ்லாமிய வாழ்க்கை முறையில் நாம் காண்கிறோம். இவற்றைச் சரியாகப் புரிந்துகொள்ள முடியாத சிலர், இஸ்லாம் சரியான சமத்துவம் வழங்கவில்லை என்று கூறுகின்றனர், பலர் நினைக்கின்றனர். ஆகையால் இது

பற்றி சற்று விரிவாக விளக்குவது பொருந்தும் என்று நினைக்கிறோம்.

பெண்களின் நலன் கருதியும் குடும்பத்தின் சுபீட்சம், சமூக நலன் என்பன கவனித்தும் பெண்ணின் உடல்நிலைக்கேற்ப சில மேலதிக உரிமைகளை பெண்களுக்குக் கொடுக்கிறது இஸ்லாம். இவை பெண்களுக்கு உரிமை எனும்போது ஆண்களின் கடமையாகின்றது.

ஒரு பெண்ணுக்குத் தேவையான உணவு, உடை, வசிப்பிடம், கல்வி போன்றவற்றை அவளுக்குக் கொடுக்கும் பொறுப்பு அவளுடைய தந்தையைச் சாரும். அல்லது மகனைச் சாரும், விவாக பந்தத்தில் வாழ்பவளாயின் அவளுடைய கணவனைச் சாரும். இத்தகைய எவரும் இல்லாத நிலையில், இப்பொறுப்பு பைத்துல்மால் எனும் பொது நிதியைச் சாரும்.

இவளின் பிள்ளைகளின் பராமரிப்புச் செலவை விவாக பந்தத்தில் வாழும்போதும் பிரிவினை ஏற்பட்ட பின்பும் அப்பிள்ளைகளின் தகப்பனே கொடுக்க வேண்டும். விவாகரத்துச் செய்யப்பட்டால், இவள் 'இத்தா' இருக்கும் காலத்திலும் மேலே கூறப்பட்ட தேவைகளைக் கணவனே செலுத்தவேண்டும். பெண்ணுக்கு இவ்வளவு சௌகரியமானதோர் திட்டத்தை வேறு எந்தச் சட்டத்திலும் திட்டத்திலும் காண முடியவில்லை. குடும்பப் பொருளாதாரப் பொறுப்பு எச்சந்தர்ப்பத்திலும் பெண்ணின் தலையிற் சுமத்தப்படவில்லை என்பது இங்கு கவனித்தற்பாலது.

இவற்றைக் கவனிக்கும் போதுதான், இஸ்லாமிய வாழ்க்கை முறையில் ஆண்மீது சுமத்தப்பட்டுள்ள பொறுப்பு தெளிவாகிறது. இப்பொறுப்புக்களைக் காரணமாகக் காட்டிப் பெண்ணுக்குச் சொந்தமான எதையும் ஆண் பிடுங்கிவிடவும் முடியாது.

இந்த அடிப்படையிலேதான் சொத்துரிமைகளில் சில சந்தர்ப்பங்களில் பெண்ணைவிட ஆணுக்கு சற்று கூடுதலான அளவு கொடுக்குமாறு இஸ்லாமிய சட்டம் கூறுகிறது. உதாரணமாக: பிள்ளைகளுக்கிடையே அநந்தரச் சொத்து பங்கிடப்படும் போது ஆண்களுக்கு இருமடங்காகக் கொடுக்கப்படுகின்றது. மக்களை உடைய கணவனை இழந்த மனைவிக்குத் தன் கணவனின் சொத்துக்களில் எட்டிலொன்றும் அவருக்கு மக்கள் இல்லாத கட்டத்தில் நான்கிலொன்றும் கொடுக்கப்படுகின்றது. ஆனால் மக்களுள்ள, மனைவியை இழந்த கணவனுக்கு நான்கிலொன்றும் அவளுக்குப் பிள்ளைகள் இல்லாத கட்டத்தில் இரண்டிலொன்றும் கொடுக்கப்படுகின்றது. பிள்ளையின் சொத்திலிருந்து தாய் பெறும் பங்கைவிட தந்தை பெறும் பங்கு சற்று அதிகமாகவே இருக்கும். ஆனால் பெண்மக்கள் மாத்திரம் உரித்தாளிகளாகும் கட்டத்தில் இவர்களுக்கு கட்டாயப்பங்கு கொடுக்கப்பட வேண்டும் என்பதை நாம் முன்பு ஒரு கட்டத்தில் விளக்கினோம்.

பொருளியல் விவகாரங்களில் ஆணுக்குரிய பொறுப்புக்கள் பன்மடங்கு அதிகம் என்பதை நாம் உணர்கிறோம். அவ்வாறே குடும்பப் பொறுப்புக்களும் அவனிடமே சாட்டப்படுகின்றன. மனைவி

மக்களுக்கான செலவினங்களையெல்லாம் பொறுப் பேற்கும் கணவனிடம் அக்குடும்பத் தலைமைப் பொறுப்பை ஒப்படைக்கும் போது, எந்தப் பெண் ணும் இது அநியாயம் என்று கூறமுடியுமா?

இயற்கையாகவே பெண்கள், மனோ உறுதியி லும் உணர்ச்சிவசப் படுவதிலும் ஆண்களை விடக் குறைந்தவர்கள் என்பதையும் சிறுசிறு பிரச்சினை கள் தோன்றும் போதும் பெண்கள் நிலைகுலைந்து விடுகின்றனர் தடுமாற்றமடைகின்றனர் என்பதை நிதானமாகச் சிந்திக்கும் பெண்களும் ஏற்றுக்கொள் வார்கள். ஓரிரு பெண்கள் இதற்கு விதிவிலக்காக இருக்கலாம். மல்யுத்தத்தில் ஆண்களை மண்கவ்வச் செய்த ஒரு பெண்ணை அல்லது ஒருசில நிகழ்ச்சி களில் உலகசாதனையை நிலைநாட்டிய ஒரு வீராங் கனையை முன்வைத்து, அல்லது தன்பிள்ளைகளையும் வீட்டு வேலைகளையும் பார்க்க தனக்குப் பதிலாகப் பல பெண்களைக் கூலிக்கமர்த்தி வைத்து மேடைக்கு வந்து சமத்துவ வீரம்பேசும் ஓரிரு பெண்களை முன்வைத்து, சமூகப் பெண்களின் பிரச்சினையை ஆராய முடியாதல்லவா! அப்படியே பெட்டிப் பாம்பாய்ப் பெண்ணிடம் விற்கப்பட்ட ஒருசில ஆண்களின் ஏமாளித்தனத்தை முன்வைத்து இப் பிரச்சினையைத் தீர்க்கவும் முடியாது.

முன்னைய சகாப்தங்களை விட இன்று தாய் மையின் அவசியம் வலியுறுத்தப்படுகின்றது. புட் டிப்பால் கொடுப்பது நாகரீகம் என்று கருதிய நாகரீகக் குஞ்சுகளே இன்று தாய்ப்பாலின் மகி மையை உணர்த்தவும் குழந்தைகளுக்குத் தாய்ப் பாலையே ஊட்டுங்கள் என்று உபதேசிக்கவும் முன்

வந்துள்ளார்கள். குழந்தைக்குப் பாலூட்டவும் அன்புகாட்டவும் அரவணைத்து வளர்க்கவும் பொருத்தமான உடலமைப்பும் மென்மையான அமைப்பும் இளகிய மனமும் பெண்ணிடமே அமைந்துள்ளன. நாகரீகத்தின் பெயரைச் சொல்லிக் கொண்டு வீட்டுக்கு வெளியே ஆண்களைப் போன்று கடமையாற்றும் பெண்மணியும் தன் அருமைக் குழந்தையைப் பாலூட்டித் தாலாட்டி அன்புகாட்டி வளர்க்க மற்ெருரு பெண்ணைத்தான் வேலைக்கு அமர்த்தியுள்ளார். ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் பெற்றவள் கட்டாக்காலியாகத் திரிந்தாலும் அந்தப் பிஞ்சுகளைப் பேணி வளர்ப்பவள் மற்ெருரு பெண்தான்; ஆணல்ல.

இவற்றையெல்லாம் உணர்ந்த இறைவன்தான் மனிதனின் இயல்புகளுக்கேற்ற குடும்ப அமைப்பு முறையை மனிதனுக்குச் சொல்லிக் கொடுக்கிருன். அது அன்றும் இன்றும் என்றும் பொருத்தமாக அமைந்துள்ளதில் வியப்பொன்றுமில்லை.

இத்தகைய அமைப்பிலேதான் கணவன் குடும்பத்தலைவனுகின்ருன். இத்தகைய தலைவன், தன் குடும்பத்தை நினைத்தபடியெல்லாம் நடத்தலாம் என்று நினைக்க வேண்டாம். பெண்ணின் கௌரவம் பேணுவதும் அவளுக்கு சேரவேண்டிய சகல உரிமைகளையும் கொடுப்பதும் குடும்பத் தலைவனின் கடமை. பெண்ணின் இத்தகைய உரிமைகள் முறையாகக் கிடைக்காத போது, இதுபற்றி நீதிமன்றத்தில் முறையிட்டு நியாயம் பெறவும். இதுவும் பயன்தராவிடத்து கணவனிடமிருந்து விவாக விடுதலை பெற்றுக் கொள்ளவும் மனைவிக்கு இடமுண்டு.

இத்தகைய அமைப்பு முறையும் இஸ்லாத்தில் மாத்திரமே நாம் காண்கிறோம். இவ்வமைப்பு முறை பெண்களின் நலன்களைப் பேணும் பாங்கும் தெளிவாகிறது.

குடும்பத்தலைவனான கணவன், தன் மனைவி மக்களைப் பொறுத்தவரை பின்வரும் மூன்று அம்சங்களைப் பேணவேண்டும்:-

(1) அவர்களுக்கு, அவர்களின் அந்தஸ்த்துக்குத் தக்க உணவு, உடை, உறைவிடம் கொடுக்க வேண்டும்.

(2) தாம்பத்திய வாழ்க்கையில் எப்போதும் நேர்மை புரளாமலும் கடின மனமின்றியும் மனிதாபிமானத்தோடும் நடந்து கொள்ள வேண்டும்.

(3) மனைவியிடமோ மக்களிடமோ குற்றம் தென்பட்டால், அவர்களைப் புத்திசாலித்தனமாகவும் மெதுவாகவும் திருத்தவேண்டும்.

இத்தகைய அருங்குணங்கள் குடும்பத்தலைவனிடமிருக்கும் போது அவன் குடும்பத்தின் நல்லபிமானத்தைப் பெறுவது திண்ணம். இத்தகைய ஒரு தலைவனின் கீழ் மனைவியாக வாழ்ந்து மகிழ ஒரு பெண் விரும்பவில்லையென்றால், அவளுக்கு வேறு ஏதாவது கோளாறு இருக்கவேண்டும்.

இத்தகைய அருந்தலைவனைத்தான் எம்தலைவர் முஹம்மத் (ஸல்) அவர்கள் பின்வருமாறு கூறினார்கள்.

خَيْرُكُمْ خَيْرُكُمْ لِأَهْلِهِ

''தன் குடும்பத்துக்கு நல்லவனாக இருப்பவனே உங்களில் நல்லவர்'' ஆம் தன் வீட்டிலோ உலோபியாக, கடுகடுப்போடு, 'விடியா மூஞ்சியாக' நடந்து கொள்பவர் ஊருக்குப் புன்முறுவல் பூத்து தாராள மனம் காட்டுவது போலிவேஷம்தான். 'உழுகிற மாடானால் உள்ளூரில் விலைப்போகாதா' என்ன!

நாம் குறிப்பிட்ட கருத்துக்களையெல்லாம் நன்கு சிந்தனை செய்த பின்பு பின்வரும் அல்குர்ஆன் வசனங்களைக் கவனித்துப் பாருங்கள்:-

ٱلرِّجَالُ قَوَّٰمُونَ عَلَى ٱلنِّسَآءِ بِمَا فَضَّلَ ٱللَّهُ بَعْضَهُمْ عَلَىٰ بَعْضٍ وَبِمَآ أَنفَقُوا۟ مِنْ أَمْوَٰلِهِمْ

''பெண்களின் நிர்வாகிகளாக ஆண்களே இருக்கின்றனர். ஏனெனில் அவர்களில் ஒருவரை விட மற்றவரை அல்லாஹ் மேன்மைப் படுத்தியதாலும், ஆண்கள் தங்கள் பொருட்களிலிருந்து செலவிடுவதனாலும்'' *(4:33)*

وَلَهُنَّ مِثْلُ ٱلَّذِى عَلَيْهِنَّ بِٱلْمَعْرُوفِ وَلِلرِّجَالِ عَلَيْهِنَّ دَرَجَةٌ وَٱللَّهُ عَزِيزٌ حَكِيمٌ

''அப்பெண்களுக்கு கடமைகள் இருப்பதுபோன்றே உரிமைகளும் உண்டு. ஆண்களுக்கு பெண்கள்மீது உயர் பதவியும் உண்டு. அல்லாஹ் வல்லோனும் நுண்ணறிவுடையோனுமாக இருக்கின்றான்'' *(2:228)*

பொறுப்பும் கடமையும் உணர்ந்து செயலாற்றத் தக்க ஒரு கணவனைத் தெரிவு செய்யப்பெண்

ணுக்கு அனுமதியுண்டு. இவ்விஷயத்தில் அனுபவக் குறைவினால் சிறுபிள்ளைத்தனமாக நடந்து வாழ்க்கைப் பாதையில் ஏமாந்து கவலைதோய்ந்த வாழ்வைத் தேடிக்கொள்ளாமல் பெண்பிள்ளையைப் பாதுகாக்கவே பெற்றோரும் பராமரிப்பாளரும் கவனம் செலுத்த வேண்டும். அன்றி அவளின் நலன்களைக் கவனியாமல், சுயநலன் கருதி அப்பெண்ணை கல்யாணச் சந்தையில் விற்று - விடுவதற்கல்ல. ஒரு தந்தையைப் பொறுத்தவரை இத்தகைய துரதிஷ்ட நிலை ஏற்வடுவது அதிலும் தன் கன்னிப் பெண்ணை மனச்சாட்சிக்கு விரோதமாகக் கட்டிக்கொடுக்கும் நிலை ஏற்படுவது மிகமிக அரிது. ஆகையினாற்றான் ஒரு கன்னிப் பெண்ணை அவளுக்குப் பொருத்தமான ஓர் ஆணுக்கு விவாகம் செய்து கொடுக்கும் அதிகாரம் அவளின் தகப்பனுக்கு வழங்கப்படுகிறது. தந்தையைத் தவிர மற்றெந்தப் பொறுப்பாளருக்கும் இவ்வளவு உறுதியான அதிகாரம் கொடுக்கப் படவில்லை. மற்றெந்தக் கட்டத்திலும் மணப்பெண்ணின் விருப்பமின்றி அவளுக்கு ஓர் ஆணைக் கட்டி வைக்கும் அதிகாரம் எவர்க்கும் இல்லை. தனக்குப் பொருத்தமற்ற ஒருவரைத் தனக்கு கணவராக விவாகம் செய்து வைக்க முனைவோரை எதிர்த்து இஸ்லாமிய நீதிமன்றத்தில் முறையிட்டு நியாயம் பெற்றுக்கொள்ள ஒரு பெண்ணுக்கு உரிமையுண்டு.

ஒரு நாள், அன்னை ஆய்ஷா (றளி) அவர்களிடம் வந்த ஒரு பெண், தன் தந்தை தனக்கு அந்தஸ்த்துப் பெற்றுத் தருவதற்காக தான் விரும்பாத ஒருவருக்குத் தன்னை மணம் செய்து வைத்தார்கள் என்று புகார் செய்தாள். இதை அல்லாஹ்வின் தூதரிடம் முறையிடுங்கள் என்று அன்னை

ஆய்ஷா (றளி) அவர்கள் ஆலோசனை கூறினார்கள். அல்லாஹ்வின் தூதரிடம் அப்பெண் முறையிட்ட போது, 'கன்னியிழந்த பெண்ணுக்கு அவளே அதிகாரி' என்று பதில் கூறினார்கள். இதைக் கேட்ட அப்பெண், ''அல்லாஹ்வின் தூதரே, என்னைப் பெற்று வளர்த்த என் அருமைத் தந்தை எனக்குத் தேடித்தந்த கணவரை மனமுவந்து ஏற்றுக்கொண்டேன். ஆனால், இவ்விஷயத்தில் பெண்களுக்குரிய உரிமையைத் தங்கள் வாயால் ஏனைய பெண்களுக்கும் உணர்த்துவதற்காகவே இவ்வாறு தங்களிடம் முறையிட்டேன்'' எனக் கூறினாள்.

கல்யாணம் என்பது கணவனுடனும் மனைவியுடனும் மாத்திரம் சுருங்கிய ஒரு தொடர்பல்ல என்பதை அனேகர் உணர்வதில்லை. ஒரு கல்யாணத்தின் மூலம் பல தனிநபர்களும் பலகுடும்பங்களும் சம்பந்தப்படுகின்றன. ஆகையால் இக்குடும்பங்களின் நலனையும் கௌரவத்தையும் பேணவேண்டும். நாம் இங்கே இஸ்லாத்துக்கு மாறான வரட்டு கௌரவங்களைக் கருத்திற் கொள்ளவில்லை.

ஓர் ஆணும் ஒரு பெண்ணும் தாம் விவாகம் செய்து கொள்ள எத்தகைய அவமானத்தையும் ஏற்க முனையலாம். ஆனால் இவர்களின் பொறுப்பற்ற இக்கல்யாணத்தால் புவர்களின் குடும்பங்களும் உறவினரும் அவமானப்பட முடியாது. இவர்களின் சமூகங்களுக்கிடையே போரும் வேற்றுமையும் பூசலும் ஏற்பட இடமளிக்கலாகாது. இத்தகைய சமூக நன்மைகளை அடிப்படையாகக் கொண்டே பெண்ணுக்கேற்ற கணவனைத் தேடும் விஷயத்தில் தந்தைக்கு சற்று கூடுதல் அதிகாரமும்

பெண்ணின் ஏனைய பொறுப்பாளருக்கு மட்டுப்படுத் தப்பட்ட அதிகாரமும் வழங்கப்பட்டுள்ளது. இதி லும் நேர்மை தவறுவோரைக் கண்டிக்க இஸ்லா மிய நீதிமன்றத்துக்கு அதிகாரம் உண்டு.

இத்தகைய அருமையான அடிப்படைகளைப் புரிந்துகொள்ளப் பக்குவமடையாத இளங்கன்றுகள், இந்தக் கட்டுப்பாடுகளைத் தம் கட்டுக்கடங்கா போக்குக்குத் தடைகளென்று கருதிக் கண்டனக் குரலெழுப்புகின்றனர். ஏன் இவற்றை மீறியும் செல்கின்றனர். தம்மைப் பெற்று வளர்த்தவர் களின் உள்ளங்களை சுக்குநூறுக்கி, தாம் விரும்பிய வரை மணந்து மகிழ்கின்றனர். இவர்களின் வரம்பு மீறிய இச்செயல்கள் எத்தனை பெற்றோருக்கு நீங்கா நோய்களைக் கொடுக்கின்றன. எத்தனை பெற்றோ ரின் இதயங்கள் வெடித்துச் சிதறின. எத்தனை குடும்பங்கள் தம் கௌரவத்தையும் நன்மதிப்பை யும் இழந்தன?

இதில் விநோதம் என்னவென்றால், தம் வாலிப காலத்தில் பெற்றோரையோ சமூகக் கட்டுப்பாடு களையோ ஏறிட்டுப்பாராமல் தம் மனம்போன போக்கில் எல்லாக் கட்டுப்பாடுகளையும் உதறித் தள்ளி ஒருத்தியும் ஒருவனும் துணிந்து இணைந்த ஆசாமிகள், 30 வருடங்களுக்குப் பிறகு கண்ணீர் வடிக்கின்றனர். ஏன்; என்ன நடந்துவிட்டது? என்று கேட்டோம். ‘‘என்ன அநியாயம்! இவ் வளவுகாலம் அழகாக வளர்த்து கல்வியூட்டி மனித னுக்கிவிட்ட பிறகு தாயென்று நானிருக்க தகப்ப னிருக்க அவனுடைய விருப்பப்படி ஒருத்தியைக் கட்டிக்கொண்டான். இவன் என்பிள்ளையல்ல

மூதேவி தொலைந்துதான் போவான்! என ஒப்பாரி வைக்க ஆரம்பித்து விட்டார்கள் கணவனும் மனைவியும்.

இவர்களுக்கு நாம் சொல்வது இதுதான்: அன்று உங்கள் வாலிபகாலத்தில் நீங்கள் செய்த கெட்டித்தனத்தைத் தான் உங்கள் பிள்ளை இப்பொழுது செய்திருக்கிறது. வேலிபாய்ந்த உங்கள் கன்று மதில் பாய்ந்திருகிறது. உங்கள் பிள்ளைக்காக நீங்கள் அழுவதைவிட உங்கள் பெற்றோரின் மனங்களைப் புண்ணாக்கிய பாபத்துக்காக அழுவதும், அவர்கள் உயிரோடிருந்தால் அவர்களிடம் மன்னிப்பைப் பெற்றுக் கொள்வதும் உங்களுக்கு மிக்க ஆரோக்கியமாக இருக்கும். உங்கள் இந்தப் பிள்ளையும் இன்னும் பல வருடங்கள் கழிந்து வாலிப முறுக்கு இறங்கிய பிறகு அழக்கூடும் உங்களைத் தேடி வரக்கூடும் அப்பொழுது நீங்கள் உயிர் வாழ்வீர்கள் என்பது உறுதியில்லை. ஆகையால் அந்தப் பிள்ளைமீது உண்மையான இரக்கம் இருந்தால் இப்பொழுதே அவனை மன்னித்து விடுங்கள். ஏனெனில் ஓர் அடியான் மற்றொரு அடியானுக்குச் செய்த குற்றத்தை அவ்வடியான் மன்னிக்கும்வரை அல்லாஹ் மன்னிப்பதில்லை! உங்கள் பெற்றோரிடம் நீங்கள் கேட்கும் மன்னிப்பை நீங்கள் பகிரங்கமாகச் செய்தால், அது வளருந்தலை முறைக்கும் ஒரு நல்ல பாடமாக அமையலாம்.

தாய் தந்தையரை நோவினை செய்வோருக்கு அவ்வாறு செய்யும் பிள்ளைகள் நிச்சயமாக இருப்பார்கள் என்பது அல்லாஹ்வின் தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களின் எச்சரிக்கை.

* وَقَضَىٰ رَبُّكَ أَلَّا تَعْبُدُوٓا۟ إِلَّآ إِيَّاهُ وَبِٱلْوَٰلِدَيْنِ إِحْسَـٰنًا ۚ إِمَّا يَبْلُغَنَّ
عِندَكَ ٱلْكِبَرَ أَحَدُهُمَآ أَوْ كِلَاهُمَا فَلَا تَقُل لَّهُمَآ أُفٍّ وَلَا تَنْهَرْهُمَا
وَقُل لَّهُمَا قَوْلًا كَرِيمًا ﴿٢٣﴾ وَٱخْفِضْ لَهُمَا جَنَاحَ ٱلذُّلِّ مِنَ ٱلرَّحْمَةِ
وَقُل رَّبِّ ٱرْحَمْهُمَا كَمَا رَبَّيَانِى صَغِيرًا

''நபியே, உமது இறைவன் அவனைத்தவிர மற்றெவரையும் வணங்கக் கூடாது என்றும் தாய் தந்தையர்க்கு நன்மை செய்யும்படியும் கட்டளையிட்டுள்ளான். அவர்களில் ஒருவரோ இருவருமோ முதுமையை அடைந்து விட்டாலும் அவர்களை வெருட்டாதீர்; அவர்களுக்கு சீ யென்று சொல்லி விடாதீர். மிக்க தாராளமான சங்கையான வார்த்தைகளையே அவர்களுக்குச் சொல்வீராக. இரக்கத்தின் காரணமாக அவர்களுக்குத் தாழ்மையெனும் இறக்கையைத் தாழ்த்திக் கொடுப்பீராக. இறைவா, இவர்கள் என்னைச் சிறுவயதிற் போஷித்து வளர்த்தது போன்று இவர்களுக்கு நீ அருள்புரிவாயாக என்று பிரார்த்தனையும் புரிவீராக.''
(17:24,25)

விபசாரம் போன்ற கடும் தண்டனைக்குரிய குற்றச் செயல்களில் பெண்கள் சாட்சி மாத்திரம் நிறுத்தப்படுவதை இஸ்லாம் ஊக்குவிக்கவில்லை. ஆனால் பெண்களேயன்றி மற்றெவரும் தெரிந்து கொள்ள முடியாத விஷயங்களில் பெண்கள் மாத்திரம் சாட்சி சொல்லலாம். ஏனைய சந்தர்ப்பங்களில் ஆண்களுடன் சேர்ந்து சாட்சி சொல்லலாம். இத்தகைய சந்தர்ப்பங்களில் இரு பெண்கள் ஓர் ஆணுக்கு நிகராகக் கணிக்கப்படுவர்.

இத்தகைய வித்தியாசத்துக்கும் பெண்ணின் இயற்கை அமைப்பே காரணம். எளிதில் உணர்ச்சி வசப்படுதல், அதனால் நிதானமாகச் சிந்தனை செய்யும் தன்மை தாக்கப்படல், இதனால் யதார்த்த நிலையை உணர முடியாமை போன்ற பலவீனங்களிலிருந்து நீதி பரிபாலனம் பாதுகாக்கப்படவேண்டுமென்பதே இத்தகைய வித்தியாசங்களின் நோக்கம். அன்றி பெண்களை இழிவுபடுத்துவதல்ல. தவிர்க்க முடியாத சந்தர்ப்பத்தில் ஓர் ஆணுக்குப்பதில் இரு பெண்கள் சாட்சி சொல்லலாம்.

''உங்களின் இரு ஆண்கள் சாட்சி சொல்லட்டும். இரு ஆண்கள் இல்லாதிருக்கும்போது ஓர் ஆணும் இரு பெண்களும் சாட்சி சொல்லட்டும்; ஒரு பெண் தவறிவிட்டால், மற்றப்பெண் நினைவுறுத்தித் திருத்தக் கூடும்'' (2:282)

கணவன் தன் மனைவியை விவாக விடுதலை செய்துவிடுவதைத் 'தலாக்' என்கின்றது இஸ்லாம். இதைக் கூறும் போது, சிலர் நெற்றியைச் சுருக்கிப் பார்க்கின்றனர். இஸ்லாம் கூறும் வாழ்க்கை முறையை முற்றாக உணர்ந்து கொண்டால் இப்படிப் பார்க்க வேண்டிய நிலையேற்படாது என்ற உண்மையை நாம் இதுவரை கூறிவந்த விஷயங்களை நடுநிலை நின்று புரிந்துகொண்டவர்கள் ஓரளவு ஏற்றுக்கொள்வார்கள் என்று நினைக்கிறோம். மேலும் சில உண்மைகளைக் கூறுகின்றோம் கவனியுங்கள்.

'தலாக்', கணவனால் செய்யப்படுவது. குல்உ, மனைவியால் செய்யப்படுவது. இருவருக்குமிடையில் பிணக்கேற்பட்டு சமரசம் செய்ய வாய்ப்பில்

லாத கட்டத்தில் இருவரையும் பிரித்துவிடும் முறையும் உண்டு. இதற்கு பஸ்கு எனப்படுகிறது. இதுவும் அனேகமாக பெண்ணின் உரிமையாகவே அமையும்.

தலாக் சொல்லும் உரிமை கணவனுக்குக் கொடுக்கப்பட்டுள்ள போதிலும் மிகமிக அரிதாகவே ஒரு முஸ்லிம் தன் மனைவியை தலாக் சொல்கிறான். ஏனெனில் இவனுக்கு இந்த உரிமையைக் கொடுத்த இறைவன் பல்வேறு ஒழுக்கங்களையும் புத்திமதிகளையும் கூறியிருக்கிறான். எனவே இவன், ஒரு உணர்ச்சியற்ற மரக்கட்டைபோல் நடந்து கொள்ள முடியாது.

وَعَاشِرُوهُنَّ بِالْمَعْرُوفِ فَإِن كَرِهْتُمُوهُنَّ فَعَسَىٰ أَن تَكْرَهُوا شَيْئًا وَيَجْعَلَ اللَّهُ فِيهِ خَيْرًا كَثِيرًا

''மனைவிகளோடு நல்லமுறையில் நடந்துகொள்க. நீங்கள் அவர்களை வெறுத்த போதிலும் சரியே; ஏனெனில் நீங்கள் வெறுக்கும் ஒன்றில் அல்லாஹ் அநேக நன்மைகளை வைத்திருக்கக் கூடும்'' *(4:19)*

وَاللَّاتِي تَخَافُونَ نُشُوزَهُنَّ فَعِظُوهُنَّ وَاهْجُرُوهُنَّ فِي الْمَضَاجِعِ وَاضْرِبُوهُنَّ فَإِنْ أَطَعْنَكُمْ فَلَا تَبْغُوا عَلَيْهِنَّ سَبِيلًا ۗ إِنَّ اللَّهَ كَانَ عَلِيًّا كَبِيرًا ﴿٣٤﴾ وَإِنْ خِفْتُمْ شِقَاقَ بَيْنِهِمَا فَابْعَثُوا حَكَمًا مِّنْ أَهْلِهِ وَحَكَمًا مِّنْ أَهْلِهَا إِن يُرِيدَا إِصْلَاحًا يُوَفِّقِ اللَّهُ بَيْنَهُمَا ۗ إِنَّ اللَّهَ كَانَ عَلِيمًا خَبِيرًا

எந்தப்பெண்ணாவது (கணவனுக்கு) மாறு செய்வாளென்று நீங்கள் பயந்தால், அவர்களுக்கு நல்லுப

தேசம் செய்யுங்கள்; (திருந்தாவிடில் படுக்கையிலிருந்து அவர்களை அப்புறப்படுத்திவையுங்கள். (அதற்கும் திருந்தாவிடில்) அவர்களை அடியுங்கள். அதனால் அவர்கள் உங்களுக்கு வழிப்பட்டுவிட்டால் அவர்கள் மீது வேறு பழிகளைச் சுமத்த வழிதேடாதீர்கள். நிச்சயமாக அல்லாஹ்தான் மேலானவனும் பெரியவனுமாக இருக்கிறான். கணவன் மனைவிக்கிடையே பிரிவினை ஏற்பட்டுவிடும் என்று நீங்கள் அஞ்சினால், அவன் குடும்பத்தில் ஒருவரையும் அவள் குடும்பத்தில் ஒருவரையும் மத்தியஸ்தர்களாக ஏற்படுத்துங்கள். அவ்விருவரும் சமாதானத்தை உண்டுபண்ண விரும்பினால் இவ்விருவரையும் அல்லாஹ் ஒற்றுமையாக்கிவிடுவான். நிச்சயமாக அல்லாஹ் நன்கறிந்தோனும் கவனிப்போனுமாயிருக்கிறான்'' (4:34:35)

وَإِنِ امْرَأَةٌ خَافَتْ مِن بَعْلِهَا نُشُوزًا أَوْ إِعْرَاضًا فَلَا جُنَاحَ عَلَيْهِمَا أَن يُصْلِحَا بَيْنَهُمَا صُلْحًا وَالصُّلْحُ خَيْرٌ وَأُحْضِرَتِ الْأَنفُسُ الشُّحَّ وَإِن تُحْسِنُوا وَتَتَّقُوا فَإِنَّ اللَّهَ كَانَ بِمَا تَعْمَلُونَ خَبِيرًا ﴿١٢٨﴾

''எந்தப் பெண்ணாவது தன் கணவனின் பிணக்கையோ புறக்கணித்தலையோ பயந்தால், அவர்களிருவருக்கிடையிலேயே அவற்றைத்தீர்த்து சமாதானமாவதில் தவறொன்றுமில்லை. இத்தகைய சமாதானமே மிக நல்லது. மனங்கள் சாதாரணமாக உலோபித்தனத்தையே விரும்பும். ஆகவே நீங்கள் (உலோபிதனத்திற்கு உட்படாமல் ஒருவருக்கொருவர்) உபகாரியாயிருந்து இறையச்சத்தோடும் நீங்கள் நடந்து கொண்டால், நீங்கள் செய்ப

வற்றை அல்லாஹ் நிச்சயமாக நன்கறிந்தவனுகவே இருக்கின்ருன்.'' (4:128)

இத்தகைய சமாதான வழிகளெல்லாம் பயன் தராத சந்தர்ப்பத்திலேதான் ஒரு கணவன் தன் மனேவியைத் தலாக் சொல்லிவிடுகிருன். தலாக் விஷயத்தில் விளேயாட்டுக்கு இடமில்லே. அதாவது 'தலாக்' எனும் சொல்லே ஒரு கணவன் விளேயாட் டாகச் சொல்ல முடியாது. இதில் மிகவும் கவன மாக இருக்க வேண்டும்.

ஒருவர் தன் மனேவியை ஒருமுறை தலாக் சொல்லிவிட்டால், அவளுடைய 'இத்தா' இருக்கும் காலம் முடிவதற்குள் அவளே மறுபடி சேர்த்துக் கொள்ள அவனுக்கு சந்தர்ப்பம் கொடுக்கப்படுகி றது. அப்படி சேர்த்துக்கொள்ளாமல் இரண்டா வது முறையும் தலாக் சொல்லிவிட்டால், அவளு டைய இத்தா கழிவதற்குல் மறுமுறையும் அவளேச் சேர்த்துக்கொள்ள இடமுண்டு. இவ்விரு சந்தர்ப் பங்களிலும் இவர்களுக்கிடையில் மறுமணம் செய்து வைக்கத் தேவையில்லே. ஆனல் இத்தாவின் காலம் கழிந்த பின்னர் அவளோடு சேர்ந்து வாழ விரும் பினுல் மறுபடி ஒரு நிக்காஹ் மூலம் கல்யாண ஒப்பந்தம் நடைபெறவேண்டும். மூன்றுமுறை தலாக் சொல்லிவிட்டால் இந்த வாய்ப்பை இழந்துவிடு கின்றனர்.

மூன்று தலாக் சொல்லிவிடுவித்த மனேவியை மறுபடி மணம்முடித்து வாழ விரும்பும் கணவன், முக்கியமான மூன்று நிபந்தனேகள் நிறைவேற்றப் பட்ட பின்பே அப்படிச் செய்ய அனுமதிக்கப்படு வான். அவையாவன:

(1) அப்பெண் வேறொரு ஆடவனை முறைப்படி மணந்து முறையாக தாம்பத்திய வாழ்க்கை நடத்தவேண்டும்.

(2) அப்பால் அக்கணவன் தன் சுய நிர்ணயப்படி எவருடைய தூண்டுதலுமின்றி அவளை தலாக் சொல்ல வேண்டும்.

(3) அவ்விரண்டாம் கணவனின் தலாக்குக்குப் பிறகு அவள் இத்தா நிறைவேற்றவேண்டும்.

இத்தகைய கண்டிப்பான நிபந்தனைகள் ஏன் போடப்பட்டுள்ளன? விவாகரத்து ஒரு விளையாட்டல்ல என்பதை மக்களுக்கு உணர்த்துவதன் மூலம் இதை இயன்றவரை தவிர்க்கவேண்டும் என்பதை மனிதன் மனத்திற்கொண்டு வாழ வேண்டும் என்பதற்காகவே. ஒரு கணவன் ஆத்திரத்திஞல் அல்லது அவசரப் புத்தியிஞல் தூண்டப்பட்டு தன் மனைவியை மூன்று தலாக் சொல்லிவிட்டு அப்பால் தான் செய்த அவசரத்தீர்மானத்தால் கவலைப்படுவதைத் தவிர்க்கும் முகமாக, ஒரே முறையில் மூன்று தலாக் சொல்லும் முறையைப் பல இமாம்கள் தடைசெய்துள்ளார்கள்.

இம்முறைகளுடன் விவாகவிடுதலைக்கு வேறு சில வழிகளும் உண்டு. அவையாவன:-

(அ) பெண் தன்னை விவாகவிடுதலை செய்து கொள்ளும் பொறுப்பு அவளிடமே இருக்கட்டும் என்று மணாளன் ஏற்றுக்கொண்டே விவாகம் நடைபெற்றிருந்தால், பெண் விரும்பும் சமயத்தில் விவாக விடுதலை பெற்றுக் கொள்ளலாம்.

(ஆ) விவாக ஒப்பந்தத்தின்போது கணவன் ஏற்றுக்கொண்டவற்றைக் கணவன் முறித்து விட்டால், இதன் காரணமாக பெண் விவாக விடுதலை கோரலாம். மேற்படி ஏற்றுக் கொள்ளப்பட்ட விஷயம் இஸ்லாத்துக்கு முரண்படாதிருத்தல் வேண்டும்.

(இ) மனைவிக்குத் தேவையான உணவு, உடை, உறைவிடம் என்பன கொடுக்க இயலாத கணவனிடமிருந்து பிரிந்துகொள்ளவோ கணவனின் தீமைகளைத் தவிர்த்துக் கொள்ளவோ தன்னை விட்டுப் பிரிந்து கணவன் நீண்ட காலம் திரும்பி வராமையாலோ விவாக விடுதலை பெற்றுக்கொள்ளப் பெண்ணுக்கு உரிமையுண்டு. இத்தகைய கட்டங்களில் இஸ்லாமிய நீதிமன்றமே தீர்ப்புக்கூறும்.

இஸ்லாம் கூறும் விவாக விடுதலை முறையைப் புரிந்துகொள்ள முடியாத மேதைகள் இதுபற்றி நாம் மேலே கூறிய அம்சங்கள் அனைத்தையும் முன் வைத்து ஆலோசனை செய்யுமாறு வேண்டுகிறோம். அத்துடன் உலகில் வாழும் ஏனைய மக்கட் கூட்டங்களில் காணப்படும் நடைமுறைகளையும் சற்று திரும்பிப் பார்த்தல் நல்லது என்று கூறிக்கொள்கிறோம்.

கத்தோலிக்க சமயம் விவாகரத்துச் செய்தலை அனுமதிக்கவில்லை. கணவனோ மனைவியோ எக்காரணம் கொண்டும் தங்கள் மணப்பந்தத்தை அறுக்க அனுமதியில்லை. எக்காரணம் கொண்டும் பலதார மணம் செய்யவும் அனுமதியில்லை.

''தேவன் சேர்த்து வைத்ததை மனிதன் பிரிக்கலாகாது.'' (மத்தேயு)

புரொட்டஸ்டன்ட் பிரிவினர், கணவன் மனைவிக்கிடையே விபசாரம் போன்ற துரோகச் செயல் நிகழ்ந்தாலன்றி விவாகரத்து செய்யக் கூடாது என்கின்றனர். எக்காரணம் கொண்டும் மறுமணம் செய்தலை அங்கீகரிக்கவில்லை. இதற்கு இவர்களின் ஆதாரம்:-

''விபசாரத்தின் காரணமாகவேயன்றித் தன் மனைவியை விவாகரத்துச் செய்பவன், அவளை விபசாரம் செய்யவே விட்டுவிடுகிறான்.'' (மத்தேயு)

''விவாக விடுதலை செய்யபபட்டவளை மணப்பவன் விபசாரமே செய்கிறான்.'' (மத்தேயு)

இங்கே ஒன்று கூறிக்கொள்ள விரும்புகிறோம். நாம் இங்கே குறிப்பிட்ட கிறிஸ்தவம் தற்போது நாம் காண்பதே. இது இறைதூதர் ஈஸா (அலை) அவர்கள் போதித்த அடிப்படையென்று நாம் ஏற்க முடியவில்லை. ஏனெனில் ஈஸா (அலை) அவர்களின் போதனையில் ஏகத்துவம் உயிர்த்துடிப்பு இருந்தது. இந்திய கலாச்சாரத்தின் திரித்துவவாடையோ, ரோமரின் விக்கிரக ஆராதனையின் சாயலோ இருக்கவில்லை.

இரு மனங்களும் ஒன்றுபட்டு இணையாத மண வாழ்வு உருப்பட முடியாது. மனமும் செயலும் ஒன்றுபட்டு வாழ முடியாத தம்பதிகள் பிரிந்து கொள்வது நல்லது. இவர்களுக்கும் நல்லது. இவர்களின் பெற்றோர், உறவினர், பிள்ளைகள், சமூகம் எல்லார்க்கும் நல்லது. இதனால் மனநோய் போன்றவை தவிர்க்கப்படலாம். கடவுள் சேர்த்ததை

மனிதன் பிரிக்கலாமா! என்று விட்டுவைத்தால், பல விபரீதங்கள் வளர்ந்து படுகொலைகளில் முடியவும் இடமுண்டு. ஏன், இன்று நிகழ்ந்துகொண்டு தானிருக்கின்றன.

தன் மனைவியை அல்லது கணவனைப் பிரிந்து வேறொரு நபருடன் உறவுகொள்வதற்காகக் கையாளப்படும் ஒரேவழி கொலைதான். இது மேற்கு நாடுகளின் சாதாரண விஷயம்.

கணவனோ மனைவியோ துர்நடத்தையில் ஈடுபட்டாலும் அவர்கள் பிரிந்து சென்று தூய்மையுள்ள ஒரு துணையோடு குடித்தனம் நடத்த அங்கே வாய்ப்பில்லை. மதுபோன்ற செயற்கைப் பொருட்களாலோ மனநோய், நரம்புத்தளர்ச்சி போன்ற இயற்கைக் காரணங்களாலோ சித்தம் கெட்டு நடந்தாலும் ஒருவரை ஒருவர் பிரிந்துவிட முடியாது. இருவரும் மனம் ஒத்துப் பிரிந்து கொள்ளவும் இடமில்லை.

இந்நிலையை நாம் கண்டிக்கவில்லை. அது நமக்குத் தேவையுமில்லை. ஆனால், அச்சமயத்தைச் சேர்ந்த ஆராய்ச்சியாளரே விமர்சிக்கின்றனர். ஆங்கில அறிஞர் ‘பெந்தம்’ கூறுகிறார்:-

''நிரந்தர விவாகம், மனிதனின் தேவைக்கேற்றதுதான். ஆனால் ஒரு பெண்ணின் மனதில் தன் கணவனைப் பற்றிய அன்புக்குப்பதில் கடும் வெறுப்பு நிலைத்த பின்னும் அவனோடு வாழ்வது ஏற்க முடியாத ஒன்றாகும். பெண் விரும்பாவிட்டாலும் அன்பினால் ஒன்றுசேர்தல் என்ற நிபந்தனை விவாக பந்தத்தில் உண்டு. ஏனெனில், இவர்களுக்கு விவா

கம் நடைபெற்றபோது தேவாலயத்தில், நீங்கள் இருவரும் பாக்கிய சாலிகளாவதற்காக ஒன்றிணை கிறீர்கள். என்றுமே திறக்க முடியாத மனம் எனும் கோட்டைக்குள் நுழைகிறீர்கள். நீங்களிருவரும் வாளேந்தி வெட்டிக்கொண்டாலும் அக்கோட்டை யிலிருந்து நீங்கள் வெளியேற நான் அனுமதிக்க மாட்டேன்.'' எனக் கூறப்படுகின்றது.

''இத்தகைய பிரிக்க முடியாத தாம்பத்தியப் பந்தத்திலிருந்து விடுபட ஒரே வழி மரணம்தான் என்றால், கொலைகள் பலவகையிலும் மலிந்து விடும்'' என்பது மற்றொரு ஆங்கில அறிஞரின் கருத்து.

இத்தகைய சட்டத்தின்படி வாழ்வோர் இரண் டிலொரு வழியைத்தான் பின்பற்ற முடியும். ஒன்று: சமயக் கட்டுப்பாடுகளைப் பேணி உலகில் துன்புறு வது. மற்றது: சமயத்தை உதறித்தள்ளிவிட்டு மனம்போன போக்கில் கண்டதே காட்சி கொண் டதே கோலம் என்று வாழ்வது. இவ்விரண்டாம் வழியையே பெரும்பாலான மேனாட்டு மக்கள் தேர்ந்தெடுத்துள்ளனர். இதன் விளைவையும் அனு பவிக்கின்றனர்.

பிரித்தானிய சாம்ராச்சியத்தின் பட்டத்து இளவரசராயிருந்த எட்டாம் எட்வட், ஓர் அழ கியைக் காதலித்தார். அவளையே மணம் செய்து கொள்ள விரும்பினார். அவளோ ஒரு விதவை அவளை மணப்பது விபசாரத்திற்குச் சமம் என்கி றது சமயம். ஆகவே அவளை மணந்தால் அரச உரிமையை இழந்துவிடுவாய் என்று பயமுறுத்தியது மதபீடம்.

இளவரசரின் மனத்தில் போராட்டம். சமயக் கோட்பாட்டுக்கும் பகுத்தறிவு வாதத்துக்குமி டையில் கடுமையான போராட்டம் நடந்தது! இறுதியில் பகுத்தறிவுக்கு வெற்றி! உலக மன்ன ராகும் உரிமையைப்பற்றி எவ்விதக் கவலையுமின்றி தன் இதயம்விரும்பிய அப்பெண்ணையே மணந் தார்.

இப்படியான பெரியவிடத்துச் செய்திகள் இன்னும் உண்டு. அவற்றைக் கூறுவது நம்நோக் கமல்ல. இன்றைய மேநாட்டு நிலையென்ன? தம் மனம்போனவாறு சட்டங்களை மாற்றிக்கொண்டு வேதவாக்குக்களையெல்லாம் ஒரு பக்கமாகத் தள்ளி வைத்துவிட்டார்கள். இதன்விளைவென்ன? அமெ ரிக்கா போன்ற நாடுகளில் விவாகரத்து மிகவும் மலிவான சரக்காகிவிட்டது. காலையில் விவாகம் செய்வோர் அன்று மாலையிலேயே விவாகரத்துச் செய்து பிரிந்துகொள்வதும் உண்டு.

பிரான்ஸ் போன்ற நாடுகளில், விவாகரத்து பற்றிய சமயக்கட்டுப்பாடுகளை சற்று தளர்த்திக் கொண்டார்கள். விபசாரம், இழிவானநடத்தை, நீதிமன்றத்தால் கடும் தண்டனைக்குள்ளாதல் ஆகிய மூன்று காரணங்களில் ஒன்றுக்காக மாத்திரம் விவாகரத்துச் செய்துகொள்ளலாம் என்று தீர்மா னிக்கப்பட்டுள்ளது. இதனால் அங்கே என்னநடக் கிறது என்று பார்ப்போம். பிரிந்து வாழவிரும்பும் தம்பதிகள், மேலே கூறப்பட்ட குற்றங்களில் ஒன்றைப் பகிரங்கமாகவே செய்கின்றனர். தாம் விபசாரம் செய்ததாய் நீதிமன்றத்தில் ஏற்றுக் கொள்வர். கடும்தண்டனைக்குரிய குற்றத்தைப்

பகிரங்கமாகச் செய்வர். கணவனை அல்லது மனைவியைப் பகிரங்கமாகவே இழிவுபடுத்துவர். இப்படியெல்லாம் செய்த பின்னும் விவாகரத்து நீதிமன்றத்தால் அனுமதிக்கப்பட பல வருடங்கள் கழியலாம்.

இதன் விளைவு, அப்பாவிப் பிள்ளைகளும் சுற்றத்தாரும் அவமானத்திற்குள்ளாகின்றனர். இது ஒரு சாதாரண விஷயமாக மாறிவிட்ட அந்தச்சூழலில் அவமானம் என்ற சிந்தனையே மங்கிவருகிறது. விபசாரம் மலிந்துவிட்டது. பிறர்மனைபுகுதல் அங்கே சாதாரண நிகழ்ச்சி. கட்டிய புருஷனை விட்டுக் காதலனோடு கம்பிநீட்டல் ஒரு சர்வசாதாரண விஷயம். தந்தைக்கும் மகளுக்குமிடையிலும் தாய்க்கும் மகனுக்குமிடையிலும் சந்தேகக் கண்கொண்டுதான் நோக்கப்படும். எனவே உயர்ந்த குடும்பப் பண்புகள் மங்கிவிட்டன. மிருகவாழ்வு தலைவிரித்தாடுகின்றது. நமது நாட்டிலும் இத்தகைய நாகரீக வாழ்க்கை வேண்டுமே என்று ஆசைப்பட எவருக்கும் துணிவு வருமா?

வேறுசில சமயங்களில் விவாகரத்து என்ற ஒரு விஷயமே இல்லை. கணவனால் கைவிடப்பட்டவளுக்கு சமூகத்தில் இடமேயில்லை. புருஷனை இழந்தவள் உடன் கட்டையேறும் வழக்கம் தற்போது குறைந்துவிட்டது. ஆயினும் அவள் மறுமணம் செய்து வாழ இடம்கொடுக்கப்படவில்லை. ஆகவே இளம் பெண்கள் உத்தியோகப் பற்றற்ற குடும்ப வாழ்க்கை நடத்திக் கொண்டுதான் இருக்கின்றனர். சமயப் பற்றில்லாத பெண்கள் விபசாரம் போன்ற தீயவழிகளில் தம் பருவ உணர்ச்சிகளைத் தீர்த்துக் கொள்வ

தில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. இத்தகைய சூழலில், நமக்கு மேநாட்டு மேதாவிகள் தந்துள்ள நவீன குடும்பக் கட்டுப்பாட்டு முறைகளுக்கும் நல்ல வரவேற்பு இருப்பதில் அதிசயப்பட ஒன்றுமில்லை.

கிழக்காசிய நாடுகள் பலவற்றில், குடும்ப வாழ்க்கையில் பெண்களின் நிலை மேலோங்கிக் காணப்படுகின்றது. மனைவிதான் குடும்பத்தலைவி. அவள் இட்டதே சட்டம். கடைக்குப் போவதும், பொருட்களை வாங்குவதும், ஏன் உத்தியோகம் பார்ப்பதும் அவளே. இவற்றுக்கு உதவியாகவும் தனக்குக் கட்டுப்பட்டும் கணவன் வாழவேண்டும். தவறினால் கணவனுக்கு சீட்டுக் கிழிக்கப்படும். மனைவியின் அட்டகாசம் பொறுக்க முடியாமல் கம்பி நீட்டிய கணவர்களும் உண்டு.

இத்தகைய சமூக அமைப்பில் குடும்ப வாழ்க்கை எப்படி அமையும் என்பதையும் நாம் கூறத்தேவையில்லையென்று கருதுகிறோம். இயற்கையாகவே பெண்ணிடம் உள்ள பலவீனமும் அதைச்சார்ந்த ஏனைய விளைவுகளும் அவள் தலைமை தாங்கும் குடும்ப வாழ்க்கையில் தாக்கத்தை உண்டுபண்ணவே செய்யும் என்பதை எவரும் மறுக்க முடியாது.

இஸ்லாம், மனித சமுதாயத்துக்குக் கொடுத்த வாழ்க்கைத் திட்டத்தில் சமத்துவம் எவ்வாறு செயல்படுகின்றது என்பதைப் பல கோணங்களிலிருந்து நம் வாசக நேயர்களின் சிந்தனைக்கு முன் வைத்தோம். சமூக விவகாரங்களிலும் நீதிபரிபாலனத்திலும் பொருளியலிலும் இஸ்லாமிய சமத்துவம் எவ்வாறு அமுலாக்கப்படுகின்றது என்பதைச்

சில நடைமுறைச் சம்பவங்களையும் சரித்திர நிகழ்ச்சிகளையும் இணைத்து முன்வைத்தோம். ஆண் பெண் சமத்துவத்தின் இஸ்லாமிய அமைப்பையும் சற்று விரிவாகக் கூறினோம். இஸ்லாத்தைப் பிழையாகப் புரிந்துகொள்ளாது தடுப்பதற்காக முஸ்லிம்கள் எனப்படுவோரிடம் காணப்படும் சில தவறான நோக்கையும் போக்கையும் சுட்டிக் காட்டிக் கண்டித்தோம். இனி, மனித உரிமைகளில் முக்கியமாக மற்றொரு அம்சமான சுதந்திரத்தைப் பற்றிய இஸ்லாமியக் கருத்தை அடுத்த அத்தியாயத்தில் முன்வைக்க விரும்புகிறோம்.

# சுதந்திரம்

இஸ்லாமிய வாழ்க்கை முறையின் அடி நாதம் சுதந்திரம் என்றால் மிகையல்ல. வாழ்க்கையின் சகல கோணங்களிலும் மனிதன் சிந்தனையோடு செயலாற்ற வேண்டும் என்பது இஸ்லாத்தின் போதனை. இந்த ஒரு அம்சத்தின் மூலமே பகுத்தறிவு பெற்றுள்ள மனிதன் ஏனைய உயிரினங்களை விட உயர்ந்த நிலையை அடைகிறான். இதற்காகத் தன் ஏனைய ஐம்புலன்களையும் பயன்படுத்தாத மனிதனைக் கண்டிக்கும் அல்குர்ஆன் இத்தகையோர் விலங்கினங்களைவிடத் தாழ்ந்தவர்கள் என்கின்றது.

لَهُمْ قُلُوبٌ لَّا يَفْقَهُونَ بِهَا وَلَهُمْ أَعْيُنٌ لَّا يُبْصِرُونَ بِهَا وَلَهُمْ ءَاذَانٌ لَّا يَسْمَعُونَ
بِهَآ أُولَٰٓئِكَ كَٱلْأَنْعَٰمِ بَلْ هُمْ أَضَلُّ أُولَٰٓئِكَ هُمُ ٱلْغَٰفِلُونَ

''அவர்களுக்கு இதயங்களுண்டு; அவற்றால் உணர்ந்து கொள்ளமாட்டார்கள். அவர்களுக்கு கண்களுண்டு; அவற்றால் பார்க்க மாட்டார்கள். அவர்களுக்கு காதுகளுண்டு; அவற்றால் கேட்கமாட்டார்கள். அவர்கள் மிருகங்களைப் போன்றவர்; இல்லை அவற்றைவிட வழிகெட்டவர்கள். இத்த

கையோர் தான் நம் போதனைகளை அலட்சியம் செய்தவர்கள்'' (7:179)

சிந்தனையைத் தீட்டி நேர்வழி நடத்தியவர்கள் மாத்திரமே தாமும் நன்மையடைந்தனர். அவர்களின் சிந்தனையின் பயனாய் உலக மாந்தரும் பயனடைந்தனர்; பயனடைந்து கொண்டிருக்கின்றனர். இன்றைய நவீன உலகின் வசதிகள் யாவும் ஒரு சிலரின் சிந்தனையின் பயனாகவே உருவாயின. மறுமை வாழ்வின் சுபீட்சமும் நேர்மையான சிந்தனையிலேதான் தங்கியுள்ளது. இதனாற்றான் சிந்தனைக்கு மிகமேலான இடத்தைக் கொடுக்கிறது அல்குர்ஆன். பல சந்தர்ப்பங்களிலும் சிந்தனை செய்யுங்கள், ஆராய்ந்து பாருங்கள், படிப்பினை கொள்ளுங்கள், உங்கள் உள்ளங்கள், சிந்தித்துணர முடியாதவாறு பூட்டப்பட்டுள்ளனவா, அல்குர்ஆனை நீங்கள் ஆராய்வதில்லையா, சிந்தனையாளர் உண்டா? என்றெல்லாம் குறிப்பிடுகின்றது.

அரசியல், பொருளியல், சமயம், சிந்தனை ஆகிய நான்கு அம்சங்களிலும் சுதந்திரம் பெற்ற மனிதனே உண்மையான சுதந்திரத்தை அனுபவிப்பவனாகக் கருதப்படுகிறான் இவற்றில் ஏதேனும் ஒரு அம்சத்தில் கோளாறு காணப்பட்டால் முழுமையான சுதந்திரம் கைகூடவில்லை என்பதுதான் அர்த்தம். ஆகவே இந்நான்கு அம்சங்களிலும் இஸ்லாம் தரும் சுதந்திரத்தை இங்கே ஆராய்வோம்.

## அரசியல் சுதந்திரம்

ஒவ்வொரு தனிநபரும் அரசியல் விவகாரங் களிற் தன் சுயநிர்ணய உரிமையோடு இயங்கவும் கருத்து வெளியிடவும் தனக்கு விருப்பமான பிரதி நிதியைத் தெரிவுசெய்யவும் வசதியிருத்தலே அர சியற் சுதந்திரம் எனப்படுகின்றது. இப்படிச் சொல் லும்போது, நாட்டின் நலன் கருதி வகுக்கப்பட்டுள்ள சட்டதிட்டங்களை மீறவும் ஒவ்வொரு மனிதனுக்கும் சுதந்திரம் உண்டு என்று எவரும் விளக்கம் கூற முனையமாட்டார் என்று கருதுகிறோம். ஏனெனில் இத்தகைய நிலைக்கு அராஜகம் என்றே கூறப்படு கின்றது. இந்நிலை மனித குலத்தையே அழித்து விடும்.

அவ்வாறே அல்லாஹ்வின் கட்டளைகளை மீற வும் மனிதனுக்கு சுதந்திரம் இருக்கவேண்டும் அது தான் பூரண சுதந்திரம் என்று எவரும் விளக்கம் கூற முனையமாட்டார். ஏனெனில் இத்தகைய நிலை மிருக வாழ்வாகும். இந்நிலை இம்மையில் மட்டுமல்ல நீண்ட மறுமையிலும் அழிவைத்தரும்.

நாட்டின் தலைவரை, மக்களை வழிநடத்தும் தலைவரை, மக்களின் சகல விவகாரங்களிலும் இறை வழி நின்று அவர்களை வழிநடத்தும் பொறுப்புடை யவரைத் தெரிவு செய்யும் பொறுப்பை இஸ்லாம்

பொதுமக்களிடம் ஒப்படைக்கிறது. இங்கே சாதாரணமாக மக்கள் பின்பற்ற வேண்டிய அடிப்படைகளை ஏற்கெனவே வகுத்துக் கொடுத்துள்ளது. ஆகவே அல்லாஹ்வின் கட்டளைகளைப் பேணி நடக்காதவர்களைத் தெரிவு செய்ய இடமில்லை. ஆகவே முஸ்லிம்கள் தங்களின் அரசியல், சமூக, சமய, பொருளாதார விவகாரங்களுக்குப் பொறுப்பாக ஒருவரைத் தெரிவு செய்யும்போது, இறையச்சத்திற் சிறந்தவரையே தெரிவு செய்வார்கள். வெறும் பக்தி மாத்திரம் போதாது, பதவிக்கு அப்பதவிக்குரிய திறமைசாலிகளுக்கிடையே இறைபக்தியிலும் மேலானவரையே தெரிவு செய்வார்கள். அன்றி, ஆட்பலம், பணப்பலம், செல்வாக்குப்பலம், குலப்பலம் போன்றவற்றுக்கு முக்கியத்துவம் கொடுக்க மாட்டார்கள். இவ்வுயர் பண்பை முந்தைய முஸ்லிம்களின் சரித்திரத்தில் அடிக்கடி காண்கிறோம்.

முஹம்மத் (ஸல்) அவர்களின் பிரதிநிதிகளாய் வந்த கலீபாக்கள் யாவரும் இம்முறையிலேயே தெரிவு செய்யப்பட்டார்கள்.

அன்றைய முஃமின்கள் யாவராலும் தெரிவு செய்யப்பட்ட முதலாம் கலீபா அபூபக்கர் ஸித்தீக் (றளி) அவர்கள் தாம் அப்பொறுப்பை ஏற்றுக் கொண்டபோது நிகழ்த்திய சொற்பொழிவில் பின்வருமாறு குறிப்பிட்டார்கள்:

''மனிதர்களே, உங்கள் தலைவனாக நான் தெரிவு செய்யப்பட்டுள்ளேன். நான் உங்கள் எல்லோரை விடவும் சிறந்தவன் என்று நான் எண்ணவில்லை. நான் சத்தியம் தவறாது நடந்தால் நீங்கள் எனக்குத் துணையாக இருக்கவேண்டும். நான் பிழை செய்தால் நீங்கள் என்னைத் திருத்த வேண்டும். உங்கள் விவகாரங்களில் நான் அல்லாஹ்வின் கட்டளைப்படி நடந்துகொள்ளும்போது நீங்கள் எனக்குக் கட்டுப்பட வேண்டும். நான் அவனுக்கு மாறுசெய்தால் உங்கள் மீது எனக்கு எவ்வித அதிகாரமும் இல்லை...... அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சென்ற வழியிற்றான் நானும் செல்வேன். நான் நேர்மையைக் கைக்கொண்டு ஒழுகினால், நீங்கள் என்னைப் பின்பற்றுங்கள். நான் கோணல் வழி சென்றால் என்னை நேர்வழிப்படுத்துங்கள்.''

இரண்டாம் கலீபா உமர் (றளி) அவர்கள் ஒருசமயம் பொதுமக்களுக்கு உரை நிகழ்த்தும் போது, ''நான் தவறு செய்தால் என்னைத் திருத்துங்கள்'' என்றார்கள். இதைக்கேட்ட ஒருவர் உடனே எழுந்து நின்று, ''கலீபாவே, உம்மிடம் நாம் தவறு கண்டால் இதனால்தான் உம்மைத் திருத்துவோம்'' என்று தம்மிடமிருந்த வாளைக் காட்டினார். இதைக் கேட்ட கலீபா கோபம் கொள்ளவில்லை. மகிழ்ச்சியாற் சிரித்தார்கள். ''என் சகோதரர்கள் என்மீது இவ்வளவு அக்கறையோடிருக்கிறார்களே! அல்லாஹ்வுக்கே புகழெல்லாம்'' என்று சொன்னார்கள்.

மூன்றாம் கலீபா உஸ்மான் (றளி) அவர்களின் ஆட்சியில், ஒருமுறை மக்கள் அவர்களை எதிர்த்த போது, பின்வருமாறு கூறினார்கள்:

''நான் அல்லாஹ்விடமே மீள்கிறேன். தீமை செய்யமாட்டேன். நான் என்பேச்சை முடித்தபின், உங்கள் முக்கியஸ்தர்கள் என்னிடம் வந்து தங்கள் கருத்துக்களை என்னிடம் கூறலாம். அல்லாஹ்மீது ஆணை; ஓர் அடிமை என்னிடம் வந்து ஒரு நியாயத்தைக் கூறினுல் அவ்வடிமைக்கு நான் அடிமை.''

மனித மாணிக்கம் முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதர். தம் மனம்போன வாறு எதையும் பேசாதவர்கள். அவர்களைப் பற்றி அல் குர்ஆன் இவ்வாறு குறிப்பிடுகிறது

وَٱلنَّجْمِ إِذَا هَوَىٰ ① مَا ضَلَّ صَاحِبُكُمْ وَمَا غَوَىٰ ② وَمَا يَنطِقُ عَنِ ٱلْهَوَىٰٓ ③ إِنْ هُوَ إِلَّا وَحْىٌ يُوحَىٰ

''தோன்றி மறையும் நட்சத்திரங்கள் மீது சத்திய மாக. உங்கள் நண்பர் வழிதவறிவிடவில்லை; தீய வழியில் செல்லவுமில்லை. அவர் தன் இஷ்டப்படி எதனையும் பேசுவதில்லை. இது அவருக்கு வஹிமூலம் அறிவிக்கப்பட்டதேயன்றி வேறன்று. (53:1–4)

இத்தகைய தூதருக்கே அல்குர்ஆன் பின்வருமாறு போதிக்கிறது:–

فَبِمَا رَحْمَةٍ مِّنَ ٱللَّهِ لِنتَ لَهُمْ وَلَوْ كُنتَ فَظًّا غَلِيظَ ٱلْقَلْبِ لَٱنفَضُّوا۟ مِنْ حَوْلِكَ فَٱعْفُ عَنْهُمْ وَٱسْتَغْفِرْ لَهُمْ وَشَاوِرْهُمْ فِى ٱلْأَمْرِ فَإِذَا عَزَمْتَ فَتَوَكَّلْ عَلَى ٱللَّهِ إِنَّ ٱللَّهَ يُحِبُّ ٱلْمُتَوَكِّلِينَ

(நபியே!) ''அல்லாஹ்வின் அருள் காரணமாகவே நீர் அவர்கள் மீது இரக்கம் காட்டினீர். கடுகடுப்பாகவும் கடின சித்தமுடனும் நீர் இருந்திருப்பீராயின் அவர்கள் உம்மைவிட்டு வெருண்டோடியிருப்பார்கள். ஆகவே அவர்களின் குற்றங்களை நீர் மன்னித்து அவர்களுக்காக அல்லாஹ்விடம் மன்னிப்புக் கோருவீராக. அன்றி கருமங்களில் அவர்களுடன் ஆலோசனை செய்து வருவீராக. அப்பால் ஒரு விஷயத்தில் நீர் ஒரு முடிவுக்கு வந்தால் அவ்விஷயத்தில் அல்லாஹ்வின் மீதே நம்பிக்கை வைப்பீராக. நிச்சயமாக அல்லாஹ் தன் மீது நம்பிக்கை வைப்போரை நேசிக்கிறான்.'' (3:159)

இந்த இறைவசனம் சகல அரசியல் தலைவர்க்கும் அதிகாரிகளுக்கும் கட்டாயம் இருக்க வேண்டிய அரும்பண்புகளை இரத்தினச் சுருக்கமாகக் கூறுகிறது. மக்கள்மீது அன்புகாட்டல், இன்முகத்தோடு அவர்களை மனம் திறந்து வரவேற்றல் அவர்கள் செய்யும் தவறுகளை மன்னித்தல் மாத்திரமன்றி அவர்களுக்காக இறைவனிடமும் ஏனையவரிடமும் மன்னிப்புக் கோரல், அவர்களின் அபிப்பிராயங்களை மதித்து அவர்களோடு கலந்துரையாடி ஒரு முடிவுக்கு வருதல், அப்பால் உறுதியான ஒரு முடிவை அறிவித்தல், இதில் எந்தவிதமான செல்வாக்குக்கும் வளைந்து கொடுக்காமல் எடுத்த முடிவை இறைவன் துணையோடு அமுல் நடத்தல் ஆகிய அருங்குணங்களைப் பெருங்குணங்களாகக் கொண்டு ஆட்சி செலுத்தும் தலைவரையும் கடமை புரியும் அதிகாரியையும் எவர்தான் வெறுப்பர். இத்தகைய அருங்குண சீலர்கள் மக்கட் தலைவராகப் பணத்தை வாரி இறைத்து வாக்குச் சேகரிக்க வேண்டியதில்லை.

பதவி உயர்வுபெற கைலஞ்சமோ பெரிய புள்ளிகளின் பக்கச் செல்வாக்கோ தேவையில்லை.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், பொது விஷயங்களில் மக்களின் அபிப்பிராயங்களுக்கு மதிப்புக் கொடுத்தார்கள். அது தங்களின் சொந்த அபிப்பிராயத்துக்கு ஒத்துவராவிட்டாலும் சரியே. அபிப்பிராய வித்தியாசங்கள் தோன்றினுல் பெரும்பான்மையோரின் விருப்பப்படி தீர்மானித்துக் கொள்வார்கள். ஆனுல் அல்லாஹ்வின் தெளிவான கட்டளை காணப்படும் விஷயங்களில் எவருடைய அபிப்பிராயத்துக்கும் இடமில்லை.

முஸ்லிம் சாம்ராச்சியத்தை ஆண்ட கலீபாக்களும் தங்கள் பிரச்சினைகளைத் தீர்த்துக்கொள்ள, முதலாவது அல்லாஹ்வின் கட்டளையும் அது இல்லாத விஷயத்தில் அவனுடைய தூதரின் வழிகாட்டலையும் ஏற்று நடந்தார்கள். ஏனைய விஷயங்களில் பொதுமக்களின் அபிப்பிராயங்களை நன்கு மதித்து நடந்தார்கள்.

சிலர் இஸ்லாமிய அரசியல் முறையை மேனுட்டு ஜனநாயக முறை என்று நினைத்துக் கொண்டிருக்கிருர்கள். அதைச் சிலர் இஸ்லாமிய ஜனநாயக முறை என்றும் கூறுகிருர்கள். இது, இவர்கள் இஸ்லாத்தை முற்றுக உணரத் தவறியதனுல் ஏற்பட்ட கோளாறு. பொதுவாக இஸ்லாமிய அரசியற் திட்டத்துக்கு மற்றெந்தப் பெயரும் பொருந்தாது. அது இஸ்லாமிய அரசியற் திட்டமேதான். அதற்கு இஸ்லாமிய ஜனநாயகம் என்றோ இஸ்லாமிய சோஷலிஸம் என்றோ இஸ்லாமியப் பொது

வுடமை என்றோ பெயரிட முடியாது. இஸ்லாமிய வாழ்க்கை முறைக்கு வேறு பெயர் சூட்டினால், அது சிரிப்புக்கிடமாகும். அப்படியே இஸ்லாம் தந்த அரசியல் திட்டத்துக்கு வேறுபெயர் பொருந்தாது.

பால் வெள்ளையாக இருக்கின்ற படியால் அதைக் கொக்கு என்றும் சொல்லலாம் என்றால், சிறுபிள்ளையும் சிரிக்கிறது. இஸ்லாம் பொதுமக்களின் அபிப்பிராயத்துக்கு மதிப்பளிக்கிறது ஆகவே அதை ஜனநாயகம் என்று கூறலாம் என்றாலும் நமக்கு சிரிப்பு வரவேண்டும். இல்லையென்றால் நமக்கு இஸ்லாமும் புரியவில்லை; ஜனநாயகமும் தெரியவில்லை என்பதுதான் அர்த்தம்.

ஏனென்றால், இஸ்லாமிய ஆட்சி முறைக்கு அடித்தளம் அல்லாஹ்வின் கட்டளையான அல்குர் ஆனும், அவனுடைய தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களின் வாழ்க்கை முறையான ஸுன்னவும் ஆகும். இவ்விரண்டுக்கும் மாறாக உலகமாந்தர் அத்தனைபேரும் சேர்ந்து ஏகோபித்த தீர்மான மெடுத்தாலும் அது இஸ்லாமிய ஆட்சிமுறையாகாது. ஆனால் மேனாட்டு ஜனநாயக முறைக்கு அப்படியொரு தெய்வீக வழிகாட்டுதல் இல்லை. மனிதர்கள் பெரும்பாலோர் நல்லவராயின் அவர்களின் ஜனநாயகத் தீர்மானங்களும் நல்லவையாகலாம். தீயவர் பெரும்பான்மையினரானால், அவர்களின் ஜனநாயகமும் தீயதாகலாம். ஆனால் இஸ்லாமிய ஆட்சிமுறையில் இந்த நிலை ஏற்பட இடமில்லை.

இஸ்லாமிய ஆட்சிமுறையில் அல்லாஹ்வுக்கும் றஸூலுக்கும் பிறகுதான் தலைவர் வருகிறார். ஆகையால் அல்லாஹ்வினதும் றஸூலினதும் கட்டளைகளுக்கு மாறாக சட்டமியற்றவோ ஆட்சிசெலுத்தவோ எவருக்கும் அதிகாரமில்லை.

يَـٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُوٓا۟ أَطِيعُوا۟ ٱللَّهَ وَأَطِيعُوا۟ ٱلرَّسُولَ وَأُو۟لِى ٱلْأَمْرِ مِنكُمْ ۖ فَإِن تَنَـٰزَعْتُمْ فِى شَىْءٍ فَرُدُّوهُ إِلَى ٱللَّهِ وَٱلرَّسُولِ إِن كُنتُمْ تُؤْمِنُونَ بِٱللَّهِ وَٱلْيَوْمِ ٱلْـَٔاخِرِ ۚ ذَٰلِكَ خَيْرٌ وَأَحْسَنُ تَأْوِيلًا

''விசுவாசிகளே, நீங்கள் அல்லாஹ்வுக்கு வழிப்பட்டு நடங்கள். அல்லாஹ்வின் தூதருக்கும், (அவ்விரண்டின்படி வழி நடத்தும்) உங்கள் அதிகாரிகளுக்கும் வழிப்படுங்கள். ஒரு விஷயத்தில் நீங்கள் பிணங்கிக் கொண்டால், அவ்விஷயத்துக்குத் தீர்ப்புக் கூறும் பொறுப்பை அல்லாஹ்விடமும் றஸூலிடமும் ஒப்படைத்துவிடுங்கள். நீங்கள் அல்லாஹ்வையும் இறுதி நாளையும் நம்புவோராயிருந்தால், அப்படிச் செய்வதுதான் நல்லது. அதுதான் நல்ல முடிவாகவும் இருக்கும்.'' (4:59)

ஆகவே, ஐரோப்பிய ஜனநாயகத்தின்படி மதுபானம் ஒரு ஊக்கு பானம் அதை எல்லோரும் அருந்தவேண்டும், விபசாரம் ஒரு குற்றமல்ல; அதை விரும்பியவர் விரும்பியவாறு செய்துகொள்ளலாம் என்பன போன்ற சட்டங்களை ஒரு பாராளு

மன்றம் தீர்மானிக்க இடமுண்டு. இவற்றுக்குத் தேவையான ஒரேயொரு விஷயம் பெரும்பான்மை வாக்கு. குடிகாரர்களும் நாகரீக விபசாரிகளும் நிறைந்த நாடுகளில் இப்படியான தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டால் ஆச்சரியப்பட ஒன்றுமில்லை. ஏனெனில் சட்டம் இல்லாவிட்டாலும் யதார்த்த நிலை, சில நாடுகளில் இப்படித்தானே இருக்கிறது. இஸ்லாமிய அரசியல் அமுல் நடத்தப்படும் ஒரு நாட்டில் இத்தகைய நிலை ஏற்பட இடமில்லை.

ஐரோப்பிய ஜனநாயகத்தில் மட்டுமல்ல, உலகில் காணப்படும் இன்னும் எத்தனையோ அரசியற் திட்டங்களுக்கு இத்தகைய கட்டுப்பாடு இல்லை. அவை வெறும் மனித மூளைகளின் சொந்த ஆக்கங்கள். ஒரு நூறு ஆண்டுகள் கூட அவை நின்று பிடிக்கமுடியாமல் காலங்கடந்தவை என்று தள்ளப் படுவதற்கு இதுதான் மூல காரணம்.

முக்காலமும் உணர்ந்த சர்வஞானியான அல்லாஹ்வைத் தன் இறைவன் என்று மனப்பூர்வமாய் ஏற்ற முஸ்லிம், அல்லாஹ்வின் தீர்ப்புக்கு முதலிடம் கொடுக்கத் தயங்கமாட்டான். எல்லாம் அறிந்த பரிபூரணன் தந்த வழியை விட்டு, எதிர்காலம் பற்றி எதுவுமே தெரியாதவனும் அற்ப ஆயுள் கொண்டவனுமாகிய மனிதன் வகுத்த நிலையற்ற திட்டத்துக்கு எப்படி முதலிடம் கொடுக்க முடியும்?

ஆகவே இஸ்லாமிய ஜனநாயகம், இஸ்லாமிய சோஷலிஸம், இஸ்லாமியப் பொதுவுடமை என்றெல்லாம் கூறும் அரசியல் மேதாவிகள் தங்கள் கட்சிகளுக்கு இஸ்லாமிய அடைமொழி போட்டு

பொது மக்களை மயக்கத்தில் ஆழ்த்தாது இஸ்லாத்தை வம்புக்கு இழுக்காது, தங்கள் கட்சிகளை ஜனநாயகம் என்றோ சோஷலிஸம் என்றோ கம்யூனிஸம் என்றோ தைரியமாகக் கூறிக்கொண்டு, திரிவது ஆரோக்கியமாய் இருக்கும் என்று கூறிக் கொள்கிறோம்.

## சிந்தனைச் சுதந்திரம்

அரசியல் சுதந்திரம் நல்ல முறையில் அமுலாவதற்கு சிந்தனைச் சுதந்திரம் மிக அவசியம். ஒவ்வொருவரும் தாம் கொண்ட கருத்தை எவருடைய கட்டுப்பாடும் அடக்குமுறையும் இன்றி வெளியிட சுதந்திரம் பெறுதலையே இங்கு சிந்தனைச் சுதந்திரம் என்கின்றோம். இத்தகைய சிந்தனைதான் அறிவு வளர்ச்சிக்கும் ஆராய்ச்சிக்கும் நவீன கண்டுபிடிப்புக்களுக்கும் மனிதனை இட்டுச்செல்கின்றது. அதிகாரம், செல்வாக்கு போன்ற சக்திகளால் மட்டுப்படுத்தப்படாத சிந்தனையிலிருந்துதான் நேர்மையான அபிப்பிராயம் பிறக்கிறது. எனவே அபிப்பிராய சுதந்திரம் இருக்கும் இடத்தில், சிந்தனை சுதந்திரம் இருக்கும்.

மனதில் உதித்ததே சொல்லுருவில் நாவில் வரவேண்டும். இதுதான் தூய பண்பு. மனதில் ஒன்றும் நாவில் மற்றொன்றுமாயிருத்தல் தீயபண்பு. செயலில் வேறொன்றுமாயிருத்தல் கொடிய பண்பு! கருத்துச் சுதந்திரத்துக்கு தடையோ கட்டுப்பாடோ போடப்பட்டால், இறைவிசுவாசத்தில் தளரா உறுதியுடைய முஃமினைத் தவிர மற்றவர்கள், மேலே கூறப்பட்ட தீய பண்புக்கும் கொடிய பண்புக்கும் ஆளாகின்றனர்.

ஒவ்வொரு மனிதனும் தன் சொந்த அபிப்பிராயத்தை வெளியிட இஸ்லாம் அனுமதிக்கிறது. ஆனால் அவனுடைய இஸ்லாமிய வாழ்க்கைத் திட்டத்துக்கு மாறாக கருத்து வெளியிடுவது ஒரு குற்றமாகக் கருதப்படுகிறது. முஹம்மத் (ஸல்) அவர்களின் காலத்திலும் அப்பால் இஸ்லாமிய நாடுகளை நிர்வகித்து வந்த கலீபாக்களின் காலத்திலும் அபிப்பிராய வெளியீட்டுச் சுதந்திரம் மிகவும் புனிதமான நிலையில் பேணப்பட்டு வந்தது என்ற உண்மையைச் சரித்திரம் தெளிவுபடுத்துகின்றது. அங்கே ஒரு சாதாரண அடிமையின் அபிப்பிராயமேனும் அதிகாரத்தால் நசுக்கப்படவில்லை. இஸ்லாமிய ஆட்சிக் காலம் அபிப்பிராய சுதந்திரத்துக்கோர் பொற்காலமாகத் திகழ்ந்தது. அதற்கு காரணம், அல்குர்ஆன் சிந்தனையின்பாலும் ஆராய்ச்சியின்பாலும் வருமாறு மனித இனத்தைக் கூவியழைத்ததுதான். அல்குர்ஆனின் வசனங்களிற் சிலவற்றை இங்கே குறிப்பிடுகிறோம்:

أَفَلَا يَنظُرُونَ إِلَى الْإِبِلِ كَيْفَ خُلِقَتْ ﴿١٧﴾ وَإِلَى السَّمَاءِ كَيْفَ رُفِعَتْ ﴿١٨﴾ وَإِلَى الْجِبَالِ
كَيْفَ نُصِبَتْ ﴿١٩﴾ وَإِلَى الْأَرْضِ كَيْفَ سُطِحَتْ

''(தங்களிடமுள்ள) ஒட்டகை எப்படி படைக்கப்பட்டுள்ளது? வானம் எப்படி உயர்த்தப்பட்டுள்ளது? மலைகள் எவ்வாறு நிறுத்தப்பட்டுள்ளன. இந்தப்பூமி எவ்வாறு விரிக்கப்பட்டுள்ளது? என்று அவர்கள் கவனிப்பதில்லையா!'' (88:17-20)

وَمِنْ آيَاتِهِ الْجَوَارِ فِي الْبَحْرِ كَالْأَعْلَامِ ﴿٣٢﴾ إِن يَشَأْ يُسْكِنِ الرِّيحَ فَيَظْلَلْنَ رَوَاكِدَ

عَلَىٰ ظَهْرِهِۦٓ ۚ إِنَّ فِى ذَٰلِكَ لَءَايَـٰتٍ لِّكُلِّ صَبَّارٍ شَكُورٍ

*''சமுத்திரத்திற் செல்லும் மலைகளைப் போன்ற கப்பல்களும் அவனுடைய அத்தாட்சிகளே. அவன் விரும்பினால் காற்றை நிறுத்திவிடலாம். அப்பொழுது அவை கடலின் மேற்பரப்பில் அசையாமல் நின்றுவிடும். (கஷ்டங்களின் போது) பொறுமை செய்வோர், (மகிழ்ச்சியின்போது) நன்றி செலுத்துவோர் யாவருக்கும் நிச்சயமாக இதில் அத்தாட்சிகள் உண்டு.'' (42:32,33)*

وَءَايَةٌ لَّهُمُ ٱلْأَرْضُ ٱلْمَيْتَةُ أَحْيَيْنَـٰهَا وَأَخْرَجْنَا مِنْهَا حَبًّا فَمِنْهُ يَأْكُلُونَ

*''உயிரற்றுக் கிடக்கும் வரண்ட பூமியும் அவர்களுக்கு ஓர் அத்தாட்சியே. அதனை நாமே (மழை பொழியச் செய்து) உயிர்ப்பித்து அதிலிருந்து தானியங்களையும் வெளிப்படுத்தினோம். அதிலிருந்துதான் அவர்கள் புசிக்கின்றனர்.'' (36:33)*

سُبْحَـٰنَ ٱلَّذِى خَلَقَ ٱلْأَزْوَٰجَ كُلَّهَا مِمَّا تُنۢبِتُ ٱلْأَرْضُ وَمِنْ أَنفُسِهِمْ وَمِمَّا لَا يَعْلَمُونَ

*''பூமி முளைக்கச்செய்யும் யாவற்றிலும் அவர்களிலும் அவர்கள் அறியாத படைப்புக்களிலும் சோடிகளைப் படைத்த இறைவன் மிகவும் தூயவன்.'' (36:36)*

وَٱلشَّمْسُ تَجْرِى لِمُسْتَقَرٍّ لَّهَا ۚ ذَٰلِكَ تَقْدِيرُ ٱلْعَزِيزِ ٱلْعَلِيمِ ﴿٣٨﴾ وَٱلْقَمَرَ قَدَّرْنَـٰهُ
مَنَازِلَ حَتَّىٰ عَادَ كَٱلْعُرْجُونِ ٱلْقَدِيمِ ﴿٣٩﴾ لَا ٱلشَّمْسُ يَنۢبَغِى لَهَآ أَن تُدْرِكَ ٱلْقَمَرَ
وَلَا ٱلَّيْلُ سَابِقُ ٱلنَّهَارِ ۚ وَكُلٌّ فِى فَلَكٍ يَسْبَحُونَ ﴿٤٠﴾

''சூரியன் அதற்குரிய வரையறைக்குள் ஓடிக்கொண்டிருக்கிறது. அது யாவற்றையும் மிகைத்தோனும் நன்கு அறிந்தோனுமாகிய அல்லாஹ்வின் நியதி. பழைய பேரீச்சம் பாளைபோன்று காட்சியளிக்கும் வரை சந்திரனுக்குப் பல நிலைகளை நாமே நிர்ணயித்துள்ளோம். சூரியன் சந்திரனை அணுக முடியாது. இரவு பகலை முந்தவும் முடியாது ஒவ்வொன்றும் ஒவ்வொரு மண்டலத்தில் நீந்திக் கொண்டிருக்கின்றது.'' *(36:38-40)*

وَجَعَلْنَا مِنَ الْمَاءِ كُلَّ شَيْءٍ حَيٍّ أَفَلَا يُؤْمِنُونَ

''உயிருள்ள சகல பொருட்களையும் நீரிலிருந்தே படைத்தோம். இதை அவர்கள் நம்பவில்லையா?''
*(21:30)*

விஞ்ஞானம் வளர்ந்து சிறுபிள்ளைகளும் விஞ்ஞான அடிப்படையில் சிந்தித்துச் செயலாற்றும் இந்த இருபதாம் நூற்றூண்டில் இறங்கிய வசனங்களல்ல இவை. இற்றைக்குப் பதினான்கு நூற்றூண்டுகளுக்கு முன்னர் இறங்கியவை.

உலகில் உள்ள சகல பொருட்களும் இரட்டையாக-சோடியாக படைக்கப்பட்டுள்ளன என்ற உண்மையை இன்றைய விஞ்ஞானம் கண்டு கொண்டது. இந்த உண்மையை ஆயிரத்திநானூறு ஆண்டுகளுக்கு முன்பே அல்குர்ஆன் சொல்லிவைத்தது.

சிருஷ்டிகள் யாவும் நீரிலிருந்தே உருவாயின என்பதை இன்றைய அறிவுலகம் கூறுகிறது. இந்த உண்மையை அன்றே கூறிவைத்தது அல்குர்ஆன்.

கைரேகை ஆராய்ச்சியாளர்கள் ஒரு பெருவிர லின் ரேகைபோன்று மற்றொரு விரலின் ரேகை அமைவதில்லை என்ற உண்மையை இப்பொழுது கண்டுபிடித்துள்ளார்கள். இந்த உண்மையை அல் குர்ஆன் அன்றே கூறிவிட்டது:-

بَلَىٰ قَادِرِينَ عَلَىٰ أَن نُّسَوِّيَ بَنَانَهُ

''அவனுடைய விரல் நுனியைக்கூட (முன்னிருந்த படியே) சரிப்படுத்த நாம் சக்தியுடையோம்'' (75:4)

பதினான்கு நூற்றாண்டுகளாக மனிதகுலத்துக்கு அல்குர்ஆன் விடுக்கும் தூது இப்படித்தான் அமைந் திருக்கிறது. இதன் விளைவுதான் முஸ்லிம் உலகம் அன்று அறிவுக்கு உயிர்கொடுக்கத் துணிந்தது. சகல கலைகளிலும் தேர்ச்சி பெற்ற அறிஞர்கள், முஸ்லிம் உலகின் சகல பாகங்களிலும் காணப்பட்டார்கள். அழிந்துகொண்டிருந்த கிரேக்க நூல்களையும் பேணிக் காத்து, பல உலக மொழிகளில் மொழி பெயர்க் கவும் ஏற்பாடுகள் செய்யப்பட்டன. இன்றைய நவீன அறிவுலகின் தந்தையர் எனக் கணிக்கப்படும் முஸ்லிம் அறிஞர்களான, அபூ அலீ இப்னு ஸீனா (அவிசென்னா) அபுன்னஸ்ர் அல்fபாரூபீ (அல்ப ராபி) அப்துல்லாஹ் பின்றுஷ்த் அல் அந்தலுஸீ (எவின்ரோஸ்) அல் ஹக்கீம் அஜ்மல்கான் போன்ற மேதைகள் இஸ்லாமிய உலகின் பலகோணங்களி லும் தோற்றுவித்த ஊற்றுக்கண் அல்குர்ஆன் தான். இவர்களின் ஆராய்ச்சியின் பயனையும் கண்டுபிடிப் புக்களின் உண்மைகளையும் அடிப்படையாகக் கொண்டே நவீன விஞ்ஞான, மருத்துவக்கலைகள்

இன்று நாம் காணும் அளவு வளர்ச்சியடைந்தன. அப்படியானால், இன்றைய விஞ்ஞான வளர்ச்சிக்கு மூலகாரணம் அல்லது அடிப்படை அல்குர்ஆனே என்று கூறுவதில் தவறில்லையென்று நம்புகிறோம்.

ஆம், பகுத்தறிவுக்கும் ஆராய்ச்சிக்கும் தடை போடப்பட்டிருந்த ஐரோப்பாவில், பூமி உருண்டை யானதென்று நிரூபிக்க முனைந்த ஆராய்ச்சியாளரை, சமயத்துரோகியென்று மட்டந்தட்டிய மதகுருக்கள் ஆதிக்கம்பெற்றிருந்த ஐரோப்பாவில் ஆராய்ச்சியா ளர்களையும் விஞ்ஞானிகளையும் தோற்றுவிக்கும் அளவுக்கு அறிவை வளர்த்த பெருமை, அல்குர் ஆனுக்கும் இஸ்லாத்துக்குமே உரியது.

இதனாற்றான் சொல்கிறோம்; முஸ்லிம் உலகின் வீழ்ச்சி முஸ்லிம்களுக்கு மட்டுமல்ல முழுஉலகுக் குமே பெரும் வீழ்ச்சியாக அமைந்தது. விஞ்ஞான அறிவு வளர்ச்சியும் ஏறத்தாழ ஆயிரம் வருடங்க ளுக்குப் பின்தள்ளப்பட்டது.

அல்லாஹ்வின் அருள்மறையும் இஸ்லாமும் நம்மிடம்தான் இருக்கின்றன. ஆனால் அன்று ஐரோப்பிய மதகுருமார் செய்த தவறை இன்று நாம் செய்துகொண்டிருக்கிறோம். அன்று உலகம் உருண்டையென்று கூறிய அறிஞனை கிறிஸ்தவ மத பீடங்கள் தூற்றின. இன்று 'மனிதன் சந்திரமண் டலத்துக்குப் போய்விட்டான்' என்ற செய்தி உலகெல்லாம் பரவியபோது, இதை நம்பி உங்கள் ஈமானைப் பறிகொடுத்துவிடாதீர்கள்! காஃப் மலை யைத்தாண்ட அந்தக் காபிர்களால் முடியுமா?' என்று எமக்கு குத்பாப் பிரசாங்கம் நிகழ்த்தப்

பட்டது. இத்தகைய அறிவு சூன்யங்களும் நமது மிம்பர்களில் ஏறுவதுண்டு. இதனுற்ருன் இஸ்லாத்தை அதன் சுய உருவில் அறிந்துகொள்ள ஆர்வம் கொள்ளும் சோதரர்களுக்கு நாம் கூறுகிருேம். அரிய இஸ்லாமிய நூல்களைப்படித்து இஸ்லாத்தை அறிந்து கொள்ளுங்கள். முஸ்லிம்கள் எனப்படுவோரை பார்த்து இஸ்லாத்தை அறிந்து கொள்ள முனைந்தால்,. பலநூறு வகையான இஸ்லாத்தை கண்டு நீங்கள் மலைக்க நேரிடும். சில வேளை பரிசுத்த இஸ்லாத்தை நீங்கள் குறை கூறக்கூடும்.

சிந்தனைச் சுதந்திரத்தின் வளர்ச்சியை முஸ்லிம் நாடுகள் தமது முதலாம் நூற்ருண்டிலேயே கண்டு கொண்டன. உமவீய்யா அப்பாஸிய்யா ஆட்சி காலங்களிலும் இச்சுதந்திரம் பேணி வளர்க்கப் பட்டது. கலீபா ஹாறூன் அல்றஷீத், மஃமூன் போன்றவர்களின் காலத்தில், இவர்கள் கலீபாவாக ஆட்சி நடத்த தகுதியற்றவர்கள் என்று இவர்களின் அரச சபையிலேயே சிலர் வாதாடினர் என்ருல் அன்றைய கருத்து வெளியீட்டுச் சுதந்திர வளர்ச்சிக்கு வேறு உதாரணம் தேவையில்லைதானே.

பொதுசனத் தொடர்பு சாதனங்களான பத்திரிகை, வானொலி, தொலைக்காட்சி, சினிமா போன்ற நவீன சாதனங்களையும் கருத்து வெளியீட்டுக்குப் பயன்படுத்துவதை நாம் இன்று காண்கிருேம். கருத்துக்கள் கட்டுரைகள் மூலமாகவும், பேச்சுக்கள் மூலமாகவும் காட்சிகள் மூலமாகவும் வெளியிடப்படுகின்றன.

இங்கேயும் இரு அம்சங்கள் பேணப்படவேண்டும் என்பது இஸ்லாமிய போதனை. ஒன்று ஆதார பூர்வமான கருத்துக்களை வெளியிடல், மற்றது மற்றவரின் உரிமையைப் பறிக்காமல் பேணிக்கொள்ளல், இவற்றை இன்றைய உலகம் ''பத்திரிகா தர்மம்'' என்கின்றது.

பத்திரிகை வெளியிடுவதும் செய்திகளைப் பிரசுரிப்பதும் அவ்வளவு சிரமமான வேலைகளல்ல. ஆனால், அச்செய்திகள் எவ்வளவு தூரம் உண்மையானவை அவற்றில் எவ்வளவு நியாயமிருக்கின்றது. அவற்றைப் பிரசுரிப்பதால் விளையும் சாதக பாதங்கள் எப்படி அமையும் என்றெல்லாம் சிந்தனை செய்து நிதானமிழக்காமல் பிரசுரிப்பதுதான் சிரமம். இப்படிப் பேணுதலாக இத்தொழிலில் ஈடுபடுவோரே உண்மையான பத்திரிகையாளர்கள். இத்தகு உயர்பண்புகள் மாத்திரமிருந்தாலும் போதாது. தாம் எழுதும் செய்தி பற்றிய துறையில் போதிய ஈடுபாடும் தாம் எழுதும் மொழியில் நல்ல திறமையும் இருக்க வேண்டும்.

இத்தகைய தகைமைகள் அற்றவர்கள் பத்திரிகைத் துறையில் இறங்கினால், பத்திரிகைத் தொழிலே அதன் தூய்மையை இழக்க நேரிடலாம். தொழிலுக்காக அலைபவர்களும், ஒரு மொழியையேனும் பிழையின்றி எழுதவும் அழகாக வாசிக்கவும் தகுதியற்றவர்களும், ஆதாரமற்ற தெருப் பேச்சுக்களையெல்லாம் பெரிய செய்திகள் என்று பிரசுரிப்பவர்களும், ஆதாரமற்ற செய்திகளைப் பிரசுரித்து நிரபராதிகளிடம் பழிவாங்குவோரும், தங்கள் பழைய கோபங்களைத் தீர்த்துக்கொள்ள செய்

திகளைத் திரித்து வெளியிடுவோரும், சமூகத்தின் சுமுகமான நிலையைக் குழப்பத்தகு செய்திகளைப் பிரசுரிப்போரும், பல இனத்தவரிடையே மோதலை உண்டாக்கச் செய்தி வெளியிடுவோரும் அரசியல் அல்லது பொருளாதார இலாபங்களைக் குறுக்கு வழியிற் பெறுவதற்காக எழுதுவோரும் பிரசுரிப் போரும் பத்திரிகைத் தொழிலுக்கே துரோகம் செய்பவர்களாவார்கள்.

இத்தகைய அற்பர்களின் பொறுப்பற்ற செய்திகள், சமூகத்துக்கும் நாட்டுக்கும் பல வகையான இழப்புக்களை விளைவிக்கின்றன என்பதை இத்தகையோர் உணரவேண்டும். தடியெடுத்தவரெல்லாம் தம்புரான்களல்லர்; வாளெடுத்தவரெல்லாம் வீரருமல்லர்; பேனு பிடித்தவரெல்லாம் எழுத்தாளருமல்லர்; பத்திரிகையில் தொற்றிக் கொண்டவரெல்லாம் பத்திரிகையாளருமல்லர்; அல்லாஹ்வை அஞ்சித் தன் பேனுவைப் பயன்படுத்துபவனே முஸ்லிம் எழுத்தாளன். அல்லாஹ்வை அஞ்சிப் பத்திரிகைத் தொழில் செய்பவனே முஸ்லிம் பத்திரிகையாளன்.

இத்தகைய எழுத்தாளன் அவன் சொன்னுன் இவன் சொன்னுன் என்பதற்காக ஆதாரமற்ற செய்திகளைப் பிரசுரித்து குட்டையைக் குழப்பி மீன் பிடிக்கமாட்டான்; அம்மீன் அவனுக்கே பத்தியமாக இருக்காது. நிரபராதிகள் மீதும் சமூகத்துக்காகத் தம் கல்வியையும் செல்வங்களையும் பல்லாண்டு தியாகம் செய்து ஓட்டாண்டியான நிரபராதிகள் மீது சேற்றை வாரி இறைத்து இன்பங்காண்பவர்கள், தங்களைப் பத்திரிகையாளர் பட்டியலிற் சேர்த்துக் கொள்ள வெட்கப்பட வேண்டாமா!

எந்த மொழியையேனும் அந்த மொழிநடை தெரியாவிட்டால், தன் சொந்த நடையிலேனும் எழுதத் திராணியற்ற சிலர் தற்செயலாக ஒரு பத்திரிகையில் ஒட்டிக்கொண்டதும் தாம் பெரிய பத்திரிகையாளர் என்று எண்ணிக் கொண்டு தலைக் கனம் பிடித்து அலைகின்றனர். 'குளம் எத்தனை வண்ணானைக் கண்டது; வண்ணான் எத்தனை குளத்தைக் கண்டான்' என்பதற்கொப்ப இவர்களைப் போன்ற எத்தனையோ எழுத்தாளர்களை அப்பத்திரிகை கண்டதுண்டு ஆனால் இவர்கள் எத்தனை...... என்பது தான் இல்லை. இவர்கள் கண்ட பத்திரிகை உலகமே அந்த நிருபர் பதவிதான். இக்கையாட்களுக்குப் பத்திரிகையாளர் என்றால், பல்லாண்டு காலம் இத்தொழிலை மிக உயர்ந்த பண்பாட்டின் அடிப்படையிலே செய்து, பத்திரிகைகளையும் நடத்திய பன்மொழி வல்லுனர்க்கு என்ன பெயர் சொல்வது என்பதுதான் பிரச்சினை.

இத்தகைய மேதாவிகளுக்கு நாம் நினைவூட்ட விரும்புவது, அல்லாஹ்வின் வசனத்தைத்தான். இவர்களுக்கு ஈமான் இருந்தால், இவ்வசனம் இவர்களை வழிநடத்தட்டும்:–
''விசுவாசிகளே, ஒரு தீயவன் உங்களிடம் ஒரு செய்தியைக் கொண்டு வந்தால், அதனைத் தீர விசாரணை செய்து கொள்ளுங்கள். (இன்றேல் அவனுடைய சொல்லை நம்பி) அறியாமை காரணமாக நீங்கள் சில மக்களுக்குத் தீங்கிழைத்துவிட்டு, அப்பால் நீங்கள் செய்தவற்றுக்காக நீங்களே கைசேதப்பட வேண்டிவரும்.'' (49:6)

இவர்களுக்கு நாம் கொடுப்பதற்கு எமது கைச்சரக்கு ஒன்றுமில்லை. ஆகையால், இதோ அல்லாஹ்

வின் அன்பு வார்த்தையொன்றை இவர்கள் முன் வைக்கிறோம்; இனிமேலாவது பத்திரிகையாளர்கள் இம்மை மறுமை இரண்டிலும் செம்மையருள் பெறு வார்களாக:

يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُوا۟ تُوبُوٓا۟ إِلَى ٱللَّهِ تَوْبَةً نَّصُوحًا عَسَىٰ رَبُّكُمْ
أَن يُكَفِّرَ عَنكُمْ سَيِّـَٔاتِكُمْ

''விசுவாசம் கொண்டவர்களே, நீங்கள் தூய மனத் துடன் உபதேசிக்கப்பட்ட பாபமன்னிப்புக் கோரி அல்லாஹ்வின்பால் மீளுங்கள். உங்கள் இறைவன், உங்கள் தீய செயல்களை உங்களை விட்டுப் போக்கி, உங்களைச் சுவனங்களில் பிரவேசிக்கச் செய்யக் கூடும்.'' (66:8)

## பொருளியற் சுதந்திரம்

பொருட்கள் யாவும் அல்லாஹ்வினால் கொடுக் கப் படுகின்றனவேயன்றி மனிதனின் முயற்சியால் மாத்திரம் அவன் தேடிக் கொண்டவையல்ல என்பது இஸ்லாமியப் போதனை என்பதை முன் னொரு சந்தர்ப்பத்தில் நாம் குறிப்பிட்டோம். ஆகவே மனிதன் தனக்குக் கிடைத்துள்ள திறமை களை அல்லாஹ்வின் கட்டளைக்கு இணங்கப் பயன் படுத்திப் பொருளீட்டுவதிலும் ஈட்டிய பொருளை அவ்வாறே நிர்வகித்து அதை அபிவிருத்தி செய்வ திலும் அவ்வாறே அவற்றைச் செலவு செய்வதிலும் சுதந்திரமாகச் செயல்பட வாய்ப்பளிக்கப்பட வேண் டும். இந்நிலையே பொருளாதார சுதந்திரம் எனப் படுகிறது.

இம்முறைக்கு மாறாக அல்லாஹ்வின் கட்டளைகளைப் பேணாமல், மக்கள் நலன் கருதி இஸ்லாம் விதித்துள்ள கட்டுப்பாடுகளைப் பேணாமல் எப்படியும் பணம் தேடலாம் என்ற நிலைதான் பொருளாதார சுதந்திரம் என்று கருத்தல்ல.

எனவே, வட்டி, சூது, களவு, ஏமாற்றல், மோசடி, கள்ளக் கடத்தல் போன்ற வழிகளில் பொருளீட்டல், தமக்கும் பிறர்க்கும் துரோகம் செய்தலாகும். இவற்றுக்கெல்லாம் கதவுகள் திறந்திருந்தாற்றான் பொருளாதார சுதந்திரம் உண்டு என்று எவரும் தப்புக் கணக்கிடக் கூடாது. தம் மனம் போனவாறு பணம் திரட்ட இடம் கிடைக்காத போது, கள்ளக் கடத்தல் செய்யலாம் என்று எவரும் தீர்ப்புக் கூறவும் முடியாது [இஸ்லாமிய வங்கிமுறை இல்லாத படியால் வட்டிக்குக் கொடுக்கலாம் வட்டியெடுக்கலாம் என்ற கருத்தும் பிழையானதே. ஒவ்வொரு விஷயத்திலும் நம்மிடையே இஸ்லாமிய முறை இல்லையே நாமென்ன செய்யலாம் என்று கூறிக் கொண்டு பிழையான வழிகளைச் சரியாக்க முடியாது. இஸ்லாமிய முறைகளை அமைத்து முஸ்லிம்களை மாத்திரமல்ல, மனித இனத்தையே சீரான நேர்மையான பொருளாதாரத் திட்டங்களுக்கு இட்டுச்செல்ல வேண்டும். முயற்சி செய்தால் அல்லாஹ் அருள் செய்வான்.]

وَالَّذِينَ جَاهَدُوا فِينَا لَنَهْدِيَنَّهُمْ سُبُلَنَا وَإِنَّ اللَّهَ لَمَعَ الْمُحْسِنِينَ

''எமது நேரான வழியில் முயற்சி செய்வோரை நிச்சயமாக நமது நேரான வழியில் நடத்துவோம். நிச்சயமாக அல்லாஹ் நன்மை செய்வோருடன் இருக்கிறான்.'' *(29:69)*

ஒருவர் நேர்மையாகப் பொருளீட்டி அவற்றை எவர்க்கும் கொடுக்காமல் தாமும் தம் பிள்ளைகளுமே உண்டு குடித்து வாழ்ந்தாலும், ஒருவகையில் இது வும் ஓரளவு நல்லது தான். ஏனெனில் இத்தகை யோரால் மற்றவர்க்கோ உலகுக்கோ பாரமில்லை. இதுவும் மனித சமூகத்துக்கு ஓரளவு உதவிதான். ஆனால் இதைவிட மிக மேலான முறையைத் தான் இஸ்லாம் கூறுகிறது. நேர்மையாய் பொருளீட்டி நேரான வழிகளில் செலவிட்டு, மற்றவர்க்கும் மனித குலத்துக்கும் பயன் செய்து, இம்மையிலும் மறுமையிலும் இன்பம் பெறவேண்டும் என்பதே இஸ்லாம் கூறும் வழி.

ஒருவர், ஆர்வத்தோடும் ஊக்கத்தோடும் பாடு பட்டுத் தேடி வைத்த பொருளை அபகரித்து எல் லோர்க்கும் சமமாகப் பங்கிடவேண்டும் என்ற வாதத்தையும் இஸ்லாம் கூறவில்லை. ஏனெனில் இவ்வாதத்தால் விளையும் நன்மையை விட தீமையே அதிகம். இந்தக் கொள்கையைப் பின்பற்றிய நாடு களிலேயே சில வருடங்களுக்குள் இது அஜீரணமாகி விட்டதை நாம் காண்கிறோம்.

வீண் விரயம் செய்யாதீர்கள் என்று கூறும் போது எவரும் எம்மீது பாய்ந்து விழவேண்டிய தில்லை. உண்ணவேண்டியது தான்; பருகவேண்டி யது தான்; இதை எவரும் மறுக்கவில்லை. இதற் காக எவரும் பொறுமைப் படவுமில்லை. ஆனால் உங்கள் செல்வங்களை மிகக் கீழ்த்தரமாக காட்சிக்கு வைக்காதீர்கள் என்றுதான் சொல்கிறோம். இது சுவர்க்கலோகமல்ல. இது மண்ணுலகு. உங்களைப் போல எல்லோருமில்லை. உங்கள் அடுத்த வீட்டிலே

பட்டினிப் பட்டாளம் இருக்கக் கூடும். கொஞ்சம் எட்டிப் பாருங்கள். அவர்களுக்கும் உதவுவதற்காக உங்கள் ஆடம்பரச் செலவுகளை சுருக்குங்கள். இது தான் இஸ்லாம். இதை நாம் சொல்லும் போது குட்டையைக் குழப்பும் கட்டைப் புத்திகளின் ஷைத் தான் தலைதூக்கி விடுகிறது. இந்தச் செய்தியையே புரிந்துகொள்ள முடியாத சில அப்பாவிகளை முடுக்கி விட்டுப் பழைய ஆத்திரங்களைத் தீர்த்துக் கொள் ளலாம் என்று கனவு காண்கின்றனர்.

ஊரைக் குழப்பும் இத்தீய சக்திகள், குடிகார ரையும் காபிர்களையும் கூலிக்குப் பிடிக்கவும் வெட் கப்பட மாட்டார்கள். கூட்டிக் கொடுக்கும் கள்ளு முட்டிகளைத் தூண்டிவிட்டு, அப்பாவிகளையும் அல் லாஹ்வின் பாதையிலேயே தம்மை அர்ப்பணம் செய்த அறிஞர்களையும் வசைபாடி, நூல் வெளி யிடுவார்கள். தம் சொந்த நலன்களைப் பேணிக் கொள்ள, எந்த அற்ப வேலையிலும் இறங்கும் இவர் கள், எப்பொழுதுமே எல்லாரையுமே ஏமாற்ற முடி யாது என்பது வெளிச்சமாகி விட்டது.

இவர்களுக்கு நாம் கொடுக்கும் காணிக்கை இதுதான்:-
நன்கு மனதிற் கொண்டு செய்த அட்டகாசங்களை எண்ணி, மனம் உருகி அல்லாஹ்விடம் பாபமன் னிப்புக் கோருங்கள். காலம் கடந்தபின், நிரந்தரக் கவலை வந்து வாட்ட ஆரம்பிக்கு முன்னதாக. இனிமேலும் காலம் தாழ்த்துவது புத்திசாலித்தன மாகாது.

إِنَّ بَطْشَ رَبِّكَ لَشَدِيدٌ

''நிச்சயமாக உமது இறைவனின் பிடி மிகவும் கடுமையானது.'' என அல்லாஹ் கூறுகிறான்.

(85:12)

## மத சுதந்திரம்

மதம் என்பது நம்பிக்கையின் அடிப்படையில் நடைமுறைக்கு வரும் விஷயம். இதை வற்புறுத்தலாலோ அடக்கு முறையாலோ எவர் மீதும் திணிக்க முடியாது, அப்படித்திணித்தாலும் அது சமயம் பார்த்து மறைந்துவிடும். இவ்வடிப்படை உண்மையை நிலை நாட்டுவதற்காக, இஸ்லாம் மூன்று அடிப்படை அம்சங்களைக் கடைப் பிடிக்கின்றது. அவையாவன:-

(1) வற்புறுத்தாமை. இஸ்லாம் தன் போதனையை என்றும் எவரிடமும் வற்புறுத்தியதில்லை. இது பற்றி அல்குர்ஆன் பின்வருமாறு கூறுகிறது.

لَآ إِكْرَاهَ فِى ٱلدِّينِ قَد تَّبَيَّنَ ٱلرُّشْدُ مِنَ ٱلْغَىِّ

''இஸ்லாம் மார்க்கத்தில் வற்புறுத்தல் இல்லை. தீய வழியிலிருந்து நேர்வழி தெளிவாகி விட்டது''

(2:256)

இஸ்லாத்தை மக்களுக்குப் போதிக்க வந்த தூதருக்கே அல்லாஹ் பின்வருமாறு கூறுகின்றான்:-

فَإِنَّمَا عَلَيْكَ ٱلْبَلَٰغُ ٱلْمُبِينُ.

''மிகத்தெளிவாக (சன்மார்க்கத்தை) எத்திவைப்பதுதான் உமது கடமை'' ஏனெனில் இஸ்லாம், குலபலத்தாலோ ஆட்பலத்தாலோ பணத்தின் பலத்தாலோ என்றும் நிலைநாட்டப்படவில்லை. இவற்

றில் இஸ்லாம் நம்பிக்கை வைக்கவும் இல்லை. அதன் அறிவு பூர்வமான உண்மையினாலேயே அது உலகில் நிலைத்து நிற்கிறது. இதைத்தான் அல்குர்ஆன் கூறுகிறது:

وَقُلْ جَآءَ ٱلْحَقُّ وَزَهَقَ ٱلْبَٰطِلُ ۚ إِنَّ ٱلْبَٰطِلَ كَانَ زَهُوقًا

''சத்தியம் வந்துவிட்டது; அசத்தியம் ஒழிந்துவிட்டது. நிச்சயம் அசத்தியம் ஒழிந்தே தீரும் எனக் கூறுவீராக.'' (17:81)

உண்மைதான் அல்லாஹ்வின் தூதர் முஹம்மத் (ஸல்) அவர்கள் உண்மையான வாழ்க்கை நெறியை எடுத்துக்கூறி, அழிவின் விளிம்பில் இருந்தவர்களைக் காப்பாற்ற முனைந்தபோது, அறியாமையின் பிறப்பிடமாய்க் காட்சியளித்த மக்கள் நபி அவர்களையும் அவர்களை நம்பிய ஏழை மக்களையும் சித்திரவதை செய்தார்கள். இறை தூதரைப் பைத்தியம் என்று தூற்றினார்கள். கல்லடித்துத் துரத்தினார்கள். அல்லாஹ்வின் தூதர் தரையில் சிரசை வைத்துத் தொழுது கொண்டிருந்தபோது, அழுகிய ஒட்டகைக் குடலை அள்ளி அவர்களின் மேனியிலே போட்டார்கள். இதைக் கண்ட அருமை மகள் பாத்திமா (றளி) அவர்கள் அழுதுகொண்டே ஓடி வந்து, அவ்வழுகிய குடலை அகற்றிவைத்தார்கள். அப்பொழுதும் அல்லாஹ்வின் தூதர் ஆத்திரம் கொள்ளவில்லை. அவர்களையும் அவர்களைச் சேர்ந்தவர்களையும் தனியாக ஒதுக்கி, உணவு, தண்ணீர் முதலியவற்றைத் தடைசெய்தார்கள். மக்காவை விட்டு வெளியேறி மதீனாவில் குடியேறும் வரை துன்பம் ஓயவில்லை.

இவ்வளவு அட்டகாசம் செய்த மக்கள், படு தோல்வியுற்று, அல்லாஹ்வின் தூதரின் காலடியில் சரணடைந்த போதும் இவர்கள் மீது இஸ்லாம் திணிக்கப்படவில்லை. இவர்கள் பழிவாங்கப்படவு மில்லை. அட்டகாசங்களின் உறைவிடமான இவர்கள் யாவரும் எவ்வித நிபந்தனையும் இல்லாமல் மன்னிக்கப்பட்டார்கள். இது கற்பனையல்ல; இதுதான் சரித்திரம். முஸ்லிம்களின் பரம வைரிகளாலும் மறைக்க முடியாத உண்மை.

மதீனாவின் சுற்று வட்டாரத்தில் வாழ்ந்த யூதர்கள், அல்லாஹ்வின் தூதருக்கும் அவருடைய இஸ்லாமியப் போதனைக்கும் எதிராகச் சதிவேலை களில் ஈடுபட்டார்கள். இவற்றையெல்லாம் பொறு மையோடு சகித்துவந்த இறைதூதரைக் கொலை செய்யத் திட்டம் தீட்டினார்கள். நஞ்சூட்டிச் சோதனை செய்தார்கள். மக்காக் குறைஷியருடன் சேர்ந்து நாசவேலைகளில் மும்முரமாக இறங்கினார் கள். எல்லாவற்றையும் பொறுமையோடு ஏற்று வந்த இறைதூதரின் பொறுமை மிக அற்புதமாயி ருந்தது. அப்பொழுதும் இவர்கள் மீது எவ்வித அடக்குமுறையும் பிரயோகிக்கப்படவில்லை. யூதரின் கீழ்த்தரமான சதிவேலைகள் எல்லை மீறியபோது, தவிர்க்க முடியாத கட்டத்தில், அவர்கள் மதீனா விலிருந்து வெளியேற்றப்பட்டனர். ஆனால், இஸ் லாத்தை ஏற்குமாறு வற்புறுத்தப்படவில்லை.

முஸ்லிம்கள் தங்கள் மத சுதந்திரத்தைப் பாது காக்க கடும் போராட்டங்களை நடத்தியதாக சரித் திரம் கூறுகிறது. இப்போராட்டங்கள் யாவும் மனிதனுடைய மத சுதந்திரத்தை நிலைநாட்டவே

நடைபெற்றன. இதனுற்ருன் முஸ்லிம்கள் தற்காப்பு யுத்தங்களிலேயே ஈடுபட்டார்கள் என்று கூறுகிறேம். இவர்கள் வெற்றிகொண்ட நாடுகளில் மிக இலகுவாக இஸ்லாத்தைப் பரப்பியிருக்கலாம். இதற்காக தங்கள் ஆட்சியதிகாரங்களையும் பொருளாதார வளங்களையும் பயன் படுத்தியிருக்கலாம். அப்படிச் செய்யவில்லை; அப்படிச் செய்ய அவர்களை இஸ்லாம் அனுமதிக்கவில்லை.

பாலஸ்தீனம் அன்று முஸ்லிம்களால் வெற்றி கொள்ளப்பட்டது. அங்கே வாழ்ந்த யூத கிறிஸ்தவ மக்களுக்கு, இஸ்லாமிய சாம்ராச்சியத்தின் கலீபா உமர் (றளி) அவர்கள் விடுத்த பிரகடனத்தில் இவ்வாறு அறிவித்தார்கள்:

''விசுவாசிகளின் தலைவன் உமர், (றளி) ஈலியா மக்களுக்கு இத்தால் அபயம் அளிக்கிருர். அவர்களின் உயிர்களும், உடைமைகளும், தேவாலயங்களும், சிலுவைகளும் பாதுகாக்கப்படும். அவர்கள் எச்சமயத்தின் மீதும் வற்புறுத்தப்பட மாட்டார்கள். எவர்களும் தீங்கிழைக்கப்பட மாட்டார்கள்.''

அப்படியானல், அன்று யூத கிறிஸ்தவப் பிரதேசங்களாயிருந்த அறபு நாடுகள் யாவுமே எப்படி இஸ்லாமிய நாடுகளாயின? என்ருெரு கேள்வி எழுகிறதல்லவா? ஆம், கேட்கப்படவேண்டிய கேள்விதான். அன்றைய முஸ்லிம் ஆட்சியாளரின் அருங்குணங்களும் இஸ்லாத்தின் உன்னதத் தன்மையும், அன்றைய மக்களைக் கவர்ந்தன. இவ்வளவு அழகிய வாழ்க்கை முறையைப் பின்பற்ருமலிருப்பது மடமை, பிடிவாதம் என்றுணர்ந்த மக்கள் கூட்டங்

கூட்டமாக இஸ்லாத்தைத் தழுவினார்கள். தம்மைக் கசக்கிப் பிழிந்து சுகவாழ்வு நடத்திய அரசர்களையும் அதிகாரிகளையும் துரத்திவிட்டு நேர்மையும் பண்பும் மிக்கவராய்த் திகழ்ந்த முஸ்லிம் கலீபாக்கள் தங்கள் பிரதேசத்தையும் ஆளவேண்டுமென்று வேண்டுகோள் விடுத்தார்கள். இதுதான் அநேக நாடுகளில் அதிவிரைவாக இஸ்லாம் பரவியதற்குக் காரணமாகியது.

பாலஸ்த்தீனப் பகுதியிலும், சிரியா, லெபனான், போன்ற தேசங்களிலும் உள்ள முஸ்லிம்கள், அன்று இஸ்லாத்தின் மகிமையை உணர்ந்து முஸ்லிம்களான யூத கிறிஸ்தவரின் சந்ததியினரே தவிர அங்கே வந்தேறு குடிகளல்லர். ஆகையால், அங்கிருந்து யூதர்களும் கிறிஸ்தவர்களும் நாடுகடத்தப்பட்டு அவர்களின் தேசங்களை எங்கிருந்தோ வந்த முஸ்லிம்கள் கைப்பற்றிக் கொண்டார்கள் என்று எவரும் விளங்கிக்கொள்ள வேண்டாம். இதை ஏன் குறிப்பிடுகிறோம் என்றால், இப்படித் தவறான ஒரு பிரசாரம், இன்றைய சந்ததியினருக்குத் திட்டமிட்டு ஊட்டப்படுகின்றது.

உண்மையான இஸ்லாமிய மறுமலர்ச்சியைக் கண்டு சகிக்க முடியாத சில தீய சக்திகள், பாலஸ்தீனப் பகுதியில் மிக அந்நியோன்யமாய் வாழ்ந்த கிறிஸ்தவர்களையும் முஸ்லிம்களையும் மோதவிட்டும் நாசவேலைகளுக்குத் தூபமிட்டும் வந்தனர். இத்தீய செயலில் தீவிரமாக ஈடுபடுவது கையும் மெய்யுமாக நிரூபிக்கப்பட்டதனால், மனித சமுதாயத்தின் நலன் கருதி ஒருசில விஷமிகளான யூதர்கள் நாடு கடத்தப்பட்டார்கள். இவர்கள் சென்று

ஐரோப்பிய யூதர்களோடு இணைந்து கொண்டார்கள். அன்று முதல் இன்று வரை இத்தகைய நாச வேலைகளிலேயே சிந்திக்கலாயினர்.

இதுவன்றி உலகில் வாழ்ந்த சகல யூதர்களும் தீயவர்கள். இன்றுவரை அவர்கள் யூதர்களாகவே இருக்கின்றனர்; எல்லோரும் முஸ்லிம்களால் நாடு கடத்தப்பட்டார்கள் என்று எவரும் எண்ணவேண்டாம். உண்மையென்னவெனில், யூதர்களில் அதிகமானோர் ஈஸா (அலை) அவர்களின் காலத்திலும் பின்னும் கிறிஸ்தவர்களாயினர். அப்பால் இஸ்லாம் தோன்றியபோது அனேக கிறிஸ்தவர்களும் யூதர்களும் இஸ்லாமிய வாழ்க்கையை விரும்பியேற்றனர். அவர்களே இன்று அப்பிரதேசங்களில் முஸ்லிம்களாக வாழ்கின்றனர். உண்மையில் அங்கே நிகழ்ந்தது கொள்கை மாற்றமே. இனமாற்றமல்ல. அறபி நாடுகளில் இப்பொழுதும் யூதப் பழங்குடிகள் பல யூதர்களாகவே வாழ்கின்றனர். இவர்களும் அறபிகளே. இவர்களுக்கும் அங்குள்ள முஸ்லிம் பெரும்பான்மையினருக்கும் இடையில் எவ்விதப் போராட்டமும் இல்லை. மிக அன்பாகவே வாழ்கின்றனர். ஆனால், நாடு பிடிக்க வந்த ஐரோப்பிய யூதர்களின் குள்ள நரிப்போக்கே இன்றைய பாலஸ்தீனப் பிரச்சினைக்குக் காரணம்.

## (2) சுதந்திரமான கருத்துப் பரிமாறல்

பகுத்தறிவு பூர்வமாக, அறிவு ஆராய்ச்சி அடிப்படையில் கௌரவமாக தர்க்கித்துக் கருத்துக்களை பரிமாறவே இஸ்லாம் கூறுகிறது. இவ்விஷயத்தில் மிகச் சிறந்த உபதேசங்களை அல்குர்ஆன் கூறுகிறது.

ٱدْعُ إِلَىٰ سَبِيلِ رَبِّكَ بِٱلْحِكْمَةِ وَٱلْمَوْعِظَةِ ٱلْحَسَنَةِ وَجَٰدِلْهُم بِٱلَّتِى هِىَ أَحْسَنُ

*''அறிவின் அடிப்படையிலும் நல்லுபதேசத்தைக் கொண்டும் உமதிறைவன் பாதையின்பால் அழைப்பீராக. அவர்களுடன் மிக அழகான முறையில் தர்க்கம் புரிவீராக.'' (16:125)*

وَلَا تُجَٰدِلُوٓا۟ أَهْلَ ٱلْكِتَٰبِ إِلَّا بِٱلَّتِى هِىَ أَحْسَنُ إِلَّا ٱلَّذِينَ ظَلَمُوا۟ مِنْهُمْ

*''வேதக்காரர்களோடு நீங்கள் தர்க்கிக்க நேரிட்டால், மிக அழகிய முறையிலன்றி தர்க்கிக்க வேண்டாம். அவர்களில் வரம்பு மீறியவர்களுடைய விஷயத்திலன்றி.'' (29:46)*

قُلْ هَاتُوا۟ بُرْهَٰنَكُمْ إِن كُنتُمْ صَٰدِقِينَ

*''நீங்கள் உண்மையாளர்களாயின் உங்கள் சாட்சியாளர்களைக் கொண்டு வாருங்கள் என்று கூறுவீராக'' (2:111), (27:64).*

فَأْتُوا۟ بِكِتَٰبِكُمْ إِن كُنتُمْ صَٰدِقِينَ

*''நீங்கள் சொல்வது உண்மையாயின் உங்கள் வேத நூலைக் கொண்டு வாருங்கள் பார்ப்போம்.'' (37:157)*

قُلْ فَأْتُوا۟ بِٱلتَّوْرَىٰةِ فَٱتْلُوهَآ إِن كُنتُمْ صَٰدِقِينَ

*''நீங்கள் உண்மை சொல்பவர்களாயின், உங்கள் தவ்றாத் வேதத்தைக் கொண்டு வந்து ஓதிக்காட்டுங்கள் பார்ப்போம்; என்று கூறுவீராக.'' (3:93)*

முஸ்லிம் கலீபாக்களின் காலத்தில், சகல சமயத் தலைவர்களையும் கூட்டி, அவரவர் சமயத்தை தர்க்க ரீதியாக விளக்க, கருத்தரங்குகள் நடத்தப் பட்டுள்ளன. சில கலீபாக்கள் தாமே இத்தகைய கருத்துப் பரிமாறல்களில் கலந்து கொண்டுள்ளார்கள்.

சமயங்களைத் தூற்றுவதற்கு இஸ்லாம் அனுமதி வழங்கவில்லை. உண்மைகளை உணர்த்துவதற்காக உரையாடவோ சீர் தூக்கிப் பார்க்கவோ விளக்கவோ முடியும். தன்னிடம் அறிவுபூர்வமான விஞ்ஞான ரீதியான உண்மைகள் நிறைய இருக்கின்றபடியால் மட்டரகமான வழிகளைப் பின்பற்ற இஸ்லாம் இடம்கொடுக்கவில்லை. இஸ்லாமியப் போதனைகளின்படி அதை நம்பும் மக்கள் வாழ்ந்து காட்டுவதே சிறந்த பிரசாரம். பணத்தின் பலத்தாலோ ஆட்சிப் பலத்தாலோ உண்மையை நிலைநாட்டத் தேவையில்லை. ஏனெனில் உண்மை தானாகவே நிற்கக் கூடியது.

சமயங்களையோ மக்களையோ கொள்கைகளையோ பண்பற்ற முறையில் தாக்குவது, மேன் மக்களின் செயலல்ல. இதைச் செய்யாதீர்கள். இதனால், பண்பு குறைந்தவர்கள் உங்களையும் கேவலமான முறையில் தாக்கக் கூடிய நிலை ஏற்படலாம் என்று அல்குர்ஆன் ஒழுக்கம் சொல்லித் தருகின்றது.

وَلَا تَسُبُّوا الَّذِينَ يَدْعُونَ مِن دُونِ اللَّهِ فَيَسُبُّوا اللَّهَ عَدْوًا بِغَيْرِ عِلْمٍ

''அல்லாஹ்ற அல்லாதவற்றை அழைக்கின்றவர்களை நீங்கள் தூற்ருதீர்கள். அப்படித் தூற்றினல், அவர்கள் அறியாமையின் காரணமாக வரம்பு மீறி அல்லாஹ்வைத் தூற்றக் கூடும்.'' (6:108)

இந்த உண்மையான பண்புகளை மீறி, வரம்பு கடந்து, பிற சமயங்களின் சட்டங்களைக் குறை கூறுவதில் சில பேச்சாளர்களும் எழுத்தாளர்களும் இறங்கிவிடுகின்றனர். உண்மையை உணரமுடியாமலோ, உணர மனமில்லாமலோ இப்படிச் செய்கின்றனர். இத்தகைய கருத்துக்கள் நம் காதுகளுக்கும் எட்டாமலில்லை. நம் கண்களிலும் படத்தான் செய்கின்றன. இத்தகைய கிணற்றுத் தவளைகளின் செயல்களுக்கெல்லாம் உடனுக்குடன் பதில் கூறிக் கொண்டிருக்க, இதே வேலையைப் பார்க்க எவரும் ஓய்ந்து உட்கார்ந்து கொண்டிருக்கவில்லை. ஆனல் மேலே கூறிய அல்குர்ஆன் வசனத்தை உணர்ந்து கொள்ளுமாறு இவர்களை வேண்டுகிறோம். கண்ணாடி வீட்டிலிருந்துகொண்டு பிறர்மீது கல்லெறிவது புத்திசாலித்தனமாகாது.

## (3) உள்ளங்களோடு உரையாடல்

உண்மையான மத நம்பிக்கை உள்ளத்தில் உறுதியாக நிலைபெருத வரை அவ்வுள்ளத்தைச் சுமந்த சடலம் அந்நம்பிக்கையின் அடிப்படையில் இயங்காது. இந்த உண்மையை எவரும் மறுக்க முடியாது. இந்த உறுதி நிலையை அடையாத சமய வாதிகளால் எவருக்கும் எவ்வித நன்மையும் ஏற்பட முடியாது. மாருக தீமையே ஏற்படும். ஏனெனில் இவர்கள் <u>சமயவாதிகள்!</u> — சந்தர்ப்பவாதிகள்! இவர்களுக்கு எக்கொள்கையிலும் பற்றில்லை.

அறிவற்ற சமய நம்பிக்கை மனிதனுக்கு நிலையற்ற போக்கைத்தான் கொடுக்கும். நிலையான ஒரு வாழ்வைக் கொடுக்காது. தெளிவான அறிவும் நம்பிக்கையும் பெறாத மனிதன், சேற்றில் ஊன்றிய கோல் போன்றுதான் இருக்க முடியும். இத்தகைய பேர்வழிகளை நமது அன்றாட வாழ்வில் கண்டு கொண்டிருக்கிறோம். ஒரு சன்மார்க்க இயக்கத்தில் இரவு பகலாக ஈடுபட்டுக் கொண்டிருந்த ஒருவர், சில மாதங்களுக்குப் பின், தொழுகையைக்கூட நிறைவேற்றாமல், தமது சகல வேளைகளிலும் ஒரு குறிப்பிட்ட அறபி வசனத்தை உச்சாடனம் செய்து திரிவதைக் கண்டோம். இதுபற்றி அவரிடம் அணுகி விசாரித்த போது, 'நான் இஸ்லாத்தில் ஓர் உயர்ந்த படித்தரத்துக்கு வந்துவிட்டேன். தொழுகையெல்லாம் ஆரம்பப் படித்தரத்தில் உள்ளவர்களுடைய வணக்கம். அந்தத் தரத்தை நான் கடந்து விட்டேன்' என்று பதிலளித்தார்.

ஆஹா, அற்புதமாயிருக்கிறதே! இந்த ஞானத்தை எங்கிருந்து பெற்றீர்கள்? என்று கேட்டோம். இதெல்லாம் சாதாரண அறிவல்ல; மிக உயர்ந்த அறிவு; இதை எங்கள் வாப்பாவிடம் கற்றுக் கொண்டோம் என்றார். உங்கள் வாப்பா அவ்வளவு பெரிய அறிவாளியா அவர்தான் வபாத்தாகி நீண்டகாலம் ஆகிவிட்டதே! என்றோம். நீங்கள் எங்க சொந்த வாப்பாவைச் சொல்கிறீர்கள். அவர்கள் வபாத்தாகி நீண்டகாலம் தான். அந்த வாப்பா அல்ல. இது பக்தாதிலிருந்து வந்த வாப்பா; எங்கள் ஞானவாப்பா. என்றார் அவர். அப்படியா இவர் வந்த வாப்பாவா. சரி இந்த வாப்பா மேலானவரா; அல்லாஹ்வின்

தூதர் முஹம்மத் (ஸல்) அவர்கள் மேலானவர்களா? அல்லாஹ்வின் தூதர், மரணக் காய்ச்சலினுல் பீடித்திருந்த போதும் தோழர்களின் தோளில் தொங்கிக் கொண்டு சென்று தொழுகையை நிறைவேற்றியதாகத்தானே படிக்கிறேம். அந்த றஸூலைப் பின்பற்றுவதா; இந்த வாப்பாவைப் பின்பற்றுவதா? என்றேம். இவருக்கு கோபம் வந்துவிட்டது. உங்களுடன் பேச முடியாது நீங்கள் வஹ்ஹாபிகள் என்று சொல்லிவிட்டு எம்மைவிட்டு நகர்ந்து விட்டார்.

பார்த்தீர்களா, இந்த வஹ்ஹாபிப் பூச்சாண்டியின் சக்தியை. எப்படியான செப்படிவித்தை செய்தாலும் அதைத் தட்டிக்கேட்க எவரும் முன்வந்தால் அவரைத் தட்டிக்கழிக்க எவருக்கும் உதவும் அருமருந்தாகத் திகழ்கிறது இந்த வஹ்ஹாபிப் பூச்சாண்டி! இத்தகைய மோட்சங் காட்டும் ஆசாமிகளின் மனம் என்ன சொல்கிறது தெரியுமா இந்த மக்களை ஏய்த்து எம் காரியங்களைச் சாதிக்க எமக்குத் துணைசெய்யும் வஹ்ஹாபிப் பூச்சாண்டியே நீ வாழ்க! என்கிறது.

மக்களே, கொஞ்சம் யோசனை செய்வோம். காலேஜுப் படிப்புக்களை முடித்துப் பட்டங்கள் பெற்று உயர் பதவிகளை வகிக்கும் இந்த மனிதனின் மூளையை மூடிவிடக் கூடிய சக்தி இந்தப் பூச்சாண்டிக்கு இருக்கிறதென்றல், அறிவு சூன்யங்களான பொதுமக்களை இந்தப் பூச்சாண்டி என்னபாடு படுத்தும் என்பதைச் சொல்லவா வேண்டும்!

இதனுல்தான், அறிவுபூர்வமான ஈமான் மாத்திரமே மனிதனை நேர்வழி நடத்த முடியும். சன்

மார்க்க அறிவற்ற பரம்பரை முஸ்லிமை விட நேற்றுவரை வேறு கொள்கையோடிருந்து, இன்று உண்மையை உணர்ந்து நம்பி, முஸ்லிமாக வாழ்ப வர் மேலானர். இஸ்லாம் பிறப்புரிமையல்ல; இது ஒரு கொள்கையோடிணைந்த வாழ்க்கைத் திட்டம் இதை மனப்பூர்வமாய் ஏற்று நம்பி இதன்படி வாழ்பவனே முஸ்லிம். இதை மறுப்பவனே காபிர். இரண்டும் கெட்டவனே முனாபிக், நயவஞ்சகன்; மனித இனத்துக்கே துரோகி. நான்காம் ஒரு மனி தன் இஸ்லாத்தின் அகராதியில் இல்லை. முதலாம் மனிதன் உண்மையை ஏற்பவன். இரண்டாமவன் உண்மையை மறுப்பவன் மூன்றுமவன் கழுத்தை அறுப்பவன். ஆகையால்தான் இந்த பசுத்தோல் போர்திய புலிகளைப் பற்றிக் கவனமாக இருக்க வேண்டும். இவர்களின் நாடகங்களையெல்லாம் இங்கே குறிப்பிட்டால் ஏடு பெருத்துவிடும். தேவை யான போது, ஆதார பூர்வமாக எடுத்துக்கூற ஒரு தனியேடு திறக்கவும், அப்பாவி ஏழை மக்க ளைக் காப்பாற்றவும் தயங்கமாட்டோம்.

உண்மையான மார்க்க அறிவின் அவசியத்தை நாம் மேலே கூறிய நிகழ்ச்சி நமக்குத் தெளிவாக உணர்த்துகிறது. இந்த அறிவு மந்த நிலைதான், ஏனைய கல்வித்துறையில் உயர்நிலையில் உள்ள பல ரையும், வழிகெடுக்கும் தீய சக்திகளுக்கு இரை யாக்கிவிட்டது, உண்மையான இஸ்லாத்தை உணர முடியாமல், கண்ணைக் கட்டிக் காட்டில் விடப்பட் டவனைப் போன்று காட்சியளிக்கின்றனர். கைக் கெட்டிய மரத்தைக் கட்டிப்பிடித்துக் கொண்டு இதுதான் உலகிலேயே சிறந்த மரம் என்று நம் பிக் கொள்கின்றனர்.

قُلْ هَلْ يَسْتَوِي الَّذِينَ يَعْلَمُونَ وَالَّذِينَ لَا يَعْلَمُونَ إِنَّمَا يَتَذَكَّرُ أُولُوا الْأَلْبَابِ

''கல்வியுடையோரும் கல்லாதோரும் சமமாவார்களா? என்று கேட்பீராக, அறிவுடையோரே இதனைக் கொண்டு நல்லுபதேசம் பெறுவார்கள்'' **(39:9)**

அறிவு அடிப்படையில் சிந்தனை செய்து உணராமல் தம் மூதாதையரைக் கண்மூடித்தனமாகப் பின்பற்றலை அல்குர்ஆன் கண்டிக்கிறது.

وَإِذَا قِيلَ لَهُمُ اتَّبِعُوا مَا أَنزَلَ اللَّهُ قَالُوا بَلْ نَتَّبِعُ مَا أَلْفَيْنَا عَلَيْهِ آبَاءَنَا ۗ أَوَلَوْ كَانَ آبَاؤُهُمْ لَا يَعْقِلُونَ شَيْئًا وَلَا يَهْتَدُونَ

''அல்லாஹ் அருளியவற்றைப் பின்பற்றுங்கள் என்று அவர்களுக்குச் சொல்லப்பட்டால், முடியாது நாம் எம் தந்தையரும் மூதாதையரும் செய்து வந்ததைச் செய்வோம் என்பார்கள். இம்மூதாதையர் ஒன்றையும் அறியாவர்களாகவும் நேர்வழி பெறாதவர்களாகவும் இருந்தாலுமா (அவர்களைப் பின்பற்றுவார்கள்)'' (2:170)

அறிவுலக மேதைகளில் ஒருவரின் கருத்தைக் கூறி இத்தலைப்பை முடிக்கின்றோம்:

''அறிவும் நேர்மையும் அல்லாத குருட்டுப் பின்பற்றல், உண்மையை மறுக்கும் காபிர்களின் தன்மையாகும். தன் சமயத்தையும் தன்னையும் நன்கு அறிந்துகொண்ட பின்னரே ஒருவர் பூரண விசுவாசியாக முடியும். இஸ்லாமியரால் பெற்று வளர்க்கப்பட்டாலும், இஸ்லாம் ஈமான் பற்றிய போதிய விளக்கம் அவருக்கு இல்லாவிட்டால் அவர் உண்மை

விசுவாசியாக மாட்டார். ஏனெனில், ஐயறிவு மாத்திரம் கொண்ட பிராணி போன்று மனிதன் இழுபட வேண்டுமென்பது இஸ்லாத்தின் நோக்க மல்ல. அவனுடைய புத்தியும் ஆத்மாவும் அறிவின் வெளிச்சத்தில் வளர்ந்து, நன்மை தருகின்றபடி யால் நல்லது செய்தும், தீமை தருகின்றபடியால் தீயதை விட்டும் விலகி வாழ்தலே விசுவாசத்திஞல் எதிர்பார்க்கப்படுகிறது.''

அன்பு, வாசகர்களே இதுவரை நாம் கூறிய வற்றில் உங்களுக்குப் பயனுள்ள பல கருத்துக்களை முன்வைத்தோம் என்று நினைக்கிறோம். இவற்றை அமைதியாக ஆலோசனை செய்வீர்கள் என்பது எமது நம்பிக்கை. இதஞல் இறைவன் எமக்கு அருள் சொரிய வேண்டும் என்பது எமது பிரார்த்தனை.

وَءَاخِرُ دَعْوَىٰهُمْ أَنِ ٱلْحَمْدُ لِلَّهِ رَبِّ ٱلْعَٰلَمِينَ

''சர்வலோக இரட்சகனும் அல்லாஹ்வுக்கே புகழ னைத்தும்.''

رقم الإيداع ٠٧٦٩/ ١٦

من مطبوعات وزارة الشئون الإسلامية والأوقاف والدعوة والإرشاد
بالتعاون مع مؤسسة إبراهيم بن عبد العزيز البراهيم الخيرية

# حقوق الإنسان في الإسلام

تأليف
الشيخ عبد الرحمن محمد روح الحق

باللغـــة التاميليـــة

أشرفت وكالة شؤون المطبوعات والنشر بالوزارة على إصداره
١٤١٦هـ

المملكة العربية السعودية
وزارة الشؤون الإسلامية والأوقاف والدعوة والإرشاد
المكتب التعاوني للدعوة والإرشاد
وتوعية الجاليات بغرب الديرة

# இஸ்லாம் தந்த மனித உரிமைகள்

ஆசிரியர் அஷ்ஷைக் அப்துர்ரஹ்மான்

حقوق الإنسان في الإسلام

التاميلية

مع تحيات المكتب التعاوني للدعوة والإرشاد وتوعية الجاليات بغرب الديرة
هاتف : ٤٣٩١٩٤٢ ناسوخ : ٤٣٩١٨٥١ ص. ب : ١٥٤٤٨٨ الرياض : ١١٧٣٦
حساب رقم : ٩٢٤٠/٤ شركة الراجحي المصرفية فرع سلطانة